கழக வெளியீடு, ௧0௬௮

# நாள், கிழமை, திங்கள்

# இதழ் விளக்க வரிசை



ஆசிரியர்

சு அ இராமசாமிப் புலவர்

(கருப்பக்கிளர்)



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி - 6. சென்னை - 1.

1961

# பதிப்புரை

பரந்துபட்ட நம்முலகம் விரைந்து செல்லும் ஊர்தி வாய்ப்புக்களாலும், தொலைபேசி, வானொலி முதலிய கருவிச் சிறப்புக்களாலும் ஒருவரோடொருவர் நெருங்கி அளவளாவுதற்கு ஏற்புடைத்தாய்ச் சுருங்கித் தோன்றுகின்றது. இதுபோல் செய்தித் தாள்களால் ஆங்காங்குள்ள மாந்தர் கருத்துக்கள், அவ்வப்போது நிகழும் உலக நிகழ்ச்சிகள், தொழிற்றுறை நுட்பங்கள், அவற்றின் ஆக்கப்பாடுகள், வாணிக முறைகள், அரசியல் நலங்கள், கலைத் தெளிவுகள், கற்றுவல்லார் திறல்கள், கல்லூரி பல்கலைக் கழகங்களின் தோற்ற நடைமுறை முதலிய மாண்புகள், ஆராய்ச்சி யுண்மைகள், இயல் இசை நாடகப் பயிற்சி நூல்கள், நூல் வெளியீட்டு விளக்கங்கள், வினு விடைகள், ஐயத்தெளிவுகள், மொழிபெயர்ப்புச் செய்திகள், பழம் பாடல்கள் பற்றிய ஆராய்ச்சி விளக்கவுரைகள், பருவகால விளக்கங்கள் முதலிய பலவும் இருந்த விடத்திருந்தே நேரிற்காண்பது போன்று குறைந்த செலவில் எல்லாரும் எளிதாகவும் இனிதாகவும் அறிந்துகொள்ள முடிகின்றது.

அத்தகைய செய்தித்தாள்கள் 'நாளிதழ்கள், கிழமைக்கு மும்முறை, கிழமைக்கு இருமுறை இதழ்கள், கிழமை இதழ்கள், திங்களுக்கு மும்முறை இருமுறை இதழ்கள், திங்களிதழ்கள், மூன்று திங்களுக்கு ஒருமுறை இதழ்கள் என எட்டுப் பகுப்புக்களாக நடந்து வருகின்றன. இவ்விதழ் விளக்க வரிசையில் அத்தகைய செய்தித்தாள்கள் நம் தமிழகத்தும், தமிழ் வழங்கும் யாழ்ப்பாணம், கொழும்பு, மலேயா, கிழக்காப்பிரிக்கா முதலிய வெளிநாடுகளிலும் பலவிதழ்கள் தோன்றிச் சில பலகாலங்கள் நடந்து நின்றனவும், கருதிய நோக்கம் முற்றுப் பெற்று நின்றனவும், காரணத்தால் நின்றவும் ஆகப்பலவாகும். அவற்றுள் சில அம்மழம் பெயருடன் மீண்டும் நிகழ்ந்து வருகின்றன.

இவையனைத்தையும் மேலே குறித்த முறைப்படி கால முறையாகத் தொகுத்து அவ்வச் செய்தித்தாள்களின் நோக்கம் ஆசிரியர் பெயர் முதலியவற்றுடன் கிடைத்த வரையும் கழகத்தார் தொகுத்துவைத்துள்ளவற்றை இவ் 'இதழ் விளக்க வரிசை'யுள் சஅக இதழ்கள் குறிக்கப் பட்டுள்ளன. நனிமிக முயன்று கிடைத்தமட்டுந் தொகுக்கப் பட்டுள்ளனவே இவைகள். இன்னும் பல இதழ்கள் முன்னாள் நிகழ்ந்து நின்றவை இருத்தல்கூடும். அவைகளை வைத்திருக்கும் மெய்யன்பர்கள் அவைகளை முழுவது மாகவோ அல்லது ஒரிதழாகவோ கொடுத்துதவின் நூற் காட்சியில் வைப்பதற்குப் பெரிதும் பயனுடையதாக விருக்கும். அவர்கட்குக் கழகத்தார் என்றும் நன்றிமிகு கடப்பாடுடையராவர். இவ்விளக்கங்களைக் கழகத்தார் விருப்பப்படி திரு. சு. அ. இராமசாமிப் புலவரவர்கள் எழுதியுள்ளனர். அவர்களுக்குக் கழகத்தார் நன்றி உரித்தாகுக.

தமிழ்வளம் பேணும் மெய்யன்பர்களும், படிப்பகம், நூலகம், கல்லூரி முதலிய பொது நிலையங்களும், ஆராய்ச்சி மேற்கொள்ளும் ஆசிரியர்களும் இந்நூலினைப் பெற்றுப் பழமை பேணி இன்புறுவார்களாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# முன்னுரை

ஒருவர் அறிந்த செய்தியை மற்றொருவர் அறிந்துகொள்வதற்கு அஞ்சல் முறை முதன்முதலிற் பயன்பட்டது. பலர் அறிந்துகொள்வதற்கு அஞ்சல்முறை பயன்படாது. செய்தியை மற்றவர்கட்கு அறிவித்து அதனை நாடெங்கும் பரப்புதற்கு இதழ்கள் வெளிப்படலாயின. முதற்கண் மேனாட்டில் தோன்றிய இதழ்வெளியீட்டுமுறை பிறகு நம் நாட்டிலும் பரவியது. கிறித்துவர்கள் முதலில் தங்களுடைய சமயத்தை நம்நாட்டில் பரப்புதற்கு இதழ்களைப் பயன்படுத்தலாயினர். இதழ்கள் வளர்ச்சியடைந்த இந்நாளில், பயிர்த்தொழில், வணிகம், படத்தொழில் முதலிய சிறந்த துறைகட்கு இதழ்கள் துணைபுரிகின்றன. மேனாட்டில் ஒவ்வொரு துறைக்கும் ஒவ்வோர் இதழ் உண்டு. நம் நாட்டில் அந்நிலை இப்பொழுதுதான் சிறிது சிறிதாக ஏற்பட்டுவருகிறது. முதற்கண் ஆண்டுமலர்கள் என்னும் பெயரோடு ஆண்டுக்கொருமுறை வெளியிடுஞ் சிறப்பிதழ்கள் தோன்றின. பிறகு திங்கள்தோறும் வெளியிடுந் திங்களிதழ்கள், கிழமைதோறும் வெளியிடும் கிழமையிதழ்கள், நாள்தோறும் வெளியிடும் நாளிதழ்கள் ஆகியன வளர்ச்சியடைந்து இதழ்வெளியீட்டுத் தொழில் இன்றுள்ள நிலைமையை அடைந்தது. எல்லாத் தொழில்களும் வளர்ச்சியடைதலைப் போலவே இதழ்வெளியீட்டுத் தொழிலும் வளர்ச்சியை அடைந்தது.

ஆண்டு மலர்கள், திங்களிதழ்கள் ஆகியன கட்டுரைகளையுங் கதைகளையும் வெளியிட்டன. கிழமையிதழ்கள் சில கட்டுரைகளோடு நாட்டில் நிகழும் சிறப்பான நிகழ்ச்சிகளையும் வெளியிடலாயின. நாளிதழ்களோ நாட்டிலும், உலகிலும் அன்றன்று நிகழும் நிகழ்ச்சிகளை வெளியிடுவனவாயின. இதழ் வளர்ச்சி நம்நாட்டில் இன்னும் வளர்ச்சியடையாத குழந்தைப் பருவத்திலேயே இருக்கிறது.

மக்களின் அறிவு வளர்ச்சிக்கும் நாட்டு முன்னேற்றத்திற்கும் இதழ்கள் துணைபுரிவனவாயின. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்துதான் நம் நாட்டில் இதழ்கள் வெளியிடுதல் வளர்ச்சியடையத் தொடங்கியது. ஒவ்வோர் இதழும் முதற்கண் சமயவளர்ச்சி, மொழிவளர்ச்சி, நாட்டு மக்களின் முன்னேற்றம் முதலிய ஒவ்வோர் அடிப்படையான காரணத்தைக் கொண்டுதான் தோன்றுகின்றன. மக்களின் மனத்தைக் கவரத் தக்க முறையில் வெளிவந்த இதழ்கள் மக்களின் உதவியால் சில ஆண்டுகள் நீடித்தன. மக்களின் மதிப்பைப் பெறாத இதழ்களோ மிகு விரைவில் மறையலாயின. ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளில் நம்நாட்டில் தோன்றி மறைந்துள்ள இதழ்கள் பல. இதழ்களை வெளிப்படுத்தத் தொடங்கியோர் பெரும்பாலும் பொருளிழப்பையே அடைந்தனர். இதழ்களால் பொருள் வருவாயை அடைந்தவர்கள் மிகச் சிலரே. ஆயினும் பலர் இதழ்களை வெளிப்படுத்தப் பின்வாங்காமல் முன்வந்தனர். இதற்குக் காரணம் இதழ்களை வெளியிடுதலால் மனமகிழ்ச்சியும் உள்ளக்கிளர்ச்சியும் ஏற்பட்டமையேயாம்.

இதழ்களை வெளிப்படுத்தத் தொடங்கிய ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணத்தை அடிப்படையாகக் கொண்டனர். நம் நாட்டில் மொழிவளர்ச்சி, சமயவளர்ச்சி, நாட்டு விடுதலை ஆகியவைகளைக் காரணமாகக் கொண்டனர். இது நாளடைவில் கட்சி வளர்ச்சி முதலியவற்றிற்கும் பரவின. சிலர் பொருளழிவு முதலியவைகளைப் பொருட்படுத்தாமல் சில ஆண்டுகள் இதழ்களை வெளியிட்டனர். சிலரோ சில இதழ்களோடு நின்றுவிட்டனர். ஒருவர் வைத்து நடத்திய ஓர் இதழின் பெயர் அவ்விதழ் நின்று போனபிறகு மற்றவர்களாலும் வைத்து வெளியிடப்பட்டன. இவ்வாறு முன்பெயரைக்கொண்ட இதழ்கள் சில.

இதழ்கள் நம்நாட்டில் எவ்வளவு தோன்றிமறைந்தன என்பதை எல்லோரும் உணர்ந்தால் அவைகள் மொழி வளர்ச்சி, நாட்டு முன்னேற்றம் முதலியவைகட்குப் பயன்

பட்டதன்மையை ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம். இவ்வாறு வெளிவந்து மறைந்துபோன இதழ்களைக் குறித்து ஒரு நூலை வெளியிட எண்ணிய கழகவாட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் பலவிடங்களினும் முயன்று பழைய இதழ்கள் பலவற்றை அரிதின் முயன்று தொகுத்தார்கள். இவர்கள் தமையனார் காலஞ்சென்ற கழக அமைச்சர் வ. திருவரங்கம் பிள்ளையவர்கள் பலவிடங்களினும் முயன்று தொகுத்துவைத்திருந்த பல பழைய இதழ்களும் இதற்குத் துணைபுரிந்தன. அவர்கள் முயற்சியே இவ்வரிசை நூலுக்குக் காரணமாக இருந்தபடியால் அவர்கட்குத் தமிழ் உலகம் நன்றி செலுத்துங் கடப்பாடுடையது. வெளிவந்ததாகப் பெயரால்மட்டும் அறியநின்ற சில இதழ்கள் பார்வைக்குக்கூட அகப்படாத வகையில் மறைந்துபோயின. பார்வைக் ககப்பட்ட இதழ்களின் பெயர்கள் நோக்கங்கள் முதலியவைகளைப் பலரும் உணர்ந்துகொள்ளுதற்காகவே இவ்விதழ் விளக்க வரிசை வெளிவருகிறது. இதனில் குறிப்பிடப்பட்டுள்ள இதழ்கள் முற்றும் ஆயிரத்தெட்டாவது நூல்வெளியீட்டு விழாவையொட்டி நடந்த நூற்காட்சியுள் பழைய இதழ்களின் காட்சிக்கு வைக்கப்பட்டவைகள். இவ்விதழ்களைப் பாதுகாத்து வைத்திருந்து உதவிய அன்பர்கள் பலருக்கும் கழகத்தின் நன்றி உரியதாகிறது. இவ்வரிசையில் நாளிதழ்கள் ஏழு, கிழமைக்கு முப்முறை இதழ்கள் இரண்டு, கிழமைக்கு இருமுறை இதழ்கள் மூன்று, கிழமை இதழ்கள் எழுபத்து ஒன்று, திங்களுக்கு மும்முறை இதழ் ஒன்று, திங்களுக்கு இருமுறை இதழ்கள் நாற்பத்திரண்டு, திங்கள் இதழ்கள் முன்னூற்று நாற்பத்தாறு, மூன்று திங்களுக்கு ஒருமுறை ஒன்பது ஆக நானூற்று எண்பத்து ஒன்று. இதழ்களின் பெயர்கள் நோக்கங்கள் முதலியவைகள் தரப்பட்டுள்ளன. பழைய இதழ்களைப்பற்றிய செய்திகளை உணர்ந்து கொள்ள எண்ணுபவர்கட்கு இவ்வரிசை துணைபுரிவதாகும்.

சென்னை-1.
15-11-61

சு. அ. இராமசாமிப் புலவர்

# உள்ளுறை

# நாள் கிழமை திங்கள்
# இதழ் விளக்க வரிசை



**பகுதி க**

## நாளிதழ்கள்
## (1904—1942)

### 1. சுதேச பரிபாலினி - 1904

*பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 22. நெ. 193 அட்சய ஆண்டு ஆவணித் திங்கள் 22உ (1926 செப்டம்பர் 7)*

*ஆசிரியர் பெயர் தெரியவில்லை. பி. இ. முதலியாரால் இரங்கோன் சுதேச பரிபாலினி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*அளவு: 50 × 32. செ. மீ., பக்கங்கள் 8. தனியிதழ் விலை அணு ஒன்று. ஆண்டுக் கையொப்பம் உள்நாட்டுக்கு ரூ. 18. வெளிநாட்டுக்கு ரூ. 22.*

*இரங்கோனில் இருந்து வெளியாகிய இவ்விதழ் பர்மிய நாட்டு நன்மையையே பெரிதாகநாடி அதற்குத் தக்கவாறு உள்நாட்டுச் செய்திகளையும் பிறநாட்டுச் செய்திகளையும் வெளியிட்டுக் கொண்டிருந்தது.* (க)

### 2. திராவிடன் - 1916

*பார்வைக்குக் கிடைத்தது: மலர் 14. இதழ் 106. சுக்கில ஆண்டு ஆடித் திங்கள் ௩௧உ (15-8-1929)*

ஆசிரியர்: சனக சங்கரகண்ணப்பர். சென்னை திராவிடன் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளிப்படுத்தப்பட்டது.

அளவு: 50 × 34 செ. மீ., பக்கங்கள் 8. தனியிதழ் அரையணா. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் பதினொன்று.

இவ்விதழ் ஆதிதிராவிடர்களுடைய முன்னேற்றத்திற்கு உழைப்பதாகச் சொல்லிக்கொண்டு வெளியாகியது. ஆயினும் அத்துறையில் அதிகம் உழைக்காமல் நாட்டில் நாத்திகம் பரவுதற்கே மிகுதியும் உழைத்துப் பிறகு நலிந்து மறைந்துபோயது. இவ்விதழில் நாளிதழுக்குரிய நாட்டு நடப்புச் செய்திகள்யாவும் உடனுக்குடன் வெளியாயின. (உ)

## 3. தமிழ்நாடு - 1927

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி-1 இதழ் 32. (20-5-1927)

ஆசிரியர்: ஜி. இராமச்சந்திர நாயுடு. சென்னைத் தமிழ்நாடு பவர் அச்சுக்கூடத்தில் ஆசிரியரால் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

அளவு: 56 × 43½ செ. மீ, பக்கங்கள் 8. ஓராண்டுக்கு ரூபாய் இருபது. தனியிதழ் விலை அணா ஒன்று.

இவ்விதழ் நாட்டு விடுதலையை நோக்கமாகக்கொண்டு உழைத்தது. உலகில் நிகழ்ந்த நாட்டுச் செய்திகளை வெளியிட்டதோடு அரசியல் தொடர்பான செய்திகளையும் வெளியிட்டு அரசியல் தலைவர்களின் பேச்சு செயல் முதலிவைகளையும் நாட்டு மக்கள் நன்கு உணர்ந்து கொள்ளுமாறு செய்தது. தமிழ்நாட்டு மக்கள் விரும்பிய செய்திகள் யாவும் இவ்விதழில் வெளியாயின. முன்னாளில் வெளியிடப்பட்ட இப் பெயர் கொண்ட இதழ் மறைந்துவிட இந்நாளிலும் இப்பெயருடன் திரு. கருமுத்து தியாகராச செட்டியாரவர்களை ஆசிரியராகக் கொண்டு மதுரையிலும் சென்னையிலும் வேறோர் இதழ் நடைபெறுகின்றது. (ந)

## 4. வீரகேசரி - 1930

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 4. இதழ் 233 பவ ஆண்டு சித்திரைத் திங்கள் (12-5-1934)

ஆசிரியர்: எச். நெல்லையா. கொழும்பு வீரகேசரி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 56 × 46 செ. மீ., பக்கங்கள் 8. ஓராண்டுக்கு ரூபா பதினைந்து. தனியிதழ் ஐந்து சதம்.

கொழும்பு நகரில் இருந்து வெளி வந்த இந்நாளிதழ் இந்திய நாட்டுச் செய்திகளையும் பிறநாட்டுச் செய்திகளையும் உடனுக்குடன் பெற்று வெளியிட்டு நாட்டு மக்களுக்கு அறிவிப்பதை நோக்கமாகக் கொண்டு வெளியாகியது. செய்திகள் எல்லாம் பெரும்பாலும் விளக்கமாகவே இதனில் வெளியாயின. (ச)

## 5. சுதர்மம் - 1933

பார்வைக்குக் கிடைத்தது: 20-4-33 ஆந் தேதி இதழ்.

ஆசிரியர்: ஆ. சத்திவேற் பிள்ளை. செட்டி நாட்டில் உள்ள கண்டனூரில் ஆசிரியரால் தமது சண்முக விலாச அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 25 × 19 செ. மீ.. பக்கங்கள் 4. ஆண்டுக்கு ரூபா பன்னிரண்டு. தனியிதழ் காலணா

அந்நாளில் நாத்திக இதழ்கள் பல தோன்றி நாட்டிலே கும்மாளமிட்டன. கடவுட் கொள்கையை வளர்ப்பதற்கு இதழ் ஒன்றும் இல்லையே என்று வருந்திய தன வணிக அன்பர்கள் பலர் ஒன்று சேர்ந்து முயற்சி செய்து இவ் விதழை வெளியிடச் செய்தனர். இவ்விதழ் கடவுட் கொள்கையை வளர்ப்பதையே நோக்கமாகக்கொண்டு நின்று சில காலம் பணி செய்து மறைந்து போயது. ஆசிரியர் பாரத மித்திரன் என்னும் கிழமையிதழையுங் குடந்தையினின்று முதலிலும் பிறகு கண்டனூரினின்றும் நடத்தினர். (ரு)

## 6. செயபாரதி—1936

பார்வைக்குக் கிடைத்தது: 1936 ஆம் ஆண்டின் ஆண்டு மலர்.

ஆசிரியர்: எஸ். வேங்கட்டராமன். சென்னை செய பாரதி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 43 × 27 செ. மீ., பக்கங்கள் 96: ஆண்டுக் கையொப்பம்: தெரியவில்லை.

இவ்விதழ் நாட்டு விடுதலையைப் பெறுதற்கு உழைத்த இதழ்களில் ஒன்று. ஆண்டு மலர்தான் 96 பக்கங்களை யுடையது. பொதுவான நாளிதழ் 8 பக்கங்களில் அரையணா விலையில் வெளிவந்ததாக எண்ணம். இதனுடைய தொண்டு அக்காலத்தில் மக்கள் எல்லோராலும் நன்கு பாராட்டப் பெற்றது. (சா)

## 7. தந்தி - 1942

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 333. சுபானு ஆண்டு புரட்டாசித் திங்கள். உசஉ (10-10-1943)

ஆசிரியர்: சி. பா. ஆதித்தன். ஆசிரியரால் மதுரையில் ஆதித்தன் பவர் அச்சகத்தில் நாட்டுத் தாளில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 41 × 21. செ. மீ., பக்கங்கள் 4. தனியிதழ் விலை அணா ஒன்று.

தந்தி என்று தாங்கிய தன்னுடைய பெயருக் கேற்பச் செய்திகளை யெல்லாம் மற்ற இதழ்களுக்கு முன்னதாகவும் விரைவாகவும் இது வெளியிட்டுக் கொண்டிருந்தது. செய்திகளை முன்னதாக வெளியிடுவதுதான் இதனுடைய கொள்கையாக இருந்ததே அன்றி, வேறு எவ்விதக் கட்சிக் கொள்கையும் இதனிடம் அமைந்திருந்ததாகக் கண்டுபிடிக்க முடியவில்லை.

# பகுதி உ

## கிழமைக்கு மும்முறை இதழ்கள்
(1930)

### 1. சுதந்திரச் சங்கு - 1930

*பார்வைக்குக் கிடைத்தது: 25-5-1933 ஆம் நாள் இதழ்.*

*ஆசிரியர்: சங்குசுப்பிரமணியன். திருவல்லிக்கேணியில் ஓரனர் அச்சகத்தில் ஆசிரியரால் அச்சிடப்பெற்றது.*

*அளவு: 25 × 19 செ. மீ., பக்கங்கள் 8. தனியிதழ் காலணா.*

*நாடு ஆங்கிலேயரிடம் இருந்து விடுதலை பெறுதற்கு உழைக்கவேண்டும் என்னும் நோக்கத்தோடு ஆசிரியர் இவ்விதழை நடத்தினர். அதற்குத் தக்கவாறு கட்டுரைகளும் நிறைய வெளியிட்டுத் தக்க பணிபுரிந்தார். கிழமைக்கு இருமுறையாகவும் இவ்விதழ் சிலகாலம் வெளிவந்து, பெயருக்கேற்ப உழைத்த இதழ்களில் ஒன்று இது. (அ)*

### 2. காந்தி - 1930

*பார்வைக்குக் கிடைத்தது: மலர் 2. இதழ் 49. (7-11-1931)*

*ஆசிரியர்: டி. எஸ். சொக்கலிங்கம். சென்னை இலட்சுமி அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.*

*அளவு: 24 × 16. செ. மீ., பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் ரூபா நாலரை. தனியிதழ் காலணா.*

*திங்கட்கிழமை, வியாழக்கிழமை, சனிக்கிழமை ஆகிய மூன்று நாட்களிலும் இவ்விதழ் வெளியாகியது. இதில் அரசியல் கட்டுரைகளும், வேடிக்கைப் படங்களும் மக்கள் விரும்பும் வகையில் எழுதி வெளியிடப்பட்டன. பிறகு இவ்விதழ் திங்களுக்கு இருமுறையாக வெளிவந்தது. (சு)*

## பகுதி ௩

# கிழமைக்கு இருமுறை இதழ்கள்
(1886—1931)

## 1. சர்வசனநேசன் - 1886

*பார்வைக்குக் கிடைத்தது: பழைய இதழ்களில் ஒன்று; திங்கள் நாள் முதலியன அச்சிடப்பட்ட பகுதி இதழில் காணப்படவில்லை.*

*ஆசிரியர்: ஏ. எல். சி. மொகையதீன். கொழும்பில் இருந்து வெளியாகியது.*

*அளவு: 34 × 22 செ. மீ., ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.*

எல்லா மக்களுக்கும் அறிவுண்டாகத் தக்க நல்ல கட்டுரைகளை வெளியிட்டு மக்களுக்கு நன்மையுண்டாக்க வேண்டுமென்பதனையே அடிப்படை நோக்கமாகக் கொண்டது இவ்விதழ். சாதி சமயக் குறிப்புகளைப் புலப்படுத்தாமல் நடத்தவேண்டுமென ஆசிரியர் எண்ணியபோதிலும் இதழில் அக் குறிப்புக்களைக் காட்டாமல் விடவில்லை. (௧௦)

## 2. இந்துசாதனம் - 1889

*பார்வைக்குக் கிடைத்தது: பழைய இதழ்களில் ஒன்று; நாள் திங்கள் முதலியன அறிய முடியவில்லை.*

*ஆசிரியர்: எஸ். ஆட்சிலிங்கம். ஆசிரியரால் யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபையின் சார்பாக வெளியிடப்பட்டது.*

*அளவு: 58 × 44 செ. மீ., தனியிதழின் விலை ஐந்து சதம்.*

சைவ சமயக் கல்வி வளர்ச்சியின் பொருட்டு உழைத்தது. தமிழ் மக்களின் அரசியல் விடுதலை நாடியும் தன்னால்

இயன்ற அளவு உழைத்தது. இவ்விதழ் ஐம்பத்துநான்கு ஆண்டுகளுக்கு மேலாகத் தொண்டுசெய்து யாழ்ப்பாணத்துத் தமிழ் மக்களிடையே விழிப்புண்டாக்கித் தனிச் சிறப்புப் பெற்று விளங்கியது. (கக)

## 3. சுதந்தர வீரன் - 1931

*பார்வைக்குக் கிடைத்தது: மலர்-1. இதழ்-6. (5-6-1931)*

*ஆசிரியர்: சே. பி. ரொட்கரீஸ். தூத்துக்குடி ஸ்ரீராம் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.*

*அளவு: 25 × 19 செ. மீ., பக்கங்கள் 8. தனியிதழ்* **காலணா.**

நமது நாட்டின் விடுதலைக்காகவும் நன்மைக்காகவும் எத்தனையோ இதழ்கள் தோன்றித் தொண்டு செய்தன. அவ்வாறு செய்த இதழ்களுள் இதுவும் ஒன்று. பெயருக்கு ஏற்ப நாட்டின் விடுதலைக்கும் மேன்மைக்கும் தன்னாலான பணியை இவ்விதழ் செய்தது. (கஉ)

பகுதி ௪

# கிழமை இதழ்கள்

(1882—1957)

## 1. சைவ உதயபானு - 1882

*பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் ௪. இலக்கம் அ. பார்த்திப ஆண்டு வைகாசித் திங்கள் (8-5-1885)*

*ஆசிரியர்: சு. சரவணமுத்துப்பிள்ளை. யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணை சைவப்பிரகாசயந்திரசாலையில், எஸ். பொன்னம்பலம் என்பவரால் அச்சிட்டு வெளிப்படுத்தப் பட்டது.*

*அளவு: 43 × 28 செ. மீ., பக்கங்கள் 4. ஆண்டுக் கையொப்பம் இலங்கைக்கு ரூபா ஒன்று. இந்தியாவுக்கு இரண்டு ரூபா அறுபது சதம். தனியிதழ் 9 சதம்.*

*இவ்விதழ் சைவசமய வளர்ச்சிக்கெனத் தோன்றிப் பணிபுரிந்தது. அந்நாளில் கிறித்துவமத முழக்கம் அங்கு அதிகமாக இருந்ததைக் கண்டு அதனைத் தொலைக்க இவ் விதழினை வெளியிட்டனர்.* (கரு)

## 2. மகாவிகட தூதன் - 1886

*பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 4. இதழ் 26. (29-6-89)*

*ஆசிரியர்: பெயர் தெரியவில்லை. சென்னை எக்செல் சியர் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*அளவு: $27\frac{1}{2} \times 22\frac{1}{2}$ செ. மீ., ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றே கால். தனியிதழ் முக்காலணா.*

*இவ்விதழின் நோக்கம் மக்கட்கு நகைச்சுவையை உண்டாக்கிக் களிப்பிக்கவேண்டும் என்பதுதான். அதற்*

கேற்பக் குடும்பச் செய்திகள் முதலியன நகைச்சுவை ததும்பும் வகையில் எழுதப்பட்டு வெளியாகியது. அந் நாளில் மக்கள் நகைச்சுவையை அவ்வளவாகப் பொருட் படுத்தவில்லையெனினும், இந்நாளில் மக்கள் நகைச்சுவை யைப் பாராட்டி மகிழ்தற்கு இத்தகைய முன்னுள் இதழ்களே வழிகாட்டிகளாகத் திகழ்ந்தன. (கச)

## 3. திரிசிரபுரத் தமிழ்ச்செல்வன் - 1890

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 2. இதழ் 10. (23-4-1892)

ஆசிரியர்: அ. க. அமிர்தம்பிள்ளை. திருச்சி பாலக்கரை எஸ். மாணிக்கசாமி உடன்பிறந்தவர்களால் (பிரதர்ஸ்) வெளியிடப்பெற்றது.

அளவு: 50 × 33½ செ. மீ., ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

ஆசிரியர் ஒரு சிறந்த தமிழறிஞர்; மக்கட்குத் தமிழ அறிவு வளரச் செய்யவேண்டுமென்பதை முதன்மையான நோக்கமாகக்கொண்டு இவ்விதழை நடத்தினர். ஆயினும் வாணிபச் செய்திகள், உலகச் செய்திகள், கட்டுரைகள், தமிழறிஞர் வரலாறுகள் முதலியன இடம் பெற்றன. (கரு)

## 4. நாகை நீலலோசனி - 1890

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 5. இலக்கம் 26-சய ஆண்டு ஆடித் திங்கள் கூஉ (23-7-1894)

ஆசிரியர்: ஜி. சதாசிவம்பிள்ளை. ஆசிரியரால் தமது நாகை நீலலோசனி அச்சகத்தில் அச்சிட்டு நாகபட்டினத் தில் இருந்து வெளியிடப்பட்டது.

முதலில் 34 × 21 செ. மீ., அளவில் நடந்துவந்த இதழ் பிறகு 44 × 28 செ. மீ. அளவில் வெளியாகியது. பக்கங்கள் 4. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

ஆசிரியர் சதாசிவம்பிள்ளை சிறந்த தமிழறிஞர். இவ்விதழில் அரிய கட்டுரைகள் பலவற்றை எழுதி வெளியிட்டதுடன், நாட்டு நடப்பு முதலிய செய்திகளும் நல்ல தமிழில் வெளியாயின. சேது மன்னர் இவ்விதழுக்கு உதவி செய்தார். சைவநெறியைக் காப்பதற்கு இவ்விதழ் பெரிதும் உழைத்தது. மறைமலையடிகள் எழுதிய கட்டுரைகள் சில இவ்விதழில் வெளிவந்திருக்கின்றன. (கசா)

## 5. திருச்செங்கோட்டு விவேகதிவாகரன் - 1894

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 2. இதழ் 24. இவ்விதழ் 22-9-1895 இல் வெளிவந்தது.

ஆசிரியர்: தி. அ. முத்துசாமிக்கோனார். திருச்செங்கோடு சுப்பராயக் கவுண்டர் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $43\frac{1}{2} \times 28$ செ. மீ., பக்கங்கள் 4. ஆண்டுக் கையொப்பம் இரண்டே முக்கால் ரூபா.

சித்தாந்த நூற்கட்டுரைகளும் வழக்கு மன்றச் செய்திகளும் நாட்டு நடப்புக் குறிப்புக்களும் பொதுமக்களுக்குப் பயன்படக் கூடிய கட்டுரைகளும் இவ்விதழில் வெளிவந்தன. அந்நாளில் நிகழ்ந்ததாக வெளிவந்துள்ள பல செய்திகளை இந்நாளில் நோக்குமிடத்துக் கதைபோல் காணப்பெறுகின்றன. (கள)

## 6. ஜனவிநோதினி - 1895

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. இதழ் 40. 4-9-1896 இல் வெளிவந்தது.

ஆசிரியர்: ஏ. பஞ்சாபகேச ஐயர். தஞ்சை மாவட்டம் திருவையாறு கிர்வாணவாணி விலாச அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

அளவு: $50 \times 32\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள். ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழில் வடமொழி மறைக் கட்டுரைகள் பல வெளியாகியதுடன், உள்நாட்டுச் செய்திகள் வெளிநாட்டுச் செய்திகள் முதலியனவும் வெளியாயின. ஜன விநோதினி என்னும் பெயரோடு திங்களிதழ் ஒன்றும் உண்டு. (கஅ)

## 7. லோகோபகாரி - 1896

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 41. இதழ் 45. யுவ ஆண்டு மார்கழித் திங்கள் 19-12-1935

ஆசிரியர்: பரலி. சு. நெல்லையப்பபிள்ளை. கோமளேசுவரன் பேட்டை சச்சிதாநந்த அச்சியந்திரசாலையில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 32 × 25 செ. மீ., பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் ரூபா நான்கு.

இவ்விதழ் கோ. வடிவேலுச் செட்டியாரால் நடத்தப் பெற்ற பொழுது பெரும்பாலும் வேதாந்தக் கொள்கையை நாட்டிப் பரப்புவதற்கே பயன்பட்டது. நெல்லையப்பபிள்ளையவர்கள் உரிமைப் போருக்கு இவ்விதழைப் பயன்படுத்தியதோடு நாட்டு நடப்பு உலகப்போக்கு முதலிய பிற செய்திகள் கட்டுரைகள் முதலியவற்றிற்கு இடந்தந்து சீரிய முறையில் நடத்தினர். (கக)

## 8. பிரபஞ்ச மித்திரன் - 1898

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 8. பகுதி 44. (16-11-1906)

ஆசிரியர்: பெயர் தெரியவில்லை. ஸ்டார் ஆப் இந்தியா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $50 \times 33\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 8. கையொப்ப விவரந் தெரியவில்லை.

இவ்விதழ் தமிழன்பர்கள் எல்லோருக்கும் நண்பனைப் போல் விளங்கி நாட்டு நடப்பு உலகச் செய்தி முதலியவைகளை வெளிப்படுத்தியதோடு சிறந்த கட்டுரைகளையும்

வெளிப்படுத்தியது. இவ்விதழ் தன்னைப் படிப்பவர்கட்குக் கீழ்வரும் வெண்பாவை வேண்டுகோளாக விடுத்துள்ளது.

"ஊரூர்கள் தோறுமிக உண்டாம் அதிசயத்தை
நேராக நின்று நினைப்பிக்கும்-சீரான
நம்மைநனி வாங்கிநீர் நாட்டிற் பரப்பினால்
உம்மைநனி போற்றும் உலகு." (உ0)

## 9. யதார்த்த வசனி - 1906

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 37. பகுதி 45.

ஆசிரியர்: டி. வி. கோவிந்தசாமிப்பிள்ளை. கும்பகோணம் யதார்த்தவசனி அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 32 × 25 செ. மீ., பக்கங்கள் நான்கு. விலை காலணா.

இவ்விதழ் உண்மையான செய்தியைத் தமிழ் உலக மக்களுக்குத் தெரிவிக்கவேண்டும் என்பதையே முதன்மையான நோக்கமாகக்கொண்டு தோன்றியது. யாருக்கும் அஞ்சாமல் உண்மையை வெளியிட்டது. இதனால் ஆசிரியருக்குப் பகைவர்கள் மிகுதிப்பட்டார்கள். ஆயினும் ஆசிரியர் அதனை ஒரு பொருளாக மதிக்கவில்லை. பின்னாளில் இவ்விதழ் நன்கொடையாக மக்களுக்கு வழங்கப் பட்டது. நீதிமன்ற விளம்பரங்கள் இதழில் மிகுதியாக வெளிவந்தன. இவ்விதழ் அண்மைக்காலம் வரையில் நடை பெற்றது. (உக)

## 10. பிரபஞ்சமித்திரன் - 1916

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1: இதழ் 11. (1-9-1916)

ஆசிரியர்: பெயர் தெரியவில்லை. எம். சண்முக முதலியாரால் சச்சிதாநந்தா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 44 × 28 செ. மீ., ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டே முக்கால்.

நாட்டு மக்களுக்கு நல்ல கட்டுரைகளையும் கதையையுந் தரவேண்டும் என்பதை முதன்மையான நோக்கமாகக் கொண்டு இவ்விதழ் பின்னாளில் தோன்றியது. ஓர் இதழ் நின்றுவிட்டால் அவ்விதழின் பெயரை வைத்து வேறோர் இதழைத் தொடங்கும் வழக்கம் இந்நாளில் இருப்பதைப் போல் அந்நாளிலும் இருந்தது. இவ்விதழ் சமயத் துறையிலும் பணிபுரிந்தது. (உஉ)

## 11. வர்த்தகமித்திரன் - 1916

பார்வைக்குக் கிடைத்தது: மலர்-2. இதழ்-25. பிங்கள ஆண்டு கார்த்திகைத் திங்கள் (13-12-1917)

ஆசிரியர் : பெயர் தெரியவில்லை கே. நடேச ஐயரால் தஞ்சாவூர் வர்த்தகமித்திரன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 25 × 19 செ. மீ., பக்கங்கள் 12. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஐந்து.

இவ்விதழின் பெயரைக்கொண்டே அதன் நோக்கத்தையும் உணர்ந்துகொள்ளலாம். வாணிகம், கைத்தொழில், பயிர்த்தொழில் முதலிய பல செய்திகள் இதில் வெளி வந்திருக்கின்றன. (உங)

## 12. திராவிட பத்திரிகை - 1917

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. இதழ் 12. 1917 ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் உஉ ஆம் நாள் இதழ்.

ஆசிரியர் : சீநிவாச வேங்கடாச்சாரி. சென்னை பிரசிடென்ஸி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 33 × 21 செ. மீ. பக்கங்கள் 12. ஆண்டுக் கையொப்பம் ரூபா நான்கு.

புதன்கிழமை தோறும் வெளியாகிய இவ்விதழ் இந்திய நாட்டுச் செய்திகளையும் பிறநாட்டுச் செய்திகளையும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் வெளிப்படுத்தியதோடு சமயத் தொடர்பான செயல்களிலும் ஈடுபட்டுச் சில கட்டுரைகளை வெளியிட்டது. (உச)

## 13. தேசபக்தன் - 1917

பார்வைக்குக் கிடைத்தது: சித்தார்த்தி ஆண்டின் ஆண்டு மலர்.

ஆசிரியர்: திரு. வி. கலியாணசுந்தர முதலியார். ஆசிரியரால் இராயப்பேட்டை பிரிட்டிஷ் இந்தியா அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 44 × 27 செ. மீ., பக்கங்கள் 68. விலை தெரியவில்லை.

அந்நாளில் தேச விடுதலைப்போர் மிகக் கடுமையாக நடைபெற்றது. சுப்பிரமணிய பாரதியார், திரு. வி. க. முதலியார் ஆகியோர் இவ்விதழை அருஞ்சாணமையோடு வீறுகொண்டு நடத்தினர். இவ்வாண்டு மலரில் சுப்பிரமணிய சிவா, பரலி, சு. நெல்லையப்பர், சுவாமி அற்புதாநந்தா, சி. சுப்பிரமணிய பாரதியார், வ. வெ. சுப்பிரமணிய ஐயர் முதலிய தேச பக்தர்கள் அரிய கட்டுரைகளை எழுதியுள்ளனர். (உரு)

## 14. தாருல் இஸ்லாம் - 1919

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 13. இதழ் 21. 1931 ஆம் ஆண்டு மே 22 ஆம் நாள் வெளியானது.

ஆசிரியர்கள்: 1. மௌல்வீ பாஜில் ஹாபிஸ் ஏ. என். முஹம்மது யூசுபு (பாகவீ) 2. பா. தாவூத்ஷா பீ. ஏ. சென்னை கார்டியன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 37 × 25 செ. மீ., பக்கங்கள் 26. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஆறு. தனியிதழ் அணா ஒன்றரை.

இவ்விதழ் இஸ்லாம் மார்க்க உண்மைகளை இஸ்லாமிய மக்களுக்குப் போதித்துச் சமயப்பணி புரியவேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றிப் பணிபுரிந்தது. நபிகள் நாயகமான்மியம், முஸ்லீம் கதாரத்னுகரம் முதலிய பல கட்டுரைகள் வெளியாயின. (உகூ)

## 15. ஊழியன் - 1920

பார்வைக்குக் கிடைத்தது: மலர்-ரு. இதழ்-சச குரோதன ஆண்டு ஆடித் திங்கள் 6உ (21-7-1925)

ஆசிரியர்: ராய. சொக்கலிங்கன். ஆசிரியரால் காரைக் குடி ஊழியன் அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப் பெற்றது.

அளவு: 44 × 28 செ. மீ., பக்கங்கள் 12. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஐந்து.

இப் பத்திரிகை முதலில் தனவைசிய ஊழியன் என்னும் பெயரோடு தோன்றியது. அப்பொழுது அத னுடைய கொள்கை செட்டிமார் நாட்டின் முன்னேற்றங் கருதி உழைப்பதாக விருந்தது. பிறகு ஊழியன் என்று பெயர் மாற்றிய பிறகு நாட்டு விடுதலை முதலியவற்றிலும் பங்குகொண்டு உழைத்தது. திரு. ராய. சொ. அவர்கள் இவ்விதழை நன்கு நடத்தினர். (உஎ)

## 16. தமிழ்நாடு - 1920

பார்வைக்குக் கிடைத்தது: மலர்-12. இதழ்-24. பிர சோற்பத்தி யாண்டு கார்த்திகைத் திங்கள் 5உ (20-11-31)

ஆசிரியர்: வேங்கடராசலு நாயுடு. சென்னையில் தமிழ் நாடு அச்சுக் கூடத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளி யிடப்பட்டது.

அளவு: 43 × 28 செ. மீ. பக்கங்கள் 24. தனியிதழ் ஒன்றரையணு.

தமிழ்நாடு என்னும் பெயரோடு டாக்டர் வரதராஜுலு நாயுடுவால் நாளிதழ் ஒன்று தொடங்கிப் பல ஆண்டுகள் நடைபெற்றது. பிறகு பெரும் பொருளிழப்போடு அப் பத்திரிகை நின்றுவிட்டது. அந்நாளில் இவ்விதழ் சென்னை நாட்டின் விடுதலையை நாடி மிகவும் உழைத்தது. எல்லா வகையான செய்திகளும் இதில் வெளியாயின. (உஅ)

## 17. நவசக்தி - 1920

*பார்வைக்குக் கிடைத்தது: சிலம்பு-1. பரல்-1) இரௌத்திரி ஆண்டு ஐப்பசித் திங்கள் 6வ (22-10-1920.*

*ஆசிரியர்: திரு. வி. கலியாண சுந்தர முதலியார். ஆசிரியரால் இராயப்பேட்டை சாது அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*அளவு: 43 × 29 செ. மீ. பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஐந்து.*

*தேச பக்தன் வாயிலாகத் தொண்டு செய்த திரு. வி. க. அவர்கள் பிறகு இவ்விதழைத் தொடங்கினர். புதிய ஆற்றலோடு தொண்டாற்ற வேண்டுமென்றே நவசக்தி என்று பெயரிட்டார். கிழமையிதழாகத் தொடங்கப்பெற்ற நவசக்தி பிறகு கிழமைக்கு மும்முறையாக மாறிச் சில காலம் நடைபெற்றது. பிறகு திங்களிதழாகி நின்றுவிட்டது. நாட்டு விடுதலைக்கு அஞ்சாமல் உழைத்த இதழ்களில் இதுவும் ஒன்று. திரு. வி. க. அவர்கட்குப்பின் இவ்விதழ் வேறொருவரால் திங்களிதழாகச் சிலகாலம் நடத்தப்பட்டது.* (உகூ)

## 18. பொதுநலம் - 1921

*பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. இதழ் 4. (11-11-1921)*

*ஆசிரியர்: பெயர் தெரியவில்லை. திருவநந்தபுரம் தமிழர் பொதுநலம் பிரிண்டிங் பப்ளிஷிங் கம்பெனி லிமிடெட்டாரால் வெளியிடப்பெற்றது.*

அளவு: 35 × 34 செ. மீ. பக்கங்கள். ஆண்டுக் கையொப்பம் ரூபாய் நான்கு.

பொதுமக்களின் பொது நன்மையைக் கருதி இவ்விதழ் வெளியிடப்பட்டது. தலையங்கம் ஆங்கிலத்திலும் மற்றவை தமிழிலும் எழுதப்பட்டுள்ளன. சுதேச மன்னர்களைப் போற்றிய இதழ்களில் இதுவும் ஒன்று. (ந.ெ)

## 19. குமரன் - 1921

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 19. இதழ் 39.

ஆசிரியர்: சொ. முருகப்பா. ஆசிரியரால் காரைக்குடி குமரன் பவர் அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு: $44 \times 28\frac{1}{2}$ செ. மீ. பக்கங்கள் 12. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஐந்து.

இவ்விதழ் செட்டி நாட்டில் தனவைசியர்களிடையே முருகக்கடவுள் அன்பை வளர்க்கவேண்டும் என்னும் நோக்கத்தோடு தான் முதலில் தொடங்கப்பட்டது. ஆனால் நாளடைவில் காலப் போக்கின் கோலத்தால் இவ்விதழ் சுயமரியாதை இயக்கம் முதலியவைகளினும் கலந்து வேலை செய்தது. ரா. பி சேதுப்பிள்ளை இவ்விதழில் இலக்கியக் கட்டுரைகள் பல எழுதினர். இவ்விதழ திங்கள் வெளி யீடாகவும் ஒன்று வெளியாகியது. (ந.க)

## 20. மணிக்கொடி - 1923

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 2. இதழ் 1. (16-3-34)

ஆசிரியர்: கே. சீனிவாசன். சென்னை கான்குரர் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 38 × 25 செ. மீ. பக்கங்கள் ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்றரை. தனியிதழ் அணு ஒன்று.

இவ்விதழ் நாட்டு விடுதலைக்காகவும் நல்வாழ்வு முறைக்காகவும் பெரிதும் தொண்டு செய்தது நாட்டு விடுதலைப் பெருமையில் இவ்விதழுக்கும் ஓரளவு பங்குண்டு. நாட்டு நடப்பு, விடுதலைக் கட்டுரைகள், கதைகள் முதலிய எல்லாக் கூறுகளும் இவ்விதழில் இடம் பெற்றிருந்தன.

(ந. உ)

## 21. கிராம பரிபாலனம் - 1923

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. எண் 7. (21-7-1923) (கொல்லம் 1098)

ஆசிரியர்: பி. ஸ்ரீ. ஆசார்யா. பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரசில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 32 × 25 செ. மீ. (அடிக்கடி தலைது அளவை மாற்றியுள்ளது) பக்கங்கள் 8. தனியிதழ் அணா 4. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் 5.

இவ்விதழ் கிராம முன்னேற்றத்திற்காகவும் வளர்ச்சிக் காகவும் வெளியிடப்பட்டது. நாட்டு நடப்பு, உலகப் போக்கு, கிராம வாழ்க்கை, குழந்தைகளின் உரிமை, கிராமப் பஞ்சாயத்துக் கோர்ட்டு முதலிய செய்திகள் இவ்விதழில் வெளியாயின. மாதமிருமுறையாகவும் வெளிவந்துள்ளது.

(ந. ந)

## 22. தாய்நாடு – 1923

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 3. உருத்ரோத்காரி ஆண்டு வைகாசித் திங்கள் 3உ (2-15-1923)

ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

அருணாசலஞ் செட்டியாரால் திருச்செங்கோடு தாய்நாடு அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 44 × 28 செ. மீ. பக்கங்கள் 10. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஐந்து.

நாட்டுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்பதையே இவ்விதழ் தனது நோக்கமாகக் கொண்டு வெளியாகியது. இவ்விதழில் ந. மு. வேங்கடசாமி நாட்டார், வ. வெ. சு. ஐயர் முதலியோர் கட்டுரைகள் எழுதியுள்ளனர். (௩௪)

## 23. தமிழ்நாடு - 1924

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 24. இதழ் 34. (21-12-1947)

ஆசிரியர் : மாலினி.

டாக்டர் பி. வரதராசுலுவினால் மதுரை தமிழ்நாடு அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

ராயல் அளவுப் பக்கம் 48. தனியிதழ் அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா பதின்மூன்று.

இவ்விதழ் நாட்டு விடுதலைக்குப் பாடுபட்ட வீரர்களின் வரலாற்றுச் சுருக்கம், கதை, கட்டுரை, கவிதை முதலியவை களைத் தாங்கி மக்களுடைய உள்ளத்தைக் கவரும் வகையில் வெளிவந்துலாவியது. (௩௫)

## 24. தமிழ்நேசன் - 1924

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. இதழ் 7.

ஆசிரியர் : கே. நரசிம்ம ஐயங்கார். கோலாலம்பூர் ஆர்ட் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு : 48 × $33\frac{1}{2}$ செ. மீ. பக்கங்கள். தனியிதழ் எட்டுக் காசு.

இவ்விதழ் அங்கு வாழும் தமிழ்மக்களின் நன்மையை நாடி வெளிப்படுத்தப்பட்டது. அரசியல், தொழில் முறை,

கூட்டுறவு, பொருளாதாரம், சுகாதாரம், ஆசாரச் சீர்திருத்தம் முதலிய பயனுள்ள பல செய்திகள் இவ்விதழில் வெளியாயின. இந்நாளில் நாளிதழாக ஒரு தமிழ்நேசன் நடைபெறுகிறது. (௩௬)

## 25. ஜனமித்திரன் - 1924

பார்வைக்குக் கிடைத்தது ; மலர் 12. இதழ் 27. யுவ ஆண்டு பங்குனித் திங்கள் இருபத்தொன்பதாம் நாள. (10-4-1936)

ஆசிரியர்: பி. எஸ். சுப்பிரமணிய ஐயர். ஆசிரியரால் புதுக்கோட்டை சனமித்திரன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 26 × 20 செ. மீ. பக்கங்கள் 44. இவ்விதழ் ஒரு சிறப்பு மலர். ஆகவே அதிகப் பக்கங்களுடனும் சிறப்பாகவும் வெளியாகியுள்ளது. இதனுடைய அளவு அடிக்கடி மாறியிருக்கிறது. வழக்கம் போல் 8 அல்லது 12 பக்கங்களில் வெளியாகியது.

ஆசிரியராகிய சுப்பிரமணிய ஐயர் புதுக்கோட்டை நாட்டு மக்களுக்கு நன்மை செய்யவேண்டுமென்பதைக் குறிக்கோளாகக் கொண்டு குற்றங் கண்ட இடத்தில் அஞ்சாநெஞ்சத்தோடு கண்டித்தும் எழுதினர். அதனால் இவரை அதிகாரிகள் புதுக்கோட்டை நாட்டைவிட்டு வெளியேறுமாறுஞ் செய்து அடக்கவேண்டியதாக இருந்தது.

(௩௭)

## 26. குடியரசு - 1925

பார்வைக்குக் கிடைத்தது : மாலை 6. மலர் 51. பிரமோதூத ஆண்டு சித்திரைத் திங்கள் 6வ (19-4-1931)

ஆசிரியர்: ஈ. வெ. இராமசாமி. ஈரோடு உண்மை விளக்கம் அச்சகத்தில் அச்சிட்டு நாகம்மாளால் வெளியிடப்பட்டது.

அளவு : 33 × 25 செ. மீ. பக்கங்கள் 20. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று. தனியிதழ் அணா ஒன்று.

இவ்விதழ் முதலில் தோன்றிய நோக்கம் ஆங்கில ஆட்சியை இந்நாட்டைவிட்டு விரட்டிக் குடியரசை நிலை பெறுத்த வேண்டுமென்பதுதான். அத்துறையில் சில நாள் உழைத்தபின் காலத்திற் கேற்றவகையில் மாறிப் பணிபுரிந்தது. இவ்விதழ் அண்மைக் காலத்ததும் புகழ் பெற்றதுமாதலின் அதிகம் கூறவேண்டியதில்லை. (ந-அ)

## 27. தேசபந்து - 1926

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 4 இதழ் 20. சுக்கில ஆண்டு ஆடித் திங்கள் 2உ (15-6-1929)

ஆசிரியர்: சதாவதானம் தெ. பொ. கிருட்டிணசாமிப் பாவலர். மாணிக்கம் பிள்ளையால் சிந்தாதிரிப்பேட்டை தேசபந்து அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 39 × 27 செ. மீ. பக்கங்கள் 20. தனியிதழ் அணா ஒன்று.

நாட்டின் விடுதலைக்கும் முன்னேற்றத்திற்கும் தீய சக்திகளை ஒடுக்குதற்கும் உழைத்த கிழமை யிதழ்களில் இதுவும் ஒன்று. அந்நாளில் தலைவிரித்தாடிய நாத்திக இயக்கத்தை ஒழித்துக் கட்டுவதற்கு இது நன்முறையான பணியைப் புரிந்தது. உயரிய கட்டுரைகள் பல இதனில் வெளியாயின. ஆசிரியர் தெ. பொ. கிருட்டிணசாமிப் பாவலர், திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களுடைய தமையனாருஞ் சிறந்த தமிழறிஞருமாவார். (ந-சு)

## 28. அருணகிரி - 1927

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. இதழ் 12. 1927 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 14 ஆம் நாள்.

ஆசிரியர் : சி. இராமநாதன். பள்ளத்தூர் செங்குந்தர் அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பட்டது.

அளவு : $44 \times 28\frac{1}{2}$ செ. மீ. பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் நான்கு. தனியிதழ் விலை அணா ஒன்றரை.

இவ்விதழ் செங்குந்த குல முன்னேற்றங் கருதி வெளி வந்தது. தமிழ்ப்பணி செய்ததோடு, நாட்டுப்பற்று, வகுப்புப்பற்று ஆகிய பற்றுக்களையும் கொண்டு அவ் வழியில் தொண்டு செய்தது. (௪0)

## 29. சிவநேசன் - 1927

பார்வைக்குக் கிடைத்தது : ஆண்டு ௩. வாரம் ௩. சுக்கில ஆண்டு ஆவணித் திங்கள் 11உ (26-8-1929)

ஆசிரியர்: ராம - கு - ராம இராமசாமிச் செட்டியார். ஆசிரியரால் பலவான் குடி சிவநேசன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $36 \times 25$ செ. மீ. பக்கங்கள் 12. ஆண்டுத் தொகை ரூபா மூன்று. தனியிதழ் விலை அணா ஒன்று.

காரைக்குடி சிவநேசர் திருக்கூட்டத்தின் ஆதரவில் இவ்விதழ் தோன்றியது. சைவமுந் தமிழுந் தழைத்தினி தோங்கத் திருத்தொண்டு செய்வதற்கே இவ்விதழ் தோன் றியது. தமிழ்நாட்டில் இருந்த சைவசித்தாந்தச் செல்வர் கள் அனைவரும் இவ்விதழில் கட்டுரைகள் எழுதினர். அந் நாளில் தலைவிரித்தாடிய நான்மூன்றித் தனத்தை யொழிப்பதற்கு இவ்விதழ் பெரிதும் முயற்சி செய்தது. இவ்விதழில் உலகப்போக்கு நாட்டு நடப்பு முதலிய பல செய்திகளும் வெளியாயின. பிறகு இது திங்கள் வெளியீ டாகிச் சிலகாலம் நடந்து மறைந்தது. (௪க)

## 30. கலாநிலையம் - 1928

பார்வைக்குக் கிடைத்தது : எட்டாந் தொகுதி 1935 ஆம் ஆண்டு வெளியாகியது.

ஆசிரியர்: டி. குமாரையா பி. ஏ. பி. எல். சென்னை பி. என். அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பட்டது.

அளவு: 33½ × 21 செ. மீ. பக்கங்கள் 16. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஏழரை. தனியிதழ் அணா இரண்டரை.

கலா நிலையம் எனின் கலைகளெல்லாம் நிலைபெற்றுத் தங்கிய இடம் எனப் பொருள்படும். கலா நிலையம் தனது பெயருக்கேற்பத் தமிழ்க் கலா நிலையமாக விளங்கியது. தமிழ் நூல்கள் பல சிறந்த உரையோடு இவ்விதழில் வெளியாயின. இவ்விதழின் தமிழ்த் தொண்டு அந்நாள் அறிஞர்கள் அனைவராலும் நன்கு பாராட்டப்பட்டது. பலவிடங்களில் இவ்விதழ்களைத் தொகுத்து நூல் வடிவாகக் கட்டஞ் செய்து வைத்துள்ளனர். (சஉ)

## 31. ஆனந்தபோதினி - 1929

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1 இதழ் 1. விபவ ஆண்டு மாசித் திங்கள் 9உ (20-2-1929)

ஆசிரியர்: நா. முனுசாமி முதலியார். ஆசிரியரால் தமது சென்னை ஆனந்தபோதினி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 44 × 30 செ. மீ. பக்கங்கள் 16. தனியிதழ் அணா ஒன்று. ஆண்டுக் கையொப்பம்ரூபா மூன்று.

ஆனந்தபோதினித் திங்கள் வெளியீடு ஒன்று ஏறக் குறைய நாற்பதாண்டுகளாக நடைபெற்று வருகிறது. அவ் வெளியீட்டோடு இவ் வெளியீடுந் தொடங்கப்பட்டது. பண்டித லி. இராமசாமி என்பவர் உதவியாசிரியராக அமர்ந்து இத்தழைத் திறம் பெற நடத்தினர். தேசியச் செய்திகளை நாட்டுப்புற மக்களுக்குந் தெரியச் செய்து அவர்கள் விழிப்படைந்து முன்னேறுமாறு செய்யவேண்டும் என்பதையே கிழமையிதழ் கடமையாகக் கொண்டு பணி யாற்றியது. போதிய ஆதரவில்லாமையின் கிழமையிதழ்

விரைவில் மறைந்து விட்டது. திங்கள் இதழ் மட்டும் இன்றுவரை நன்கு நடைபெறுகிறது. (சாூ)

## 32. வாராந்தவர்த்தமானம் - 1929

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1 பகுதி 15 சுக்கில ஆண்டு ஆவணித் திங்கள் 24உ (8-9-1929)

ஆசிரியர்: கே. டி. முத்தையா. பாளையங்கோட்டை பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப் பட்டது.

அளவு: 44 × 28 செ. மீ. பக்கங்கள் 8. தனி இதழ் அணு ஒன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் தன்னுடைய பெயருக்கேற்ப ஒவ்வொரு கிழமைச் செய்தியையும் மக்கட்கறிவிக்கும் பணியை மேற் கொண்டு சிறந்து விளங்கியது. பலவகையான அரிய செய்திகள் இவ்விதழை அழகு செய்தன. (சரு)

## 33. தமிழரசு - 1930

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1 இதழ் 18. பிரமோதூத ஆண்டு மார்கழித் திங்கள் 10உ (25-12-1930)

ஆசிரியர்: மணி. திருநாவுக்கரசு முதலியார். சென்னையில் மீனாட்சி அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டுச் சி. எஸ். குமாரசாமி முதலியார் அவர்களால் வெளியிடப்பட்டது.

அளவு: 37 × 25 செ. மீ. பக்கங்கள் 20. கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் டாக்டர் மே. மாசிலாமணி முதலியாருடைய ஆதரவின் கீழ்த் தோன்றியது. தமிழ் மக்கள் முன்னேறிச் சிறந்து விளங்க வேண்டும் என்பதையே குறிக்கோளாகக் கொண்டு மருத்துவம், தமிழர் சிறப்பு, அரசியல் நிகழ்ச்சி முதலிய செய்திகளைத் தாங்கி வெளிவந்துலாவியது. பிறகு

கிழமையிதழ் மறைந்துவிடத் திங்களிதழாக மாறிச் சில ஆண்டுகள் நடைபெற்றது. திங்களிதழிற் கதைகளே மிகுதியாக வெளியாயின. (ச கூ)

## 34. இந்தியா - 1931

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1 இதழ் 2 (4-10-1931)

ஆசிரியர்: ஜெ. எஸ். கண்ணப்பர். எம். பக்தவத்சலத்தால் சென்னை ஜெனரல் பாட்டர்ஸ் ரோட்டில் நேரு அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 33 × 25 செ. மீ. பக்கங்கள் 32. தனியிதழ் அணா 2. ஆண்டுக் கட்டணம் ரூபா ஆறு.

ஜெ. எஸ். கண்ணப்பர் முதலில் தன்மான இயக்கத்தில் ஈடுபட்டுத் திராவிடன் பத்திரிகையை நடத்தினார். பிறகு தம் கொள்கையை மாற்றிக் கொண்டு 'இந்தியா' என்னும் நாளிதழை நடத்தினார். பிறகு இவருடைய கொள்கை திருந்தி நாட்டு விடுதலையாகி விட்டது. (சன)

## 35. சண்டமாருதம் - 1931

பார்வைக்குக் கிடைத்தது: எண் 22. வார அறு பந்தம் ஆங்கிரச ஆண்டு சித்திரைத் திங்கள் (3-5-1932)

ஆசிரியர்: சொ. முருகப்பா. திருச்சிராப்பள்ளி சண்டமாருதம் பவர் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 25 × 19 செ. மீ பக்கங்கள் நான்கு தனியிதழ் காலணா.

இவ்விதழ் பழைய பழக்க வழக்கங்களை நாட்டைவிட்டு விரட்ட வேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியிடப்பட்டது. இவ்விதழ் நாளிதழாகவும் நாள்தோறும் வெளியாகிக் கொண்டிருந்தது. சிறிது காலம் வெளிவந்து பிறகு விரைவில் மறைந்து போய்விட்டது. முருகப்பா 'குமரன்'

என்னும் வார இதழ் திங்கள் இதழ் ஆகியவைகளையுங் காரைக்குடியில் இருந்து நடத்தினார். (சஅ)

## 36 தேசபக்தன் - 1931

பார்வைக்குக் கிடைத்தது: ஆண்டு 1 பதிப்பு 1. பிரசோற்பத்தியாண்டு ஐப்பசித் திங்கள் (19-10-1931)

ஆசிரியர்: என். தண்டபாணிப் பிள்ளை. ஆசிரியரால் சென்னை பிடாரியார்கோவில் தெருவிலிருந்த தமது தண்டபாணி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 25 × 17 செண்டி மீட்டர். பக்கங்கள் 12. விலை காலணா.

தேசபக்தன் இதழ் முன்பு வ. வெ. சு. ஐயர், சுப்பிரமணிய பாரதியார், திரு. வி. க ஆகியவர்களாலும் நடத்தப்பட்டன. அவர்களுடைய அடிச்சுவட்டைப் பின் பற்றியே இவரும் தேசபக்தனை நடத்தினார். இவரைப்போல் காலணா விலையில் அப்போது யாரும் பத்திரிகை வெளியிடவில்லை. (சகூ)

## 37. விநோத விகடன் - 1931

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1 இதழ் 9. 1931ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 9ஆம் நாள்.

ஆசிரியர்: புதுவை நடராசன். சென்னை வேல் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 25 × 17 செ. மீ. பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்றரை. தனியிதழ் காலணா.

இவ்விதழ் நாட்டு மக்களிடம் நகைச்சுவையை உண்டு செய்து அவர்களை மகிழ்விக்க வேண்டுமென்னுங் கருத்தைக் கொண்டு தோன்றிற்றாயினும் அவ்வாறு செய்தற்குத் தக்க நகைச்சுவை மதுகையின்மையின், பயனற்ற போலி நகைச்சுவை இதழாய் விளங்கி மறைந்து போயிற்று. (ருo)

## 38. செட்டிநாடு - 1932

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 22. இதழ் 45. விசய ஆண்டு ஆவணித் திங்கள் 11உ (27-8-1953)

ஆசிரியர்: பாலகவி இராமநாதன் செட்டியார். ஆசிரியரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

இராயல் அளவு பக்கம் 12. தனி இதழ் ஒன்றரையணா (9 காசு) ஆண்டுக் கட்டணம் ரூபா நான்கு.

இவ்விதழ் தொடங்கியது தஞ்சைமா நகரில். நாட்டின் உரிமையைப் பெறுதற்குத் தொண்டாற்றும் நோக்கமும், செட்டிநாட்டு நிகழ்ச்சிகளைத் தமிழ்நாட்டவர்க்கு உணர்த்த வேண்டும் என்னும் எண்ணமுங்கொண்டது. பிறகு காரைக்குடியில் செட்டிமார்களுடைய ஆதரவில் சேடாத்திரி சர்மா என்பவர் ஆசிரியராக இருந்து பல ஆண்டுகள் நடத்தினர். அரசியல், நாடு, சமூகம் என்பவற்றிற்கு முன்னர் முதலிடம் தந்து உழைத்த இவ்விதழ் பெரிய அளவில் வெளியாகியது. பின்பு பாலகவியின் கைக்கு மாறிய பின் சமயம், மொழி, இலக்கியம், நாட்டு நடப்பு முதலியவைகளைத் தாங்கி நின்று பாலகவியார்க்குப் பொருளிழப்பையும் விளைவித்து இறுதியில் சில ஆண்டுகட்கு முன்புதான் மறைந்தது. (நிக)

## 39. புரட்சி - 1933

பார்வைக்குக் கிடைத்தது: மாலை 1. மலர் 9. ஸ்ரீமுக ஆண்டு தைத்திங்கள் 8உ (21—1—1934)

ஆசிரியர்: ஈ. வெ. கிருட்டிணசாமி. ஈரோடு உண்மை விளக்கம் பதிப்பகத்தில் அச்சிடப்பட்டு சா. ரா. கண்ணம்மாள் அவர்களால் வெளியிடப்பட்டது.

அளவு: 32 × 25 செ. மீ. பக்கங்கள். தனியிதழ் விலை ஓரணா.

இவ்விதழ் சுயமரியாதை இயக்கம் என்னும் பெயரோடு தோன்றி நாட்டிலே சிறிது காலம் கும்மாளமிட்ட கட்சிக்கு ஆக்கந்தேடத் தோன்றியது. சீர்திருத்த நெறிகளிலும் பணி செய்து பின்னாளில் மறைந்து போய்விட்டது. (௩௨)

## 40. தமிழன் - 1934

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 3 இதழ் 22. (4-10-1936).

ஆசிரியர்கள் ப. சிதம்பரம் பிள்ளை பி. ஏ. பி. எல். & எம். எல். ஏ. ப. சுப்பிரமணிய பிள்ளை பி. ஏ. பி. எல்., ப. சிதம்பரம் பிள்ளையால் நாகர்கோயில் சித்தரஞ்சன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 32 × 25 செ. மீ. பக்கங்கள் 12. விலை விவரம் தெரியவில்லை.

தமிழன் என்னும் பெயரோடு தோன்றிய இவ்விதழ் தனது தலையங்கத்தை ஆங்கிலத்தில் எழுதியிருப்பது புதுமையே. இவ்விதழில் நாட்டுச் செய்திகளும் உலகச் செய்திகளும் வெளியாயின. (வேறு சில இடங்களிலிருந்தும் தமிழன் என்னும் பெயரோடு வெளியீடுகள் வெளியாகியுள்ளன.) (௩௫)

## 41. நாடோடி - 1938

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 3. (14-10-38)

ஆசிரியர்: எம். எஸ். விசுவநாதம். சென்னை ஆதியப்ப நாய்க்கன் தெருவில் அருணாசல முதலியாருடைய குரு தாசன் அச்சகத்தில் அச்சிட்டு எஸ். ஏ. இராமநாதனால் வெளியிடப்பட்டது.

அளவு: 28 × 22 செ. மீ. பக்கங்கள் 8. தனி இதழ் காலணா. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழின் நோக்கம் சினிமாச் செய்திகளை வெளியிட வேண்டும் என்பது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில், சினிமா வம்பு, ஆகாசவாணி முதலிய செய்திகள் வெளியாகி யுள்ளன. (ா

## 42. பாரதமணி - 1938

பார்வைக்குக் கிடைத்தது: மாலை 1. முத்து 2. (9-10-1938)

ஆசிரியர்: கே. எஸ். வேங்கடரமணி. சென்னை ஜூபிடர் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் மயிலாப்பூர் சுவேதாரண்ய ஆசிரமத்திலிருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 24 × 17 செ. மீ. பக்கங்கள் 24. தனி இதழ் ஓரணா. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் நான்கு.

இவ்விதழ் "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்னும் பாரதியார் மொழியை மூலமந்திரமாகக் கொண்டு தோன்றியது. சீர்திருத்தக் கட்டுரைகளும் கதைகளும் இவ்விதழில் வெளியாயின. பாரத நாட்டிற்குத் தொண்டுசெய்ய வேண்டுமென்பதே இதனுடைய முதன்மையான நோக்கம். (ருரு)

## 43. ஹநுமான் - 1938

பார்வைக்குக் கிடைத்தது: ஆண்டுமலர் ஒன்று.

ஆசிரியர்: சங்கு சுப்பிரமணியன். சென்னை கேசரி பிரிண்டிங் ஒர்க்ஸ் உரிமையாளர் வி. சுந்தரம் ஐயரால் அச்சியற்றி வெளியிடப்பட்டது.

அளவு: $36\frac{1}{2} \times 24\frac{1}{2}$ செ. மீ. பக்கங்கள் 12. தனியிதழ் விலை அணா இரண்டு.

நல்ல செய்திகளை மக்களுக்குச் சீரியமுறையில் அளிக்க வேண்டுமென்பதைத் தன்னுடைய உயரிய நோக்கமாகக் கொண்ட இவ்விதழ் மக்கள் அனைவரும் விரும்பிப் படிக்கத்

தக்க இனிய முறையில் வெளிவந்து நல்ல தொண்டு செய்தது. (௬௬)

## 44. பாரததேவி - 1939

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 2. இதழ் 5. (17-11-1940)

ஆசிரியர்: எஸ். சதாநந்தம். சென்னை மவுண்ட் ரோட்டில் பாரததேவி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு: 23 × 18 செ. மீ. பக்கங்கள் 48. தனி இதழ் அணு மூன்று.

சென்னை மாநகரில் 'பாரததேவி' என்னும் பெயரோடு நாளிதழ் ஒன்று, அச்சம், தாட்சணியம் முதலியன இல்லாமல் உண்மையை மக்கட்கு உணர்த்தி எல்லாச் செய்திகளையும் வெளியிட்டுத் தேசீய உணர்ச்சியைப் பரப்பி நின்றது. அந்நாளிதழின் ஓர் உறுப்பாகக் கிழமை வெளியீடும் தோன்றியது. அவ்வெளியீடாகிய இஃது அரிய கட்டுரைகள் பல வற்றை வெளியிட்டு நாட்டுக்கு நல்ல தொண்டு செய்தது. (௬௭)

## 45. விகடரத்தினம் - 1941

பார்வைக்குக் கிடைத்தது: தடாகம் 1. தாமரை 1. விஷு ஆண்டு புரட்டாசித் திங்கள் 25உ (11-10-1941)

ஆசிரியர்: விகடகவி பூதூர் வைத்தியநாதையர். சென்னை பத்ரையன் தெருவில் இரத்னம் அச்சகத்தில் வி. டி. முனிரத்ன முதலியாரால் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

டிம்மியளவுப் பக்கம் 48. தனியிதழ் அணு இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

மக்களுக்கு நகைச் சுவையை மிகுதிப் படுத்தி அவர்களை மகிழச் செய்யவேண்டுமென்பதே இவ்விதழின் நோக்க

மாக இருந்தது. ஆசிரியராகிய விகடகவி பூதூர் வைத்திய நாதையர் விகடப் பாடல்களையும் விகடக் கதைகளையும் இயற்றுவதில் வல்லவர். முதலில் ஆனந்த விகடனைத் தோற்றுவித்து அதனை எஸ். எஸ். வாசனிடம் விற்று, பிறகு விஜய விகடன் என்னும் இதழை நடத்தினார். பிறகு இவ்விதழ் தோன்றிற்று. இவர் ஏறக்குறைய நாற்ப தாண்டுகள் விகடப் பத்திரிகை நடத்தியுள்ளார். (ரு அ)

## 46. தமிழன் - 1942

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1. ஆகஸ்டு 1942.

ஆசிரியர்: பி. பா. ஆதித்தன். சென்னை சிந்தாதிரிப் பேட்டையில் இருந்து வெளியாகியது.

27 × 21 செ. மி. அளவுப் பக்கம் 24. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கட்டணம் ரூபா ஆறு.

தமிழர்களின் முன்னேற்றங் கருதியே இவ்விதழ் தொடங்கப்பெற்றது. தமிழ் மக்களின் முன்னேற்றத்திற்கு ஏற்ற கட்டுரைகளும் உலகச் செய்திகளும் நகைச்சுவைச் செய்திகளும் நல்ல கதைகளும் இதில் வெளியாயின. மக்களின் மனங்கவர் இதழாக இலங்கிய இது மறைந்து போனது வருந்தத் தக்கது. (௫௬)

## 47. அணில் - 1944

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 7. இதழ் 1 (12-12-1950.)

ஆசிரியர்: வை. கோவிந்தன். சென்னை 6 சண்டே டைம்ஸ் அச்சகத்தில் ஜே. எஸ். வாசனால் அச்சிடப்பெற்று ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: 28 × 21 செ. மீ. பக்கங்கள் 8. தனியிதழ் விலை ஓரணா. ஓராண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. இரண்டாண்டுக் கையொப்பம் ரூபாய் ஐந்து.

இது குழந்தைகளின் வாரப் பத்திரிகை. வேடிக்கைப் படங்கள் சிறு கதைகள் முதலியன இவ்விதழில் வெளியாயின. இது குழந்தைகளின் இதழாக இருந்தபோதிலும் பெரியவர்களும் இதை விரும்பிப் படித்தனர். இத்தகைய சிறந்த குழந்தைகள் இதழ் நாட்டில் நடைபெற வேண்டியது கட்டாயமாகும். (சுo)

## 48. உதயம் - 1946

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. விய ஆண்டு ஆடித் திங்கள் 27உ (11-8-1946)

ஆசிரியர்: எம். கந்தசாமி. திருவக்கிபுரம் இலட்சுமி அச்சகத்தில் எம். வேதபுரி முதலியாரால் பதிப்பிக்கப்பட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: 33 × 21 செ. மீ. பக்கங்கள் 8. தனி இதழ் அணா ஒன்றேகால். ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஐந்து.

இவ்விதழ் பொதுவான நோக்கில் வெளிவந்துலாவியது. முகமது ஜின்னாவைப் பற்றிய கட்டுரை, ஆரம்ப ஆசிரியர் நிலை, பல பொதுவான செய்திகள் முதலியன இவ்விதழில் வெளிவந்தன. மக்கட்குப் பயன்படாத இதழ்களில் இஃதொன்றாகி விரைவில் மறைந்தது. (சுக)

## 49. தமிழ் ஹரிசன் - 1946

பார்வைக்குக் கிடைத்தது: இருபத்தொன்பதாவது இதழ் (27-10-46)

ஆசிரியர்கள்: பொ. திருகூடசுந்தரம், நாமக்கல் கவிஞர். சென்னை கமர்ஷியல் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 34 × 21½ செ. மீ. பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஏழரை. தனியிதழ் அணா இரண்டு.

மகாத்மாகாந்தி தம்முடைய அறிவுரைகள், நோக்கங்கள், கொள்கைகள் முதலியவைகளை "ஹரிஜன்" என்னும் பெயரோடு இதழ் ஒன்றைத்தொடங்கி அதில் எழுதி வந்தார். காந்தியடிகளுடையகொள்கைகளைப் புரிந்துகொள்வதற்கு அவ்விதழ் பல மொழிகளில் மொழி பெயர்த்து நாடெங்கும் பரப்பப்பட்டது. அவ்வாறு மொழி பெயர்க்கப்பட்டதில் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதே இத் தமிழ் ஹரிசன் ஆகும். (கூஉ)

## 50. தார்மிக ஹிந்து – 1946

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 3. இதழ் 44. சர்வதாரி யாண்டு பங்குனித் திங்கள் (27-3-1949)

ஆசிரியரும் வெளியிட்டவரும் டி. கே. சகநாதாச்சாரியார். கிருட்டிண மூர்த்தி என்பவரால் சென்னை-15 இராம கிருட்டிண அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

28 × 27 செ. மீ. அளவுப் பக்கம் 8. தனி இதழ் அணா ஒன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஐந்து.

இவ்விதழ் ஆத்திகக் கொள்கையைப் பரப்பி நாத்திகத்தை ஒழிப்பதற்கென்றே தோன்றியது. ஆயினும் நாட்டு மக்களுக்கு வேண்டிய செய்திகள் யாவும் இதில் இடம் பெற்றன. (கூங)

## 51. போர்வாள் - 1947

பார்வைக்குக் கிடைத்தது: வாள் 6. வீச்சு 47. (24-7-1953)

ஆசிரியர்: காஞ்சி மணிமொழியார். ஆசிரியரால் சென்னை பவழக்காரத் தெருவில் பிரீ பிரிண்டர் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு 24 × 18 செ. மீ. பக்கங்கள் 20. தனியிதழ் விலை அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறரை.

இவ்விதழ் திராவிட முன்னேற்றக் கழக வழியில் பணியாற்றுவதற்காகத் தொடங்கப்பட்டது. காங்கிரஸ் ஆட்சியில் கண்ட குற்றங்குறைகளை யெடுத்துக் காட்டியது. தமிழ் வளர்ச்சிக்காகவும் தமிழ்நாட்டு வளர்ச்சிக்காகவும் தன்னால் இயன்ற பணியைப் புரிந்தது. (சுச)

## 52. வெள்ளிமணி - 1947

பார்வைக்குக் கிடைத்தது: வெள்ளி 1. மணி 20. (17-10-47)

ஆசிரியர்: சாவி. சென்னை அரண்மனைக்காரன் தெருவில் உள்ள கமர்ஷியல் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு, ஆசிரியரால் தியாகராய நகரில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு 26 × 20 செ. மீ. பக்கங்கள் 32. தனியிதழ் அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் பன்னிரண்டு.

இவ்விதழ் தற்கால உலகில், உலகப்போக்கைக் காலப்போக்கிற்கேற்ப அழகிய முறையிற் சித்திரித்துக் காட்டி மக்களை மகிழ்விக்க வேண்டுமென்பதையே கொள்கையாகக் கொண்டு அழகிய சித்திரப் படங்களுடன் வெளியாகியது. கட்டுரைகள் உயர்ந்த முறையில் அமைந்து விளங்கின. (சுரு)

## 53. டமாரம் - 1948

பார்வைக்குக் கிடைத்தது: டமாரம் 1. டம் டம் 31. (9-8-1948)

ஆசிரியரும் வெளியிட்டவரும்: சுப. சொக்கலிங்கம். அச்சிட்டவர்கள் கண்ணபிரான் பிரிண்டிங் ஒர்க்ஸ், புதுக்கோட்டை.

டிம்மியளவுப் பக்கம் 8. தனியிதழ் அணா அரை.

இவ்விதழ் சிறுவர்களுக்கான படம், கதை வேடிக்கைச் செய்தி முதலியவைகளை வெளியிட்டுச் சிறுவர்களுக்குக் களிப்பினையுண்டாக்க வேண்டுமென்பதையே நோக்கமாகக் கொண்டு வெளிவந்தது. எல்லாப் பக்கங்களிலும் வேடிக்கைப் படங்கள் நிரம்பியிருந்தன. (சுசு)

## 54. நந்தினி – 1948

*பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. (10-12-1948)*

*ஆசிரியர்: ஏ. சுப்புச்சாமி. திருச்சிராப்பள்ளி கல்யாண அச்சகத்தில் அச்சிடப்பட்டு உறையூர் எஸ். வி. இராம சுப்பிரமணியனால் வெளியிடப்பட்டது.*

*28 × 22 செ. மீ. அளவுப் பக்கம் 8. தனி இதழ் அணா 1. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.*

*இவ்விதழ் தேசியத் தொடர்பான செய்திகளை வெளியிடுவதற்காகத் தோன்றியது. பழந் தருமக் கொள்கையை வற்புறுத்திக் கட்டுரைகளை வெளியிட்டது. நகைச் சுவைப் பகுதி, பொதுநலச் செய்திகள் முதலியவைகளும் வெளியாயின.* (சுஎ)

## 55. ரேடியோ - 1948

*பார்வைக்குக் கிடைத்தது: 4-10-48 இல் வெளியான இதழ்.*

*ஆசிரியர்: சு. சௌந்தரராசன். சென்னை ரவி அச்சகத்தில் அச்சிட்டு, சி. குருமூர்த்தி என்பவரால் வெளியிடப்பட்டது.*

*அளவு $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ. பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்ப விவரந் தெரியவில்லை.*

*இவ்விதழ் சிறுவர்களின் பொருட்டு வெளியிடப்பட்டது. குழந்தைகளுக்கான செய்திகளும், கதைகளும், பாடல்களும் வெளியிடப்பட்டன. அழகிய படங்களும் வெளியாயின. பொதுவாகச் சிறுவர்கட்கு இவ்விதழ் மிகுந்த பயனை அளிப்பதாக விளங்கியது.* (சுஅ)

## 56. வானவில் – 1948

*பார்வைக்குக் கிடைத்தது: வில் 1. வர்ணம் 6. (16-7-1948)*

ியர்: மூர்த்தி எம். ஆர். எஸ். மணி. திருச்சி தெப்பக்குளம்தேரடிக் கடைத்தெரு, ரசுவதி அச்சகத்தில் ட்டு வெளியிடப்பட்டது.

அளவு 21 × 18 செ. மீ. பக்கங்கள் எட்டு. தனியிதழ் அணு 1. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் முதலில் எட்டுப் பக்கத்தோடு வெளியாயிற்றுயினும், பிறகு மாறிவிட்டதென்பதும் அதன் கொள்கையும் பின்வரும் தலையங்கக் குறிப்பால் பெறப்படுகிறது. "அடுத்த வாரம் முதல் 16 பக்கங்கள் 'டேயப்பா எவ்வளவு பக்கங்கள் எத்தனை விதவிதமான விஷயங்கள், படங்கள் வர்ணங்கள்' என்று நீ சந்தோஷத்தால் குதிக்கவேண்டும். ஒவ்வொரு பக்கத்திலும் உன்னை மகிழ் ஊட்ட ஏராளமான விஷயங்களைத் திணிக்கப்போகிறேன். உலகிலுள்ள அற்புதங்கள், விநோதங்கள், வேடிக்கைகள், சரித்திரங்கள் இன்னும் என்னென்னவெல்லாமோ உனக்குச் சொல்லப் பிளான் போட்டிருக்கிறேன். உன் ஆதரவுதான் வேண்டும்." (சுசு)

## 57. அறப்போர் - 1950

பார்வைக்குக் கிடைத்தது: முரசு 1. முழக்கம் 1. விக்ருது ஐப்பசி (9-11-1950)

ஆசிரியர்: விபூதி ஆர். வீரமுத்து சுவாமிகள். வெளியிட்டவரும் இவரே. சயராம் என்பவரால் கும்பகோணம் இராமா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

28 × 22 செ. மீ. அளவுப் பக்கம் 8. தனியிதழ் அணு இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறு.

விபூதி வீரமுத்துசுவாமி அவர்களைப் பற்றிப் பெரும்பாலோர் அறிந்திருப்பார்கள். நாத்திகத்தை நாட்டை விட்டு விரட்டி ஆத்திகத்தை எங்கும் பரப்பவேண்டும் என்னும் ஆவேசத்தோடு இவ்விதழைத் தொடங்கினர். சிறிதும் அஞ்சாமல் திராவிடக் கழகத்தைப் பலமாகத் தாக்கிப் பல கட்டுரைகளை யெழுதினர். (எ0)

## 58. குறள் மலர்-1950

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. இதழ் 1. 1957 ஆம் ஆண்டு சூன் திங்கள் பதினைந்தாம் நாள் வெளி யான இதழ்.

ஆசிரியர்: திருக்குறள் வீ. முனுசாமி. திருச்சிராப்பள்ளி இம்பீரியல் அச்சகத்தில் வெ. மாணிக்கம் பிள்ளையால் அச்சிட்டு ந. கணபதி அவர்களால் வெளியிடப்பட்டது.

அளவு 28 × 22 செ. மீ. பக்கங்கள் 12. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறு. தனியிதழ் விலை அணு இரண்டு.

இவ்விதழ் திருக்குறட்பாக்களின் பொருள் விளக்கம் புலப்படுத்துவதற்காகத் தோன்றியது. "வள்ளுவப் பெருந் தகையின் முப்பாலாக—முதனூலாக முன்னின்றுதவும் குறள் இன்பத்தினைக் குறள்மலர் ஒன்றே நாட்டிற்கு நல்கி நலம்புரிகின்ற நற்பணியாற்றும் என்று உறுதி கூறு கிறோம்" என்று ஆசிரியர் குறித்துள்ளார். சிறிது காலம் பொருள் விளக்கம் வெளியாகியது. (எக)

## 59. பொய்யாமொழி - 1950

பார்வைக்குக் கிடைத்தது: கதிர் 1. மணி 4. திருவள் ளுவர் ஆண்டு 1981 புரட்டாசி-4. (20-9-1950)

ஆசிரியர்: எம். பாஸ்கரனுர். செயங்கொண்ட சோழபுரம் இரத்ன அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப் பட்டது.

அளவு: 27 × 22 செ. மீ., பக்கங்கள் 8. தனி இதழ் அணு ஒன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று.

இவ்விதழ் திருவள்ளுவருடைய அடிச்சுவட்டிற் சென்று அவருடைய குறளை நாட்டிற் பரப்பவேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றியது. திருவள்ளுவர் காட்டுந் தெய்வம், புறநானூற்றுப் புலவர்கள் முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. பொதுவாக இவ்விதழ் எல்லா வகையான செய்திகளையும் வெளியிட்டது. (எஉ)

## 60. திராவிடக் கூட்டரசு - 1952

*பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 7. (31-10-1952)*

*ஆசிரியர் : சி. இலக்குவனார் எம். ஏ., எம். ஓ. எல். தஞ்சைக் கரந்தையில் இலக்கியம் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.*

*அளவு : 26 × 19 செ. மீ., பக்கங்கள் 8. தனியிதழ் விலை அணா 1. ஆண்டுக் கையொப்பம் ரூபா நான்கு.*

*இவ்விதழ் தி. மு. க. திராவிடக் கழகம் ஆகியவை ஒன்று சேர்ந்து வேலை செய்து திராவிடக் கூட்டரசை நாட்டவேண்டும் என்னும் எண்ணத்தோடு தோன்றி அத்துறையிற் சின்னாள் பணியாற்றியது.* (எங)

## 61. நகரமித்திரன் - 1952

*பார்வைக்குக் கிடைத்தது : ஓர் இதழ் (1952)*

*ஆசிரியர்: எஸ். மீனாட்சிசுந்தரம் பி.ஏ., எல்.டி., ஈரோடு சண்முகா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*அளவு: 28 × 21 செ. மீ., பக்கங்கள் 2. தனியிதழ் விலை காலணா.*

*இவ்விதழ் திராவிடக் கழகத்தாரின் கொள்கைகளைக் கிண்டல் செய்வதற்காகத் தோன்றியதாகத் தெரிகிறது. பண்டித நேருவின் பொன் மொழிகள் என்னும் தலைப்பில் சில மொழிகள் வெளியாகியுள்ளன.* (எச)

## 62. தீச்சுடர் - 1953

*பார்வைக்குக் கிடைத்தது: தீ 1. சுடர் 23. (3-9-1954)*

*ஆசிரியர் : சி. பி. சிற்றரசு. திருச்சி தெப்பக்குளம் சிவாசி அச்சகத்தில் ஆசிரியரால் அச்சிடப்பட்டு வெளியாகியது.*

அளவு 28 X 21 செ. மீ., தனியிதழ் அணா இரண்டு ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஆறு.

திராவிடக் கழகத்தை ஆதரித்துப் பெரியார்க்குத் துணைபுரிவதற்குப் பல செய்தித்தாள்கள் தோன்றினாற் போல் தி. மு. கழகத்தை ஆதரித்து அண்ணாவுக்குத் துணைபுரிவதற்கும் பல செய்தித் தாள்கள் தோன்றின. அவற்றுள் ஒன்று இந்தத் தீச்சுடர். அறிஞர் அண்ணாவுக் குத் துணையாக இவ்வேடு நல்ல துணை செய்தது. (எரு)

## 63. மக்கள் சக்தி - 1953

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 7. இதழ் 1. (18-10-1959)

ஆசிரியர்கள், எம். கே. மங்களா, பொன்னம்பலம், ஜி. கோபால்சாமி. நிர்வாக ஆசிரியர்: என். எஸ். டி. முத்தையா. நிருவாக ஆசிரியரால் திருநெல்வேலி வாகை யடிமுக்கு ஆண்டாள் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு 24 x 19 செ. மீ., பக்கங்கள் 12. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறேகால்.

இவ்விதழ் நாட்டு முன்னேற்றத்தை நாடி உழைப் பதற்காக வெளிப் போந்தது. பொதுவுடைமைக் கொள்கை யையும், பிற தீய சக்திகளையும் ஒழித்துக் கட்டுவதற்கு மக்கள் தங்கள் சக்தியைப் பயன்படுத்த வேண்டுமென்று பாடுபட்டது. (எசு)

## 64. சங்கநாதம் - 1954

பார்வைக்குக் கிடைத்தது: சங்கு 1. நாதம் 13. (26-9-1954)

ஆசிரியர்: கு. சேதுராமன், துணையாசிரியர்: திலகம் இரகுநாதன். திருச்சிக்கடுத்த உறையூர் இந்தியா பிரிண்டிங்

அச்சுக்கூடத்தில் டி. எஸ். தட்சிணாமூர்த்தியால் அச்சிடப் பட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு 27 × 21 செ. மீ., பக்கங்கள் 12. தனியிதழ் அணா ஒன்றரை. ஆண்டுக் கையொப்பம் ரூபா காலரை.

இவ்விதழ் தன்னை முற்போக்குப் பத்திரிகை என்று குறிப்பிட்டுள்ளது. எக்கட்சிக் கொள்கைகளையும் இது பின் பற்றியதாகத் தெரியவில்லை. ஆகவே தனது இச்சை வழியிற் சென்றது என்று கொள்ளவேண்டும். (எஎ)

## 65. இன்பம் - 1954

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. (26-12-1954.)

ஆசிரியர்: கே. இராசகோபால்(கபிலன்). ஆசிரியரால் வெளியிடப்பட்ட இவ்விதழ் அரசு என்பவரால் தமது சென்னை அரசு ஆர்ட்ஸ் அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

அளவு 38 × 25 செ. மீ. பக்கங்கள் 8. தனியிதழ் அணா ஒன்றரை. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஐந்து.

இவ்விதழ் மக்களை இன்பத்தில் ஆழ்த்தவேண்டும் என்னும் நோக்கத்தோடு புதுமையான பல கட்டுரைகளைத் தாங்கிக்கொண்டு வெளியாகியது. இராமாயணத்திற்கு நமது ரண சிகிச்சை முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகியுள்ளன. (எஅ)

## 66. ஈரோட்டுப்பாதை - 1954

பார்வைக்குக் கிடைத்தது: மைல் 5. நடை 18. (7-12-1958)

ஆசிரியர்: ப. சண்முகவேலாயுதன். ஆசிரியரால் ஈரோடு மனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு 26 × 19 செ. மீ., பக்கங்கள் 8. தனியிதழ் எட்டுப் புதுக்காசு.

ஈரோட்டுப் பாதை என்ற பெயரைக் கேட்டதுமே இவ்விதழின் கொள்கையை உணர்ந்து கொள்ளலாம். இது பெரியார் வழியைப் பின்பற்றிச் சிறிது காலம் நடைபெற்று பெரியார் பாதையே சரியான பாதையென்று வற்புறுத்தியது. (எக)

## 67. பெரியார் குரல் - 1954

பார்வைக்குக் கிடைத்தது: குரல் 1. இதழ் 5. (25-7-1954)

ஆசிரியர்: ஆர். இராசகோபால். பெங்களூர் பிரகாஷ் அச்சகத்தில் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது.

அளவு 29 × 22 செ. மீ. பக்கங்கள் 12. தனியிதழ் விலை அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் 6.

பெரியார் குரல் என்னும் பெயரைக் கொண்டே இவ்விதழ் எதற்காகத் தோன்றியதென்பதை எல்லோரும் எளிதில் உணர்ந்துகொள்ளலாம். இதழின் சில பக்கங்கள் ஆங்கிலத்திலும் வெளியாயின. (அ0)

## 68. லோட்டஸ் - 1954

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 34. (1-5-55)

ஆசிரியர்: பி. இராமசாமி. சென்னை சித்ரா பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

36 × 25 செ. மீ., அளவுப் பக்கங்கள் 12. தனியிதழ் அணா இரண்டு.

இவ்விதழ் கலை, இலக்கிய, சமுதாய சீர்திருத்த வார வெளியீடு என்று தன்னைக் குறிப்பிட்டுக் கொண்டதாயினும் உண்மை அதுவன்று. சில ஆண்டுகளுக்கு முன் குறுக்கெழுத்துப் போட்டி என்னும் பேரில் மக்கள் ஏமாற்றப்

பகுதி ௩

# திங்களுக்கு இருமுறை இதழ்கள்
(1841—1957)

## 1. உதயதாரகை - 1841

*பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 3. (4-2-1841)*

*ஆசிரியர்கள் ஹென்றிமார்டின், செத்பேசன் ஆகிய இருவர். யாழ்ப்பாணம் அமெரிக்கன் மிஷன் அச்சகத்தில் ஈஸ்ட்மேன் ஸ்ட்ராங்மைமர் என்பவரால் அச்சியற்றி வெளியிடப்பட்டது.*

*அளவு 27 × 21 செ. மீ., பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் 4 ஷில்லிங். தனியிதழ் இரண்டு பென்சு.*

*பார்வைக்குக் கிடைத்த இதழ்களுள் மிகப்பழமை வாய்ந்த இதழ் இதுவேயாகும். இஃது இற்றைக்கு நூற்றியிருபதாண்டுகட்கு முன்னர்த் தொடங்கப்பெற்றிருக்கிறது. 1930 ஆம் ஆண்டில் கிழமையிதழாக வெளிவந்தது. ஆங்கிலத்திலும் தமிழிலும் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. பெரும்பான்மையும் ஆங்கிலக் கட்டுரைகளின் தமிழ்மொழி பெயர்ப்பே வெளியிடப்பட்டது. தமிழ்நூல்களைப்பற்றித் தமிழறிஞர்கள் பல கட்டுரைகள் எழுதியுள்ளனர். இதழ்கள் வெளிவருதலில் முன்னேற்றமில்லாத அந்தக் காலத்தில் இவ்விதழ் பொன்னெனப் போற்றப் பெற்றது.* (அரு)

## 2. இலங்கைநேசன் - 1848

*பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 31. இலக்கம் 4. 1879 ஆம் ஆண்டில் வெளியானது.*

*ஆசிரியர் குழு ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. எஸ். முத்துச்சாமி என்பவரால் யாழ்ப்பாணத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

அளவு 42 × 28 செ. மீ. பக்கங்கள் 4. தனியிதழ் சதம் 12. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டரை.

இலங்கை மக்களின் முன்னேற்றத்தை நாடி இவ்விதழ் வெளியிடப்பட்டது. உலகத்துச் செய்திகளெல்லாம் இதில் சுருக்கமாக வெளியாகியது. (அசு)

## 3. சுகுணபோதினி - 1883

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 6. இதழ் 6.

ஆசிரியர்: பெயர் தெரியவில்லை. சென்னை ஏ. எல். வி. அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு $23\frac{1}{2} \times 14\frac{1}{2}$ செ. மீ., ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று.

இவ்விதழ் பெண்களின் முன்னேற்றத்தை நாடிப் பெண் கல்வி முதலிய கட்டுரைகளைக் கொண்டு வெளியாகியது. மூலையில் பதுங்கியிருந்த மாதர்களை முன்னுக்குக் கொண்டுவரவேண்டுமென்பதே இவ்விதழின் முதன்மையான நோக்கமாக இருந்தது. (அஎ)

## 4. சன்மார்க்கபோதினி - 1885

பார்வைக்குக் கிடைத்தது: பதினொன்றும் புத்தகத்தில் ஓரிதழ்; 1895 ஆம் ஆண்டு வெளியானது.

ஆசிரியர் பெயர் அச்சிட்டவர் பெயர் முதலியன அறிய முடியவில்லை. யாழ்ப்பாணத்தில் இருந்து வெளிவந்தது.

அளவு 43 × 25 செ. மீ., பக்கங்கள் 8. விலை தெரியவில்லை.

சன்மார்க்கத்தை உலகில் பரப்பி மக்களை நல்வழியில் திருப்பவேண்டும்; மக்கள் சிறந்து வாழவேண்டும் என்பதையே இவ்விதழ் தனது கொள்கையாகக் கொண்டிருந்தது. (அஅ)

## 5. சுக சீவனி - 1887

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 8. பகுதி 10. (15-8-94)

ஆசிரியர்: சி. பி. சோமசுந்தர முதலியார். பெங்களூர் கருணாநிதி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு 45 × 27 செ. மீ., ஆண்டுக் கையொப்பம் ஒரு ரூபாய் இரண்டணா. தனியிதழ் விலை அணா இரண்டு.

இவ்விதழில் கட்டுரைகள் ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளியிடப்பட்டுள்ளன. செய்திக் குறிப்புக்களும் ஆங்கிலம் தமிழ் இரண்டு மொழிகளினும் வெளியாகியுள்ளன. இவ்விதழின் நோக்கம் ஆங்கிலம் தமிழ் இரு மொழிகளினுந் தொண்டு புரிவதாகும். (அசு)

## 6. பிரமவித்தியா - 1887

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 6. இலக்கம் 14. நந்தன ஆண்டு ஆவணித் திங்கள் எட்டாம் நாள் (22-8-1892)

ஆசிரியர்: சி. ஆர். சீநிவாச சாத்திரியார். இவ்விதழ் இராமநாதபுரம் அரசர் பாஸ்கர சேதுபதியின் ஆதரவின் கீழ்ச் சிதம்பரம் செங்கழுநீர்ப் பிள்ளையார் கோயில் தெருவில் பிரமவித்தியா அச்சகத்தில் அச்சிட்டு வெளியாகியது.

அளவு 27 × 22 செ. மீ., பக்கங்கள் 14. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று.

இது தன்னுடைய பெயரைப் பெரிய சமஸ்க்ருத எழுத்தில் எழுதியிருக்கிறது. பிரமவித்தையாவது பிரமத்தை உணரும் கலையாகும். பிரமவித்தையைக் கற்பிப்பது வேதாந்தம். இவ்விதழும் வேதாந்த நூல்களை விரிவான கட்டுரைகளாக எழுதிப் போதித்தது. இதன் காலத்தில் வேதாந்த சித்தாந்தப் போரும் மிகக் கடுமையாக நடைபெற்றது. (க0)

## 7. ஞானாமிர்தம் - 1888

பார்வைக்குக் கிடைத்தது புத்தகம் 1. இலக்கம் 1. சர்வதாரி யாண்டு வைகாசித் திங்கள் (1888-மே)

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சென்னை சித்தாந்த வித்தியாநுபாலன அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளியாகி யுள்ளது.

அளவு செ. மீ. 43 × 28, பக்கங்கள் 4. விலை தெரியவில்லை.

இவ்விதழ் சைவ சமய வளர்ச்சியை நாடி வெளியாகியது. இவ்விதழில் வைதிக சித்தாந்தப் பிரகரணம் பரமதப் பிரகரணம் முதலிய கட்டுரைகள் வெளியாகி யுள்ளன. (௪௯௧)

## 8. விசயத்துவசம் - 1893

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 2. இலக்கம் 21. சய ஆண்டு புரட்டாசித் திங்கள் (1894 அக்டோபர்)

ஆசிரியர்: சி. தாமோதரம் பிள்ளை. பாளையங் கோட்டை சரசுவதி விலாசம் அச்சகத்தில் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது.

அளவு 43 × 28 செ. மீ., பக்கங்கள் 4. ஆண்டுக் கட்டணம் உள்ளூரார்க்கு அணா எட்டு வெளியூரார்க்கு ரூ. 1

இவ்விதழ் சைவ சமய வளர்ச்சி நாடி வெளியாகியது. சைவசித்தாந்தக் கட்டுரைகள் சில வெளியாகியதோடு உலக நிகழ்ச்சிகள் நாட்டு நடப்புகள் முதலியனவும் வெளியாயின. (௯௨)

## 9. லோகோபகாரி - 1897

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 54. இதழ் 5. (15-7-50)

ஆசிரியர் : சாமி சிதம்பரனார். சென்னை மாடல் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 13½ செ. மீ., பக்கங்கள் 72. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் 6. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் நடராசய்யர் என்பவரால் 1897 இல் கிழமை இதழாகத் தொடங்கப் பெற்றுப் பலரால் நடத்தப் பெற்றுப் பலவகையான கொள்கையோடு விளங்கி வந்திருக்கிறது. இப்பொழுது வெளிவந்துள்ள இதழின் நிலை சிறுகதைகள் இலக்கியக் கட்டுரைகள் முதலியவைகளை வெளியிடவேண்டுமென்பதாகும். (சுரு)

## 10. சுதேசநாட்டியம் - 1902

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 19. இதழ் 3. (31-10-20)

ஆசிரியர் : எஸ். நல்லதம்பி. யாழ்ப்பாணம் சாரதா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 44½ × 28½ செ. மீ. பக்கங்கள். ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டரை.

சுதேச நாட்டியம் எனின் நம் நாட்டுக் கூத்து எனப் பொருள்படும். இவ்விதழில், உடற் கூற்றின் சிறப்பு, ஆதாரங்களின் அமைப்பு முதலிய கட்டுரைகள் வெளியாயின. (சுச)

## 11. விவேகாநந்தன் - 1902

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 3. சங்கியை 19. குரோதன ஆண்டு புரட்டாசித் திங்கள் (1904 அக்டோபர்.)

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இளைய தம்பி என்பவரால் யாழ்ப்பாணம் விவேகாநந்தா அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது.

அளவு : 43 × 28 செ. மீ. பக்கங்கள் 4. தனியிதழ் 10 சதம்; ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்று.

இவ்விதழ் சமய வளர்ச்சிக்காக உழைக்கத் தோன்றியது. உள்ளிரண்டு பக்கங்கள் தமிழ்மொழியாகவும் வெளியிரண்டு பக்கங்கள் ஆங்கிலமாகவும் அமைந்துள்ளன. (௯௫)

## 12. இந்துவர்த்தமானி - 1904

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 1. இலக்கம் 10. குரோதி யாண்டு பங்குனித் திங்கள். (18-3-1905)

ஆசிரியர் : டி. எஸ். இராகவாச்சாரியார். திருவாரூர் எட்வர்டு அச்சுக்கூடத்தில் அரங்கசாமிப் பிள்ளையால் அச்சிடப்பட்டு ஆர். கந்தசாமிப் பிள்ளையால் நாகபட்டினத்தில் இருந்து வெளியிடப்பெற்றது.

அளவு : 45 × 28 செ. மீ., பக்கங்கள் 4. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இவ்விதழ் தஞ்சை மாவட்டத்துச் செய்திகளை பிற மாவட்டங்கட்குத் தெரியப்படுத்த வேண்டுமென்னும் நோக்கமுடையதாய்த் தோன்றி அவ்வாறே தெரிவித்து வந்தது. (௯௬)

## 13. குருசந்திரோதயம் - 1908

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. இதழ் 19. (1908)

ஆசிரியர் ; சு. அ. செல்வத்துரைப் பிள்ளை. யாழ்ப்பாணம் திருமகள் விலாச அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 44 × 28 செ. மீ., பக்கங்கள். ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தனியிதழ் ஆறு சதம்.

இவ்விதழ் கட்டுரைகளையும் கதைகளையும் வெளியிட்டு மக்களுக்குத் தொண்டுபுரியத் தோன்றியது. ஆயினும் தக்கவாறு பணிபுரியாது சின்னாள் வெளிவந்து மறைந்தது. (௯௭)

## 14. ஞானசித்தி - 1908

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. இதழ் 15. (16-10-1908)

ஆசிரியர்: பெயர் தெரியவில்லை. யாழ்ப்பாணத்தில் இருந்து வெளியாகியது.

அளவு: 28 × 22 செ. மீ., பக்கங்கள். விலை விவரந் தெரியவில்லை.

சைவசித்தாந்தத்தைப் பரப்பும் நோக்கத்தோடு இவ்விதழ் வெளியாகியது. ஆணவமலம், முப்பொருளும் அநாதியெனல் முதலிய பல கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (௬௭)

## 15. உலகரகசியம் - 1921

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 1. இலக்கம் 2. துன்மதி யாண்டு ஐப்பசித் திங்கள் (1921 நவம்பர்)

ஆசிரியர்: கோவை சி. கு. நாராயணசாமி முதலியார். ஈரோடு சுந்தர விலாச அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $22 \times 14\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 76. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஐந்து. தனியிதழ் விலை அணா நான்கு.

இவ்விதழ் உலகத்தில் நிகழ்ந்து மறைந்துபோய்விடக் கூடிய நிலையில் உள்ள செய்திகளை யெல்லாம் மக்கட்கு அறிவிக்கவேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியாகியது. தமிழ்ப் பெருமை, தமிழறிஞர் வரலாறு, தமிழாராய்ச்சி, தமிழ் மொழிபெயர்ப்பு, நாடகங்கள், விகடங்கள் முதலியனவும் இவ்விதழில் வெளியாயின. (௬௬)

## 16. தன்வந்தரி - 1923

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 1. சஞ்சிகை 8. உருத்ரோத்காரி யாண்டு ஆவணித் திங்கள் (24-8-1923)

ஆசிரியர்: டாக்டர் ஏ. லட்சுமீபதி பீ. ஏ. எம். பி. ஸி. எம். சென்னை ஆநந்ததீர்த்தா அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப் பெற்றது.

அளவு: 23 × 16 செ. மீ., பக்கங்கள் 12. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஐந்து.

இஃதொரு மருத்துவ இதழ். சென்னை ஆயுர்வேதக் கல்லூரியின் சார்பில் வெளியிடப் பெற்றது. இதில் நோயைப்பற்றிய கட்டுரைகளும் நோயைப் போக்குவதற் கான மருந்து முறைபற்றிய கட்டுரைகளும் பலவகையான மருந்துகளின் விளம்பரங்களும் வெளியாயின. (க00)

## 17. காந்தி - 1925

பார்வைக்குக் கிடைத்தது: மாலை 10. மலர் 9. பவ ஆண்டு ஆனித்திங்கள் (ஜூன் 1934)

ஆசிரியர்: தெ. ச. சொக்கலிங்கம். தமிழ்நாடு அச்ச கத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: 25 × 17 செ. மீ., பக்கங்கள் 40. தனியிதழ் அணு ஒன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

காந்தியின் பெயரைத் தாங்கிய இவ்விதழ் காங்கிரஸ் கொள்கையைத் தாங்கி நாட்டு விடுதலைக்காக மிகவும் உழைத்தது. மற்றும் மொழிவளர்ச்சி, வரலாறு முதலியன பற்றிய செய்திகளையுங்கொண்டு சிறந்த தொண்டு செய்தது. (க0க)

## 18. தேசாபிமானி - 1927

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. (13-6-1927) கொல்லம் (30-10-102)

ஆசிரியர்: எஸ். எம். பர்ணண்டோ. துணையாசிரியர்: என். எஸ். ஆர். சுப்பிரமணிய அய்யர். நாகர்கோயில் தாஸ் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 43 × 29 செ. மீ., பக்கம் 4. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டரை.

இவ்விதழ் சேர மண்டலத்தின் சிறப்பை வளர்ப்பதற்காக, அந்நாட்டின் சிறப்பு, அந்நாட்டு மக்கள் மேற்கொள்ள வேண்டிய ஒழுகலாறுகள் முதலியவைகளைப்பற்றிய கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்தது. (கOஉ)

## 19. வேளாள வாலிபன் - 1928

பார்வைக்குக் கிடைத்தது: மலர்-1, இதழ் 9, விபவ ஆண்டு மாசித்திங்கள் (23-2-1929)

ஆசிரியர்: கிருட்டிணசாமிக் கவுண்டர். கோயமுத்தூர் வேளாளர் அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டு முத்துரங்கசாமிக கவுண்டர் என்பவரால் வெளியிடப்பட்டது.

அளவு: 36 × 25 செ. மீ., பக்கம் 10. ஆண்டுக கட்டணம் ரூபா மூன்று.

இது வேளாள குலத்தினரின் முன்னேற்றங் கருதி வெளியிடப்பட்டது. ஆகவே வேளாள சமூகத்தாரின் கூட்டம் நடவடிக்கை முதலியவைகளைப்பற்றிய செய்திகளைத் தாராளமாகத் தாங்கி வெளிவந்தது. வேளாளர் புராணம் முதலிய குலச்சிறப்பும் இதில் வெளியாகியது. (கO௯)

## 20. தமிழ்மணம் - 1933

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி-1 இதழ் 5. (1-5-1933)

ஆசிரியர்: தூத்துக்குடி சு. அ. சுப்பராய பிள்ளை. தூத்துக்குடி முருகவிலாசம் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

அளவு: $27\frac{1}{2} \times 20\frac{1}{2}$ செ. மீ., இவ்விதழின் ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டரை. தனியிதழ் விலை அணா இரண்டு.

இவ்விதழ், நாட்டிலே செந்தமிழின் சீரிய சிறப்பு நன்கு பரவுமாறு காலத்திற்கேற்ற கட்டுரைகளால் பணி புரிய வேண்டுமென்னும் நோக்கத்தோடு தோன்றியது. "தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும்வகை செய்தல் வேண்டும்" என்பது இதனுடைய முதன்மையான குறிக்கோளாகவிருந்தது. (௧0௪)

## 21. தியாகி - 1936

பார்வைக்குக் கிடைத்தது: மலர் *10.* இதழ் *22.* *(1-3-1946)*

ஆசிரியர்: இராம சடகோபன். விழுப்புரம் தியாகி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் *48.* ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஆறு. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் அரசியலில் ஈடுபட்டுத் தொண்டு புரிதலோடு இலக்கியத்துறையிலும் தொண்டு புரிய வேண்டுமென்பதை நோக்கமாகக் கொண்டு வெளிவந்தது. அரசியல் கட்டுரைகள் பல வெளிவந்ததோடு, கம்பரும் வால்மீகரும், சீதையின் பாதை, வள்ளுவர் வாக்கு முதலிய இலக்கியக் கட்டுரைகளும் வெளியாயின. (௧0௫)

## 22. கிராம ஊழியன் - 1937

பார்வைக்குக் கிடைத்தது: மலர் *10.* இதழ் *15.* *(16-5-1946)*

ஆசிரியர்: வல்லிக்கண்ணன். துறையூர் ஊழியன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $21 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் *56.* கையொப்பம் ரூபாய் ஆறு. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் சிற்றூர் மக்களுக்குச் சிறந்த பணிபுரிய வேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றியது. காலத்திற்கேற்றவாறு நாட்டுப்பணி, நகைச்சுவை, அரசியல்,

முதலிய பலவகையான கட்டுரைகளையும் தன்னகத்தே கொண்டு தோன்றிப் பத்தாண்டுகளுக்குமேல் பணி செய்தது. (கoசு)

## 23. நவயுவன் - 1940

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 7. இதழ் 2. (15-5-1946)

ஆசிரியர்: வீர. சிதம்பரம். சென்னை நவயுவன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஆறு. தனியிதழ் விலை அணா நான்கு.

புதுமுறையில் நல்ல நடையில் காலத்திற் கேற்றவாறு சீரிய கட்டுரை, கதை முதலியவைகளை வெளியிட வேண்டும் என்னும் நோக்கத்தோடு இவ்விதழ் வெளியாகியது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் இதழின் பெயருக் கேற்பப் புதுமையான பகுதிகள் பல வெளியாகியுள்ளன. (கoஎ)

## 24. திருமகள் - 1941

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 5. இதழ் 11. (5-5-1946)

ஆசிரியர்: என். ஆர். பத்மநாபன். இராமச்சந்திர புரம், மதராஸ் ரிப்பன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு: $21 \times 14$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஆறு. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் நல்ல கட்டுரைகள் கதைகள் அரசியல் கருத்துக்கள் ஆகியவைகளை மக்கட்கு வழங்க வேண்டும் என்பதனைத் தனது நோக்கமாகக்கொண்டு வெளியாகியது. இதன் ஆசிரியர்கள் அடிக்கடி மாறியதாகத் தெரிகிறது. (கoஅ)

## 25. கலாமோகினி - 1943

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 5. இதழ் 2. 1947 மே 1.

ஆசிரியர் : வி. ஆர். இராசகோபாலன். சென்னை ஆழ்வார்பேட்டை சரசுவதி விலாசம் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 18 × 12.செ. மீ., பக்கங்கள் 80. தனியிதழ் விலை அணு எட்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா பன்னிரண்டு.

இவ்விதழ் தன்னை இலக்கிய முன்னணி என்று குறிப்பிட்டுக் கொள்ளுகிறது. இலக்கிய சேவை செய்வதில் முன்னணியில் நிற்கவேண்டுமென்பதே இதனுடைய நோக்கம். இதில் கட்டுரைகள், கவிதைகள், படவிமர்சனங்கள், முதலியவை வெளியாயின. (௧0௬)

## 26. வீரசக்தி - 1944

பார்வைக்குக் கிடைத்தது மலர் 2. இதழ் 21. பார்த்திப ஆண்டு ஐப்பசித் திங்கள் 16 ஆம் நாள் (1-11-55) வெளியானது.

ஆசிரியர் : வி. அரங்கசாமி. திருப்பூர் கருணம்பிகை அச்சகத்தில் அச்சிட்டுக் கோயமுத்தூரிலிருந்து வெளியிட்டது.

அளவு : $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 44. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஆறு. தனியிதழ் அணு நான்கு.

தமிழ்நாட்டு மக்கள் வீரமும் விழிப்புணர்ச்சியும் பெற வேண்டும் என்பதை இவ்விதழ் தனது நோக்கமாகக் கொண்டு வெளியாகியது. இதில் காலத்திற்கேற்ற பல கட்டுரைகளும் கதைகளும் வெளியாயின. நாட்டு விடுதலையைக் குறிவைத்து உழைத்த இதழ்களில் இதுவும் ஒன்று. (௧௧0)

## 27. இலக்கியம் - 1947

பார்வைக்குக் கிடைத்தது : மாலை 1. மலர் 1. சர்வசித்து ஆண்டு சித்திரைத்திங்கள். (14-4-1947)

ஆசிரியர் : சி. இலக்குவன். எம். ஓ. எல். திருநெல்வேலி. திருநெல்வேலி இம்பீரியல் அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

அளவு: 25 × 19 செ. மீ., பக்கங்கள் 16. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஆறு. தனி இதழ் விலை அணு நான்கு.

இவ்விதழ் தமிழ்நாட்டில் தமிழ் இலக்கியத்தைத் தக்க வகையில் பரப்பித் தமிழ்த் தொண்டு செய்யுமாறு புறப்பட்டது. ஆசிரியர் இதனுடைய நோக்கத்தை, "பழந்தமிழ் இலக்கியங்களைத் தமிழரிடையே பரப்பிப் புதுத் தமிழ் இலக்கியங்களைப் படைப்பதில் முனைந்து நிற்பதே நமது குறிக்கோள்" என்று குறிப்பிட்டுள்ளார். முதல் இதழிலேயே சில நல்ல கட்டுரைகள் வெளியாயின. (கககக)

## 28. கதிரவன் - 1947

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. இதழ் 15. (1-2-1948)

ஆசிரியர் : புலவர் பு. செல்வராஜ். சென்னை பிரீ பிரிண்டர்ஸில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 24 × 16. செ. மீ., பக்கங்கள் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் 9. தனியிதழ் அணு ஆறு.

தென்னாட்டின் நன்மைக்குத் தோன்றிய இதழ்களில் இதுவும் ஒன்று. இதன்கண் அரசியல், சமூகம், பொருளாதாரம் முதலியன பற்றிய கட்டுரைகள் வெளியாயின. இதழ்களுக்கு வேண்டிய பொதுவான கூறுகள் யாவும் இதன்கண் அமைந்திருந்தன. (கக௨)

## 29. காயத்ரீ - 1947

*பார்வைக்குக் கிடைத்தது: கொத்து 1. மலர் 1. (5-2-1947)*

*பதிப்பாசிரியர்: டி. கே. எஸ். பாரதி. சென்னை வினோதன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வில்லிவாக்கத்திலிருந்து வெளியிடப்பட்டது.*

*அளவு: 18 × 12 செ. மீ., பக்கங்கள் 42. தனி இதழ் அணா 4. ஆண்டுக் கையொப்பம் 6-12-0.*

*இவ்விதழ் கையினுற்செய்யப்பெற்ற தாளில் அச்சிடப்பட்டுள்ளது. அரிய கட்டுரைகள் பலவற்றை வெளியிட வேண்டுமென்பதே இவ்விதழின் நோக்கம். தத்துவ ஆராய்ச்சி, காயத்ரீ விளக்கம் முதலிய பல கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகியுள்ளன. சுந்தரராசப் புலவர், வ. சு. செங்கல்வராயபிள்ளை முதலியோர் கட்டுரைகளை எழுதியுள்ளனர்.* (கக௩.)

## 30. சேரநாடு - 1947

*பார்வைக்குக் கிடைத்தது: மலை 1. அருவி 2. விய ஆண்டு, தைத் திங்கள் (1-2-1947)*

*ஆசிரியர்: வித்துவான் ஜி. சதாணந்தம். காமாட்சி பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*அளவு: 21½ × 14 செ. மீ., பக்கங்கள் 30. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஆறு. தனியிதழ் விலை அணா நான்கு.*

*இவ்விதழ் சேரநாட்டு மக்களுக்குச் சிறந்த கட்டுரைகளையும் கதைகள் செய்திகள் முதலியவைகளையும் வழங்கிப் பணிபுரியத் தோன்றியது. சிந்தனை உலகம், கடல் யாத்திரை, இழையும் மின்னலும், கலைச்செல்வர் முதலிய பல நல்ல கட்டுரைகள் இதில் வெளிவந்துள்ளன.* (ககச)

## 31. தமிழ்முரசு - 1947

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 23 1-2-1947.

ஆசிரியர்: ம. பொ. சிவஞானம். செங்குந்தமித்திரன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 18 × 12. செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஆறு, தனியிதழ் அணு நான்கு.

தமிழ்நாட்டையும் தமிழ்மொழியையும் நன்கு பாது காத்தல் வேண்டும். பிறரால் நம் தமிழ்மொழியோ அல்லது நாடோ நலிந்துபோகுமாறு விட்டுவிடக்கூடாது என்பதனையே முதன்மையான குறிக்கோளாகக் கொண்டு இவ்விதழ் வெளியிடப்பட்டது. (கக௫)

## 32. ராம ராஜ்யா - 1947

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 6. (30-1-1948)

ஆசிரியர்: கே. வேங்கடாச்சாரி எல். எம். எஸ் கும்பகோணம் வீக்ளி நோட்ஸ் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 21 × 13 செ. மீ., பக்கங்கள் 48. தனி இதழ் அணு மூன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் நாலரை.

இவ்விதழ் காந்தியடிகள் கண்ட இராம ராஜ்யக் கனவை நிறைவேற்றுவதற்காகத் தோன்றி அவருடைய அறிவுரைகளை உலகத்தில் பரப்பியது. பெரும்பான்மையான கட்டுரைகள் அடிகளாரின் அடிச்சுவட்டைப் பின்பற்றியவை. எவ்வித சுயநலத்தையும் கருதாது பொதுநலத்துக்காகவே உழைத்தது. (ககசு)

## •33. காலம் - 1948

*1948 ஆம் ஆண்டில் வெளியாகியது.*

*ஆசிரியர் : ஆர். சிவஞானம். சென்னை பெரிய மெட்டில் இருந்து வெளியிடப்பட்டது. தனி இதழ் அணா மூன்று.*

*காலத்திற்கேற்ற முறையில் தமிழிலே இதுவரை வெளிவராத புதுவகையில் பற்பல நிழற் படங்களுடனும் வெளியுலகச் செய்திகளுடனும், விளக்கக் கட்டுரைகளுடனும் அரசியல் தலைவர்களின் கருத்துரைகளுடனும், கதைகளுடனும் தமிழ்க்கலை வளர்ச்சிக்கும், தமிழ்மக்களின் பொது அறிவு வளர்ச்சிக்கும் ஏற்றவகையில் தோன்றி உழைத்தது.* (கக௭)

## 34. பிரசாபாலனம் - 1948

*பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 2. (1948 சூன் திங்கள்)*

*சென்னை அரண்மனைக்காரன் தெரு சௌத் இந்தியன் பிரசில் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது.*

*அளவு : 21 × 13 செ. மீ., பக்கங்கள் 32. தனி இதழ் அணா நான்கு.*

*இந்துநேசன் வாரப்பத்திரிகையாயிருந்தது இப்போது "பிரசாபாலனம் என்னும் பெயருடன் பட்சப் பத்திரிகையாக வெளிவருகின்றது. காரணம் முன்னமே குறிக்கப் பட்டுள்ளது. 'பிரசாபாலனம்' இராசியத்துறையில் போதிய உழைப்பெடுத்துத் தொண்டுபுரியும்." என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார்.* (கக௮)

## 35. விஸ்வகலாநிதி - 1948

*பார்வைக்குக் கிடைத்தது : மலர் 4. இதழ் 9, 10. (1951-மே)*

ரியர்: குலோத்தூரக ., எம். தெய்வசிகாமணி ஆச்சாரியார். சென்னை கமர்ஷியல் சிண்டிகேட் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: $27 \times 21\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 20. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று. தனி இதழ் கொடுப்பதில்லை.

இவ்விதழ் தென்னிந்திய விஸ்வகர்ம மத்திய மகாசங்க ஆதரவில் வெளியாகியது. இது சமூக வளர்ச்சிக்காகத் தோன்றியது. ஆயினும் பொதுப்பணியிலும் ஈடுபட்டு நாட்டுக்குச் சிறந்த தொண்டாற்றியது. (கக௯)

## 36. ராமபாணம் – 1949

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. இதழ் 1. (15-8-1949)

ஆசிரியர்: கே. சீனிவாசன். சென்னை சி. டி. சி. அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 24 × 18 செ. மீ., பக்கங்கள் 40. தனி இதழ் விலை அணு ஆறு.

ஆசிரியர் இதன் கொள்கையைக் குறிப்பிடும்போது, "ராமபாணம் நமது தேசத்தில் தினந்தினம் தலைவிரித்தாடும் அசுர சக்திகளான இலஞ்சம், சுயநலம், வஞ்சனை மிருகத்தனம் பொய் ஆகியவற்றின்மேற் பாய்ந்து ஊடுருவிச்செல்லும் பரிகார அம்பாக விளங்கும்" என்று குறிப்பிட்டிருக்கிறார். வேடிக்கைப் படங்கள் மிகுதியாக இதனில் வெளிவந்தன. கட்டுரைகளுஞ் சிறந்த கட்டுரைகளாகவே வெளிவந்தன. (கஉ0)

## 37. ஸன்மார்க்கம் – 1949

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1. (1949 பிப்ரவரி)

ஆசிரியர்: வே. நாராயணன், எம். ஏ., எம். எல். வெளியிட்டவர் கே. எஸ். சுப்பிரமணிய ஐயர். மயிலாப்பூர்

சன்மார்க்க ஆசிரமத்தில் இருந்து வெளியாகியது. இவ்விதழ் ஆங்கிலமும் தமிழுமாக அமைந்தது.

டிம்மியளவுப் பக்கம் 24. தனி இதழ் அணா நான்கு. ஆண்டுக் கட்டணம் ரூபா மூன்று.

மக்கள் நாத்திக வழியிற் சென்று அழிந்துவிடாமல் ஆத்திக வழியிற் சென்று இம்மை மறுமைப் பயன்களை யடைதற்கு வழிகாட்டவேண்டும் என்பதை இது நோக்கமாகக்கொண்டு வெளியாகியது. நாரி பஞ்சரத்தினம் என்னும் தலைப்பில் ஔவையார் புனிதவதியார் மங்கையர்க்கரசியார் முதலியோருடைய வரலாறுகள் வெளியாயின. (கஉக)

## 38. அனல் - 1950

பார்வைக்குக் கிடைத்தது: அனல் 1. காய்தல் 1. திருவள்ளுவர் ஆண்டு 1981 சித்திரை 23ல் (5-5-1950)

ஆசிரியை : இராமரத்தின-ஞானமாணிக்கம். நிர்வாக ஆசிரியர் வி. டி. பொன்னன். கோயமுத்தூர் வணிகர் அச்சகத்தில் அச்சிட்டு வி. ஆர். கிருட்டிணன் என்பவரால் வெளியிடப்பட்டது.

அளவு : 28 × 22செ. மீ., பக்கங்கள 10. தனி இதழ் ஓரணா.

இவ்விதழ் நாட்டு மக்கள் முன்னேற்றத்தைக் கருதி வெளியிடப்பட்டது. சமாதானம், சமத்துவம் முதலிய துறைகளில் உழைக்கத் தோன்றியது. முதலாளித்வ நாடுகளின் முயற்சி, சமூகத்திலே பெண்கள், முதலிய கட்டுரைகள் இவ்விதழிற் காணப்பெறுகின்றன. (கஉஉ)

## 39. ஆராய்ச்சிமணி - 1950

பார்வைக்குக் கிடைத்தது: மணி 1. ஓசை 1. (1-5-1950)

ஆசிரியர்: கே. கே. சாமி. திருச்சி உறையூர் சரசுவதி அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது. பொறுப்பாசிரியர் எம். எஸ். வேங்கடாசலம். கூட்டாசிரியர் களும் சிலர் இருந்தனர்.

அளவு: 21 × 13 செ. மீ., பக்கங்கள் 44. தனியிதழ் அணு மூன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா நாலரை.

இவ்விதழ் நேர்மை நீதி முதலியவைகளை நாட்டிலே பரப்புவதற்காகத் தோன்றியது. காங்கிரசின் சார்பாக நின்று தொண்டுபுரிவதே இவ்விதழின் நோக்கம். இதிற் பல கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (கஉரு)

## 40. சங்கொலி - 1954

பார்வைக்குக் கிடைத்தது: ஒலி 1. அலை 2. (20-8-1954)

ஆசிரியர்: மயிலை பா. சீனிவாசன். சென்னை சிவோதயம் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டு வெளியாகியது.

அளவு: 26 × 19 செ. மீ., பக்கங்கள் 8. தனியிதழ விலை அணு ஒன்று.

இது திராவிடக் கழகக் கொள்கையை நாட்டிலே பரப்பி அக் கழகத்தின் வளர்ச்சிக்காக உழைக்கத் தோன்றியது. காங்கிரஸ் தி. மு. க. முதலியவற்றின் கொள்கைகளைத் தாக்கி யெழுதியது. (கஉச)

## 41. தாய்நாடு - 1954

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 10. (5-9-1954)

ஆசிரியர்: கே. பி. சந்திரன். சென்னை தனிநாடு அச்சகத்தில் டி. துரைக்கண்ணு என்பவரால் அச்சிடப்பட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: 27 × 22 செ. மீ., பக்கங்கள் 12. தனியிதழ் விலை அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று.

இவ்விதழ் திராவிடக் கழகத்தின் கொள்கைகளை ஆதரித்து அக் கழகத்தைப் பலப்படுத்துவதற்குத் தோன்றியது. பெரியாரின் கொள்கைச் சிறப்பு முதலியவைகளை நாட்டிற் பரப்பியது. (கஉரு)

## 42. மன்னைச்செய்தி - 1957

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1. (15-10-1957)

ஆசிரியர்: உ. இராசகோபாலன். உதவி ஆசிரியர்: ஏ. எம். ஜி. சாரி. மன்னார்குடி மன்னைச் செய்தி அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

ராயல் அளவுப் பக்கம் 16. தனித்தாள் பத்துப் புதுக் காசு. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

மன்னை என்பது இராசமன்னார்குடி. இது தஞ்சை மாவட்டத்தில் உள்ள பெரிய தாலுகாப் பட்டணம். இவ்விதழ் இவ்வூரில் நிகழும் செய்திகளையுஞ் சுற்றுப் பக்கத்தில் உள்ள சிற்றூர்ச் செய்திகளையும் தமிழ்நாடு முழுவதற்கும் பரப்புவதற்காகத் தோன்றி எழெட்டுத் திங்கள் நடைபெற்றது. எதிர்பார்த்தவாறு போதிய ஆதரவு கிடைக்காதபடியால் நின்றுபோய்விட்டது. (கஉ௬)

பகுதி எ

# திங்கள் இதழ்கள்

(1860—1957)

## 1. தேசோபகாரி - 1860

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 34, இதழ் 9, (1894)

இது நாகர்கோயில் கிறித்துவ சங்கத்திலிருந்து வெளியாகியது. இலண்டன் மிஷன் பதிப்பகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு 21 × 14. செ. மீ., பக்கங்கள் 28. விலை குறிக்கப் படவில்லை.

கிறித்துவ சங்கத்தாரால் வெளிப்படுத்தப் பெற்ற இவ்விதழ் கிறித்துவ சமய வளர்ச்சிக்கான கட்டுரைகள் பலவற்றைத் தாங்கி வெளியாகியது. இவ்விதழில் காட்டன் கண்காணியார், உயிர்த்தெழுதல் முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. பிற்காலத்தில் பர்மாவில் இருந்து தேசோபகாரி என்னும் பெயரோடு கிழமையிதழொன்றும் வெளிவந்து மறைந்தது. (கஉஎ)

## 2. தத்துவ போதினி - 1864

பார்வைக்குக் கிடைத்தது : நான்காந் தொகுதி. 1867 ஆம் ஆண்டு வெளியானது. ஆசிரியர் க. துரைசாமி ஐயங்கார்.

சென்னை வேத சமாசத்திற்காகத், தத்துவபோதினி அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 16. விவரம் விளங்கவில்லை.

இவ்விதழ் தத்துவச் செய்திகளை மக்கட்கு விளக்குவ தற்காகவே தோன்றியது. தத்துவம் உணர்ந்த அறிஞர் கள் பலரால் எழுதப்பட்ட கட்டுரைகளைத் தாங்கி வெளி வந்தது. அறிஞர்களின் சிறந்த செய்யுட்கட்கு உண்மைப் பொருள்களை நன்கு விளக்கி யெழுதப்பட்ட கட்டுரைகள் இதில் வெளியாயின. (கஉ௮)

## 3. சத்திய வர்த்தமானி - 1870

பார்வைக்குக் கிடைத்தது: மலர் -8. இதழ் - 1. (1 - 1 - 1877)

ஆசிரியர்: வாஸ்பர்ன். பசுமலை லெனுக்ஸ் அச்ச கத்தில் அச்சியற்றி ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு $32 \times 21\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 4. ஆண்டுக் கையொப்பம் அணு எட்டு.

இவ்விதழ் ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளியாகியது. ஆங்கிலப்பகுதி சத்திய வர்த்தமானி யென்றும் தமிழ்ப் பகுதி நவயுகம் என்றும் வழங்கப்பட்டது. கட்டுரைகள் செய்திகள் முதலியன ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளி வந்தன. (கஉகூ)

## 4. நற்போதகம் - 1870

பார்வைக்குக் கிடைத்தது: மலர் - 1 இதழ் 10. 1870 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள்.

ஆசிரியர்: எல். வேதநாயகம் பிள்ளை. பாளையங் கோட்டைசர்ச்மிஷன் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு $20 \times 13$ செ. மீ., பக்கங்கள் 20. கையொப்ப விவரந் தெரியவில்லை.

இவ்விதழ் கிறித்துவ சமயக் கொள்கைகளை நாட்டிலே பரப்பி இந்து சமயத்தினரைக் கிறித்துவ சமயத்தில்

சேர்ப்பதற்குப் பெருமுயற்சி செய்ததாகும். இதனில் ஆதியாகம வியாக்கியானம், நற்கருணை விளக்கம், கிறிஸ்து வானவர் சொன்ன உவமைகள் முதலிய பல கட்டுரைகள் வெளியாயின. (௧௫௦)

## 5. கோயமுத்தூர் கலாநிதி – 1880

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் - 21. இலக்கம் - 1 1900 ஆண்டு சனவரித் திங்கள்.

ஆசிரியர் : சேலம் பகடால நரசிம்மலுநாயுடு. கோயமுத்தூர் கிரசண்ட் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு $20\frac{1}{2} \times 14$ செ. மி., பக்கங்கள் 14. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று. தனியிதழ் அணா மூன்று.

இவ்விதழ் இருபதாண்டுகள்வரை திங்களுக்கிருமுறை வெளியாயிற்று. பிறகு திங்களிதழாக மாறிற்று. இலக்கண இலக்கியங்கள், தருக்கம், மருத்துவம், வேதாந்தம் முதலியவைகளைப் பற்றிய கட்டுரைகளை வெளியிட்டு மக்கட்கு அறிவுநலத்தை வளர்க்கவேண்டும் என்பதே இவ்விதழின் முதன்மையான நோக்கமாக விருந்தது. (௧௫௧)

## 6. உபாத்தியாயர் - 1887

பார்வைக்குக் கிடைத்தது: மலர் - 2 இதழ் - 1. (செப்டம்பர் 1888)

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சென்னை அல்பினியன் அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு $21 \times 17$ செ. மி., பக்கங்கள் 16. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்று.

இவ்விதழ் ஆசிரியர்கட்கும் மாணவர்கட்கும் பயன் படவேண்டும் என்பதைக் குறிக்கோளாகக் கொண்டு வெளி யிடப்பட்டது. "யதா குரு: ததா சிஷ்ய" என்னும் வட

மொழிப் பழமொழியைத் தலைப்பிற் போட்டுக்கொண்டு இதனை "ஆசாரனெவ்வழி, மாணாக்கனவ்வழி" என்று தமிழி லும் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளது. (கஙஉ)

## 7. சத்தியதூதன் - 1887

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி - 1 இதழ் - 9 (1888 ஜூலை.)

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சென்னை வேப்பேரி, எஸ். பி. ஸி. கே. அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

அளவு $33 \times 20\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 4. தனியிதழ் விலை ஒருபை. 25 பிரதிகள் இரண்டணா.

இவ்விதழ கிறிந்து சமயக் கோட்பாடுகளை மக்களி டையே பரப்பி அவர்களைக் கிறித்துவர்களாக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியிடப்பட்டது. கட்டுரைகள் ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளியிடப்பட்டன. வர்த்த மானக் குறிப்புக்கள் என்னும் பெயரோடு நாட்டு நடப்புச் செய்திகளும் வெளிவந்தன. (கஙங)

## 8. மாதர் மித்திரி - 1887

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 1. இலக்கம் 1. 1887 ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள்.

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சென்னை வேப்பேரி மெதடிஸ்ட் எப்பிஸ் கோப்பல் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு $24 \times 18$. செ. மீ., பக்கங்கள் 12. விலைவிவரம் குறிப்பிடப்படவில்லை:

இவ்விதழ் கிறித்துவ சமயக் கொள்கைகளைப் பரப்பும் நோக்கத்துடன் வெளியாகியது. மாதர் மித்திரி யெனின் பெண்கட்கு நட்புடையவள் என்பது பொருள். பெரும் பாலும் பெண்கள் தொடர்பான செய்திகளே இதில் வெளியாயின. (கஙச)

## 9. ஸ்ரீலோகரஞ்சனி – 1887

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 10 இதழ் 3. 1896 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள்.

ஆசிரியர்: சி. முனுசாமி முதலியார். பெல்லாரியில் நியூட்ரல் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு $24\frac{1}{2} \times 18\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் 16. ஆண்டுக் கையொப்பம் மாணவர்கட்கு ரூபாய் ஒன்றேகால் மற்றவர்கட்கு ரூபாய் இரண்டு.

இவ்விதழ் சமயச் சார்புடன் தோன்றி வடமொழி நூல் பொருளைத் தழுவித் தமிழில் வெளியாகியது. பிரபோத நிடதம், விசிட்டாத்வைதம், விலைமாதர் விலக்கம், சரீர சுகத்தின் மேன்மை முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகியுள்ளன. (கஙரு)

## 10. பெண்மதி போதினி -1891

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 11 இதழ் 6. 1892 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள்.

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சென்னை வெ. நா. ஜூபிலி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிட்டது. டி.பி.எஸ், நாகரெத்தினம் பிள்ளை என்பவரும், அவருடைய மனைவியாரும் இவ்விதழை நடத்தி

அளவு: $24\frac{1}{2} \times 16\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் பெண்களின் முன்னேற்றத்தை நாடியே வெளியிடப்பட்டது. கட்டுரைகள் பெரும்பாலும் பெண்களால் எழுதப்பட்டவைகளாகவும் பெண்களுக்கே பயன்படக்கூடியவைகளாகவும் இருந்தன. (கஙசா)

## 11. விவேக சிந்தாமணி - 1892

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 7. பகுதி 2. 1898 ஆம ஆண்டு ஜூன் திங்கள்.

ஆசிரியர்: சி. வி. சாமிநாத ஐயர். சென்னை பிராட்வே எம்பிரஸ் ஆப் இந்தியா அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரிய ரால் வெளியிடப்பட்டது.

அளவு: $24\frac{1}{2} \times 18\frac{1}{2}$. செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா நான்கு. தனியிதழ் அணா ஆறு.

இவ்விதழ் மக்கட்குக் கல்வி, ஒழுக்கம் முதலியவை களைப் போதிப்பதற்கென்று தோன்றியது. பழங்காலத்துக் கதைகள் அறிவுரைகள் முதலியவைகளைத் தாங்கி வந்து மக்கட்குச் சிறந்த பயனை அளித்தது. இதழ்கள் வளர்ச்சி பெறாத அந்நாளில் இவ்விதழ் கூடிய அளவு நன்முறையில் வெளிவந்து மக்கட்குச் சிறந்த பயனையளித்தது. (கரு௭)

## 12. ஞானபானு - 1894

பார்வைக்குக் கிடைத்தது. மலர் 1. இதழ் 5. 1894 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள்.

ஆசிரியர்: கா. ஆலாலசுந்தரம் பிள்ளை. ஆசிரியரால் சென்னை இந்து யூனியன் அச்சகத்தில் அச்சிட்டு வெளி யிடப்பட்டது.

அளவு: $25 \times 15\frac{1}{2}$. செ. மீ., பக்கங்கள் 16. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்று. தனியிதழ் அணா இரண்டு.

ஞானபானு என்றால் அறிவுக்கதிரவன் என்பது பொருள். இவ்விதழாசிரியர் சிறந்த சைவசித்தாந்தப புலமை வாய்ந்தவர். சிறிய அறிவுச்செய்திகளைச் செந்தமிழ உலகுக்குப் புலப்படுத்தவேண்டும் என்பதனையே ஆசிரியர் தம்முடைய சிறந்த நோக்கமாகக்கொண்டு இவ்விதழைத் தொடங்கினார். இதனிற் சிறந்த கட்டுரைகள் பல வெளி வந்தன. (கரு௮)

## 13. மாணவர் போதகம் - 1895

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 2. 1896 ஆம் ஆண்டு சனவரித் திங்கள்.

ஆசிரியர்: எம். பி. சுவாமிமுத்தையர் பிள்ளை. தூத்துக்குடி மாணவ சங்கத்தாரின் முயற்சியால் தூத்துக்குடி சைவப்பிரகாசம் அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப் பட்டது.

அளவு: $17 \times 10\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் அணா ஆறு.

இவ்விதழ் மாணவர்களின் முன்னேற்றம் கருதியே வெளியிடப்பட்டது. மாணவர்களுடைய அறிவு வளர்ச்சிக் கான பல கட்டுரைகள் இவ்விதழில் வெளிவந்தன. (கஙகூ)

## 14. சித்தாந்ததீபிகை - 1897

பார்வைக்குக் கிடைத்தது. மலர் 1. இதழ் 1. [21-6-1897]

இவ்விதழ் சென்னை சி. என். அச்சகத்தில் பி. சி. கலியாணசுந்தர நாடார், ஜெ. எம். நாகரெத்தினம் பிள்ளை என்பவர்களால் வெளியிடப்பெற்றது.

அளவு: 21 × 27 செ. மீ., பக்கங்கள் 24. கையொப்ப விவரம் தெரியவில்லை.

இவ்விதழ் சமயஞானம், தத்துவ ஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திர ஞானம் ஆகியவைகளை மக்களுக்குணர்த்தத் தோன்றியது. வைதிக சைவ சித் தாந்த சண்டமாருதம் சூளை சோமசுந்தர நாயகர், அட்டாவ தானம் பூவை கலியாணசுந்தர முதலியார், திருமணம் செல்வக்கேசவராய முதலியார், வேலாயுத தேசிகர், பூ. முருகேச பண்டிதர் முதலிய அறிஞர்கள் இவ்விதழிற் கட்டுரை வரைந்துள்ளனர். (கசo)

## 15. ஞானபோதினி - 1897

பார்வைக்குக் கிடைத்தது: சம்புடம் 3. புத்தகம் 2. 1899-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள்.

ஆசிரியர்: பூர்ணலிங்கம் பிள்ளை பி. ஏ. சென்னை தாம்சன் கம்பெனியாரால் அச்சிடப்பட்டு வெளியாகியது.

அளவு: $21 \times 14$ செ. மீ., பக்கங்கள் 42. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டரை. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் மக்களுக்கு அறிவு நலத்தை முற்றிலும் சிறந்த முறையில் வழங்கவெண்ணி வெளியாகியது. வி. கோ. சூரியநாராயணசாஸ்திரியார், அவைவரதவிநாயகம் பிள்ளை, கா. கோபாலாசாரியார், பிரணதார்த்திஹரசிவன் முதலிய பல அறிஞர்கள் இவ்விதழில் கட்டுரைகள் எழுதியுள்ளார்கள். (கசக)

## 16. மாதர் மனோரஞ்சனி - 1899

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 3. இதழ் 10. 1901 ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள்.

ஆசிரியர் சி. எஸ். இராமசாமி ஐயர். ஆசிரியரால் சென்னையிலிருந்து வெளியிடப்பட்டது.

அளவு: $23 \times 15\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றே முக்கால்.

இவ்விதழ் பெண்கள் படித்து மகிழ்தற் பொருட்டும் அவர்கள் முன்னேற்றம் அடைதற் பொருட்டும் வெளியாகியது. மகாராணியார் வரலாறு, சத்தியவதி, மாயாபுரி விநோதக் கதை முதலியன இவ்விதழில் வெளியாயின.

(கசஉ)

## 17. விநோத விசித்திரப் பத்திரிகை - 1900

1900 ஆண்டில் வெளியான பல இதழ்கள் அடங்கிய கட்டுத் தொகுதி ஒன்று பார்வைக்குக் கிடைத்தது. ஆசிரியர் பெயர் முதலிய விவரங்கள் தெரியவில்லை.

தனது பெயருக்கேற்பப் புதுமையான கதைகள் கட்டுரைகள் முதலியவைகளை இத்தொகுதி உடையதாக உள்ளது. கதைகள் கட்டுரைகள் யாவுமே மக்கட்கு நல்லறிவு புகட்டத்தக்க சிறப்புடையனவாக இருக்கின்றன. இதனில் வெளியாகியுள்ள கதைகள் அக்காலத்தில் வேறு பல இதழ்களிலும் வெளியாகியுள்ளன. (௧௪௩)

## 18. அறிவுவிளக்கம் - 1901*

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 2. இலக்கம் 1. 1902ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 10

ஆசிரியர்: வள்ளல் சோ. சிவஞான தேசிகர், நாகர் கோயில் விக்டோரியா அச்சகத்தில் அச்சிட்டுத் திருவனந்தபுரத்தில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 20 × 16½ செ. மீ., பக்கங்கள் 20. ஆண்டுக் கையொப்பம் ரூபாய இரண்டு. தனியிதழ் அணா நான்கு.

மக்களுடைய அறிவு விளக்கமடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் அதற்குத் தக்கவாறு இவ்விதழ் தொடங்கப் பெற்றது. இதழ் வளர்ச்சி மிகுதியும் பரவாத காலத்தில் தோன்றிய இவ்விதழ் அக்காலத்திற்கு ஏற்ற முறையில்தான் அமைந்துள்ளது. (௧௪௪)

## 19. சைவபோதினி - 1901

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 3. (25-8-1901)

ஆசிரியர்: சி. சி. குழந்தைவேலுப் பிள்ளை. ஆசிரியரால் திருநெல்வேலி ஆரியப்பிரகாசினி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 18 × 12 செ. மீ., பக்கங்கள் 10. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் அணா இரண்டு.

சைவபோதி சமாசமெனப் பொருள்கொண்ட ஞான சம்பந்த சபாவின் ஆதரவில் வெளிவந்த இவ்விதழ் சைவ சமய வளர்ச்சிக்குப் பணிபுரிந்தது. சைவ சமயத் தொடர்பான கட்டுரைகள் பல இவ்விதழில் வெளியாயின. (சுசி

## 20. ஞானசாகரம் - 1902

பார்வைக்குக் கிடைத்தது: பதுமம் - 1. இதழ் 12. (இரட்டையிதழ்) சாலி கஅஉரு பிலவ ஆண்டு கார்த்திகைமீ மார்கழிமீ (1902)

ஆசிரியர்: நாகப்பட்டினம் வேதாசலம் பிள்ளை, சென்னை சி. என். அச்சுக்கூடத்தில் முத்திரிக்கப்பட்டது.

ராயல் அளவு பக்கம் 48. ஆண்டுக் கட்டணம் ரூபா மூன்று.

மறைமலையடிகளாரால் தமிழ வளர்ச்சி கருதி வெளியிடப்பட்டது இவ்விதழ். அடிகளார் அந்நாளில் தனித் தமிழ் இயக்கத்தில் ஈடுபடவில்லையாதலால் தனித் தமிழைக் கையாளவில்லை. சுன்னாகம் அ. குமாரசுவாமிப் பிள்ளை, மாகறல் கார்த்திகேய முதலியார் ஆகியோர் இவ்விதழில் கட்டுரைகள் எழுதியுள்ளனர். (கா சு)

## 21 யதார்த்த பாஸ்கரன் – 1902

பார்வைக்குக் கிடைத்தது: சம்புடம் 1. இலக்கம் 5. 1902 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் முதல்நாள் வெளிவந்த இதழ்.

ஆசிரியர்: விச்சூர் முத்துக்குமாரசாமி முதலியார், பி. ஏ., சென்னை தாம்ஸன் கம்பெனியார் வெளியிட்டது.

அளவு: $21\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 34. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டரை. தனியிதழ் விலை அணா நான்கு.

மக்களுக்குப் பயனுண்டாகத்தக்க பல கட்டுரைகளையும் பொதுவாக செய்திகளையும் வெளியிட்டு நாட்டு மக்களுக்கு நல்லுணர்ச்சியூட்டவேண்டும் என்பதையே இவ்விதழ் அடிப்படையான நோக்கமாகக் கொண்டு வெளியிடப்பட்டது. பார்வைக்குக் கிடைத்த இதழில் தமிழ்மொழியில் சாஸ்திரஞானம், திருத்தணிகை யாத்திரை முதலிய கட்டுரைகள் அடங்கியுள்ளன. (கசஎ)

## 22. விவேகபாநு - 1902

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 3. புத்தகம் 4. 1904 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் வெளிவந்தது.

ஆசிரியர்கள்: எஸ். சாமிநாதையரும் மு. ரா. கந்தசாமிக் கவிராயரும். மு. ரா. கந்தசாமிக் கவிராயரால் மதுரை மீனாம்பிகை அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு 21 × 14 செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டு. தனியிதழ் அணா நான்கு.

மக்களுக்கு நல்லொழுக்கத்தையும் நல்லறிவையும் மிகுதியாகக் கற்பிக்கவேண்டுமென்பதையே இவ்விதழ் தனது நோக்கமாகக் கொண்டு வெளியாயிற்று. சோழவந்தான் அரசஞ்சண்முகனார், கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரம் பிள்ளை முதலியோரின் பாடல்கள் இவ்விதழில் வெளியாகியுள்ளதோடு கட்டுரைகளும் பல வெளிவந்துள்ளன. இந்நாளில் இதே பெயர்கொண்ட மற்றொரு வெளியீடு குற்றாலத்திலிருந்து வெளிவந்ததாகத் தெரிகிறது. பின்னாளில் சென்னையில் இருந்தும் ஒரு விவேகபாநு தோன்றியது.

(கசஅ)

## 23. கிராமாதிகாரி கெஜெட் - 1903.

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 1. எண் 6. (1903 ஆம் ஆண்டு நவம்பர் 15)

ஆசிரியர்: டி. பி. பார்த்தசாரதி ஐயங்கார். சென்னை ஸ்ரீநிகேதனம் அச்சுக்கூடத்தில் அச்சிட்டுச் சௌகார் பேட்டையில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 21 × 14 செ. மீ., பக்கங்கள் 32. தனியிதழ் அணா மூன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு அணா மூன்று.

இவ்விதழ் சென்னை அரசாங்கத் தமிழ் மாவட்டத்தில் உள்ள ஜமீன்மிட்டா, சுரோத்திரியம்தாரர்களின் நன்மைக்காகவும் கிராமாதிகாரிகளின் சீர்திருத்தத்திற் காகவும் வெளியிடப்பட்டது. தமிழ்நாட்டுக் கெசட்டாகிய இதில் பல முதன்மையான செய்திகள் அடங்கியுள்ளன.

(கஏக)

## 24. திருநாவுக்கரசு - 1904

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 2. இலக்கம் 10. விசுவாவசு ஆண்டு கார்த்திகைத் திங்கள் (1905 ஆம் ஆண்டு நவம்பர்)

ஆசிரியர்: தி. பா. சிவராம பிள்ளை, திரவியம்பிள்ளை என்பவர்களால் திருநெல்வேலி ஆரியப்பிரகாசினி அச்சகத் தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $33 \times 20\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்று. தனியிதழ் விலையணா இரண்டு.

இதழை வெளியிடத் தொடங்கியவர் சைவசமயப் பற் றுடையவர். திருநாவுக்கரசரிடத்தில் பேரன்புடையவர். திருநாவுக்கரசருடைய பெயரால் இதழை வெளியிட்டுச் சம யத் தொண்டுந் தமிழ்த்தொண்டுஞ் செய்யவேண்டும் என் னும் நோக்கத்தோடு இதனைத் தொடங்கினர். குறையிரந்து நிற்றல், சமயாபிவிருத்தி முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகியுள்ளன.

(கநo)

## 25. பரதரிசனம் - 1904

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 1. நம்பர் 2. 1904 ஆம் ஆகஸ்டுத் திங்கள் முதல்நாள்

ஆசிரியர் பெயர் இல்லை. சென்னை சந்திரிகா அச்சகத்தில் அச்சிட்டுப் பரதரிசன சங்கத்தாரால் வெளியிடப்பட்டது.

அளவு: 33 × 21½ செ. மீ., பக்கங்கள் 1. நன்கொடையாக வழங்கப்பட்டது.

இதழ் முழுவதும் 'பரதரிசனமாட்சி' என்னும் ஒரே கட்டுரை வெளியாகியுள்ளது. இவ்விதழ் முதற்பக்க மேலப்பில் பின்வருமாறு அறிவித்துள்ளது:

"இப்பத்திரிகை பரதரிசன சங்கத்தாரால் வெளிப்படுத்தப்படுவது. இதன்கண் எழுதப்படும் விஷயங்களைத் தமக்குரியவாகக் காண்பவரெல்லாம் சங்கத்திற் சேர்ந்தவராகவே எண்ணப்படுவர். தற்காலிக ஏற்பாட்டின்படி ஒவ்வொரு ஆங்கிலமாச முதற்தேதியும் இது வெளியாகின்றது. இதனைக் கிரமமாகப் பெற விரும்புவோர் தங்கள் கருத்தினைத் தெரிவித்துக் கொள்வராயின் அவ்வாறே அனுப்பப் பெறுவர். (கநக)

## 26. விவசாய தீபிகை - 1904

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 2. 9, 10. (1905 டிசம்பர்)

ஆசிரியர்: என். வானமாமலைப் பிள்ளை. சென்னை மலைச்சாலை வைசயந்தி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. டிம்மி அளவுப் பக்கம் 64. விலை அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் உயர்ந்த மதிப்பு ரூ. 2-0-0. பொதுவான மதிப்பு ரூ. 1-8-0.

பயிர்த்தொழில் செய்பவர்கட்குப் பயன்படும்பொருட்டு இவ்விதழில் பயிர்த்தொழில்பற்றிய பலவகைச் செய்திகள்

வெளியிடப்பட்டன. பயிர்த்தொழிலுக்கு இன்றியமையாத கால்நடைகளைப்பற்றிய குறிப்புக்களையும் இவ்விதழ் வெளியிட்டது. (கரு.)

## 27. ஸ்ரீவாணி விலாசினி - 1904

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 5. பகுதி 12. பிலவங்க ஆண்டு பங்குனித் திங்கள் (1908 ஏப்ரல்)

ஆசிரியர் பெயர் குறிப்பிடப்பெறவில்லை. திருவரங்கம் வாணி விலாச அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது

அளவு : $21\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 100. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஐந்து. தனியிதழ் அணா பத்து.

முன்னாளில் நடைபெற்ற இதழ்கள் பலவற்றுள்ளும் இது தோன்றிய தனிச்சிறப்பமைந்ததாகச் சிறந்து திகழ்ந்தது. சமயாசாரியர்களின் வரலாறு நீண்ட கற்பனைக் கதைகள், பயணத்தூரத்துக்கு உயரிய பழக்கவழக்கங்கள் முதலியன இவ்விதழுக்கு அழகு செய்தன. இந்நாளில் அத்தகைய இதழ் எதுவுமே இல்லை. இவ்விதழ் ஐந்தாண்டுகட்குமேல் ஒரே நிலையில் சிறப்பாக வெளிவந்துகொண்டிருந்ததாகத் தெரிகிறது. (கரு.)

## 28. இந்து அபிமானி - 1905

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1. 1905 ஆம் ஆண்டு, ஆகஸ்டு திங்கள். ஆசிரியர் சி. அன்புவேலு முதலியார்.

ஆசிரியரால் சென்னை கமலநாயகி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு $21 \times 16$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ஒரு ரூபாய் பத்தணா. தனியிதழ் அணா இரண்டு.

இவ்விதழ் இந்து சமயத்தாரின் முன்னேற்றம் கருதி வெளியிடப்பட்டது. காலத்திற்கு ஏற்றவாறு அறிஞர்கள் பலர் அரிய கட்டுரைகளை இதில் எழுதினார்கள். இவ்விதழ் சிலகாலம் நல்லபணி புரிந்து பிறகு மறைந்தொழிந்தது.
(கந்ச)

## 29. சக்ரவர்த்தினி - 1905

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 2. இதழ் 9. 1907 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள். ஆசிரியர் ; எம். எஸ். நடேசய்யர். பி. வைத்தியநாதையா என்பவரால் சென்னை ஏ. எல். வி. அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $24 \times 16$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டு. தனியிதழ் அணா மூன்று.

இவ்விதழ் பெண்களின் முன்னேற்றத்தினைப் பொருட்டு வெளியிடப்பட்டது. மாதராடவர் கடமை, பெண்களும் பேயென்னும் பெருவியாதியும், கலாவதி முதலிய கட்டுரைகள் பார்வைக்குக் கிடைத்த இதழில் வெளியாகியுள்ளன.
(கநிரு)

## 30. தமிழகம் - 1905

பார்வைக்குக் கிடைத்தது: வால்யூம் 2. நம்பர் 4, 5. 1906 ஆம் ஆண்டு ஏப்ரல் மே திங்கள்.

ஆசிரியர்கள் : டி. இராமசாமையங்கார், பி. ஏ., எல். டி., சி. எஸ். முத்துசாமி ஐயர், தஞ்சை கல்யாணசுந்தரம் முத்திரா சாலையில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $22\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 30. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தனியிதழ் அணா இரண்டரை.

இது தஞ்சைத் தமிழ்ச் சங்கத்து வெளியீடாக வெளி வந்தது. தமிழ்நாட்டிற்கு ஏற்ற கட்டுரைகளை வெளியிட வேண்டும் என்பதே இதனுடைய நோக்கம். சாஸ்திரப

பொருள்மாலை, சரீரத்துவ விளக்கம், கொழுத்துன்னூசியின் முடிவுரை முதலிய கட்டுரைகள் இதில் வெளியாயின.

(க௯

## 31. நல்லாசிரியன் - 1905

பார்வைக்குக் கிடைத்தது: வயது 2. மாதம் 2. 1906 ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் வெளியான இதழ்.

ஆசிரியர்: கா. ரா. நமசிவாய முதலியார். சென்னை காக்ஸ்டன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

அளவு $21\frac{1}{2} \times 13$ செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் அணா ஒன்று.

இவ்விதழ் தொடக்கப் பள்ளிகளின் ஆசிரியர்கட்கு அறிவுபுகட்டும் முறையில் நல்லாசிரியர்களுடைய இலக்கணத்தையும் தன்மையையும் நடந்துகொள்ளவேண்டிய முறைமைகளையும் விளக்கமாக எடுத்துரைத்தது. பள்ளிகளின் ஆசிரியர்கள் பலர் இவ்விதழைப் பாராட்டிப் போற்றினர். (க௯ள)

## 32. தமிழ்மாது - 1906

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 10. விசுவாவசு ஆண்டு தைத்திங்கள் (1906 சனவரி)

ஆசிரியை: கோ. ஸ்வப்பநேஸ்வரி அம்மாள். சென்னை கோமளேசுவரன்பேட்டையில் இருந்து ஆசிரியையால் வெளியிடப்பட்டது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டேகால். தனியிதழ் அணா மூன்று.

தமிழ் மாதர்களின் முன்னேற்றங்கருதியே இவ்விதழ் வெளியிடப்பட்டது. சில பெண்களும் இவ்விதழுக்குக் கட்டுரையெழுதினார்கள். சிறந்த முறையில் வெளிவராமையின் விரைவாகவே மறைந்தொழிந்தது. (க௯அ)

## 33. தமிழ் நாஷனல் பத்திரிகை - 1907

*பார்வைக்குக் கிடைத்தது: வால்யும் க. நம்பர் க. 1907 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள். ஆசிரியர் பெயர் தெரியவில்லை. திருநெல்வேலி சித்திவிநாயகர் அச்சகத்தில் அச்சிட்டுத் தூத்துக்குடியிலிருந்து வெளியிடப்பட்டது.*

*அளவு: 21 × 18 செ. மீ., பக்கங்கள் 18. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்றரை. இலங்கையில் 150 சதங்கள். தனியிதழ் விலை அரை அணா.*

*இவ்விதழ் தனது அறிவிப்பில், "இதில் சுதேசி விஷயமாயுள்ள சமாசாரங்களும், இராசாங்கத்து விஷயங்களும், தொழில்முறையான விஷயங்களும், சாஸ்திர விஷயமான முறைகளும், மத விஷயமான சமாச்சாரங்களும், கல்வி விஷயங்களும் இன்னும் மற்ற அநேக விஷயங்களும் பிரசுரிக்கப் படும்" என்று அறிவித்துள்ளது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழும் நன்றாகவே அமைந்துள்ளது.* (கருகூ)

## 34. ஆரோக்கிய வழி - 1908

*பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 5. 1908 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் வெளிவந்தது.*

*ஆசிரியர்: ம. எ. சாமிநாதையர், சென்னை காக்ஸ்டன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*அளவு: 21 × 13½ செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.*

*மக்கள் நல்வாழ்வு நடத்துதற்கான அறிவுரைகள் பலவற்றை இவ்விதழ் தாங்கி வெளிவந்து மக்கட்கு மிகுந்த பயனை உண்டாக்கியது. வீடு வாசல் தெரு ஆகியவைகளைத் தூய்மையாக வைத்துக்கொள்ளவேண்டிய முறைகள் முதலியவை இவ்விதழில் நன்கு விளக்கமாக எழுதப் பட்டன.* (க௬0)

## 35. இந்து பாலபோதினி - 1908

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 2. இதழ் 1. 1909 ஆம் ஆண்டு சூன் திங்கள்.

ஆசிரியர்: எம். சபாரத்தின ஐயர். யாழ்ப்பாணம விவேகாநந்த அச்சகத்தில் அச்சியற்றி ஆசிரியரால் வெளியிடப்பெற்றது.

அளவு: $44 \times 27\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள். 4. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்று. தனியிதழ் பத்துச் சதம்.

இந்துசமயத்தினர் அறிந்துகொள்ளவேண்டிய செய்திகள் பலவற்றையும் தாங்கி இவ்விதழ்வெளியாகியது. மற்றும் சமுதாயம், அரசியல் முதலியனபற்றிய செய்திகளும் வெளியாயின. விநாயகசதுர்த்தி விரதம், பகவத் பந்தி முதலிய கட்டுரைகளும் பார்வைக்குக் கிடைத்த இதழில் காணப் பெறுகின்றன. (கசுக)

## 36. வித்யா விஹாரிணி - 1908

பார்வைக்குக் கிடைத்தது: புஸ்தகம 1. சஞ்சிகை 4. சௌமிய ஆண்டு மார்கழித் திங்கள் (1909 டிசம்பர்)

ஆசிரியர்: சி. என். கிருட்டிணசாமி அய்யர் எம். ஏ., எல். டி. சென்னை மலேச்சாலே கார்டியன் அச்சகத்தில் அச்சிட்டுக் கணேஷ் கம்பெனியாரால் வெளியிடப்பட்டது.

அளவு: $24\frac{1}{2} \times 18\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் 5.

இவ்விதழ் வடமொழிப் பெயரைக்கொண்டு தமிழ் மொழியில் தோன்றியிருக்கிறது. காவியம், சரித்திரம், கலைக்கியானம், தொழின்முறை, வேடிக்கைக் கதைகள் முதலியவைகளை நாட்டிற் பரபபுதற்குத் தோன்றியது. இதழ காவிய காண்டம், சரித்திர காண்டம், கலைவகைக் காண்டம், விநோத காண்டம் எனக் காண்டப் பிரிவுகளாக அமைந்து நிற்கின்றது. (கசுஉ)

## 37. ஜனோபிமானி - 1908

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 7. சஞ்சிகை 7 இராட்சத ஆண்டு வைகாசித் திங்கள் (1915 மே)

ஆசிரியர்: ஜி. எ. வைத்யராமன். கார்டியன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $24\frac{1}{2} \times 18\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் 4. தனிப்பிரதி விலையணா ஆறு.

இவ்விதழ் இதற்குமுன்பு "பிழைக்கும் வழி" என்னும் பெயரோடு வெளியாகியது. பொதுமக்களின் அறிவு வளர்ச்சியடைதற்கு ஏற்ற கட்டுரைகளை வெளியிட்டு மக்கட்கு நல்ல தொண்டாற்ற வேண்டும் என்னும் எண்ணத்தோடு பணிபுரிந்தது. கட்டுரைகளையல்லாமல் பலவகையான குறிப்புக்களையும் வெளியிட்டு உலக நிகழ்ச்சிகளை மக்களுக்கு உணர்த்தியது. (கரு௩)

## 38. இதகாரிணி - 1909

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 7. இலக்கம் 2. 1915 செப்டம்பர்த் திங்கள்.

ஆசிரியை: பண்டிதை விசாலாட்சி அம்மாள். சென்னை திருவல்லிக்கேணி கமர்ஷியல் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியையால் வெளிப்படுத்தப்பட்டது.

அளவு: $21 \times 14$. செ. மீ, பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ஒரு ரூபாய் பத்தணா.

இனிமைவாய்ந்த கட்டுரைகளை வாசகர்களுக்கு வழங்கி அவர்கட்குக் களிப்பூட்டவேண்டும் என்பதனையே இவ்விதழ் தன்னுடைய நோக்கமாகக் கொண்டு வெளியாகியது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் சிறந்த கதைகள் கட்டுரைகள் முதலியன வெளியாகியுள்ளன. (கரு௪)

## 39. தருமம் - 1909

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 3 (1909) ஆர். கிருஷ்ணசாமி ஐயர்.

புதுவையில் நாராயணன் என்பவரால் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 25 × 17 செ. மீ., பக்கங்கள் 8.

சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் முதலியவைகளைக் குறிக்கோளாகக் கொண்டது இவ்விதழ். இந்தியாவின் க்ஷீணத்திற்குக் காரணம், நான்கு வர்ணங்களின் தருமங்கள், தேசபக்தர்களின் அபேட்சை, சுதந்திரம் அடையும் மார்க்கம், மனிதர்களின் கடமை முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகின. இவ்விதழினிடத்துள்ள ஒரு தனிச் சிறப்பென்னவென்றால் இவ்விதழ் எல்லோருக்குந் தருமமாக அனுப்பப்பட்டதுதான். இதழ் தன் பெயருக்கேற்ற கடமையைச் செய்துவிட்டது. (கசரு)

## 40. கிருஷிகன் - 1909

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 2. பிரதி 2. சாதாரண ஆண்டு வைகாசித்திங்கள் முதல்நாள (14-5-1910)

ஆசிரியர்: சே. ஆர். அரங்கராசு. சென்னை மலைச் சாலை கார்டியன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு : $21\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 38. ஆண்டுக் கையொப்பம் அணா பன்னிரண்டு.

உழவுத்தொழிலாளர்களுக்கு உதவிபுரிவதற்காக இவ்விதழ் தோன்றியது. அத்துறையைப்பற்றிய சில கட்டுரைகளையும் இது வெளியிட்டுச் சில காலம் பணி புரிந்தது. (கசஅ)

## 41. பிழைக்கும் வழி - 1909

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 4. சஞ்சிகை 3. விரோதிகிருது ஆண்டு பங்குனித் திங்கள் (1912 மார்ச்).

ஆசிரியர்: ஸ்ரீ. எ. வைத்தியராமன் பி. ஏ., சென்னை தாம்சன் கம்பெனியாருடைய மினர்வா அச்சுக்கூடத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: 24 × 18½ செ. மீ., பக்கங்கள் 80. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் நான்கு. தனியிதழ் விலை அணா ஆறு.

பிழைக்கும்வழியை மக்களுக்குக் காட்டவேண்டும் என்னும் நோக்கத்துடனேயே இவ்விதழுக்கு இப்பெயர் இடப் பெற்றது. இதனைப் படிப்பவர்கள் பயனடையத்தக்க பல கட்டுரைகள் இதில் வெளியாகியுள்ளன. பொதுவாக இவ்விதழ் அக்காலத்தில் ஓர் உயர்தர வெளியீடாகவிளங்கியது. (கஎ)

## 42. விவேகபோதினி - 1909

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 2. பகுதி 11. சாதாரண ஆண்டு சித்திரைத் திங்கள் (1910 - மே)

ஆசிரியர்: வி. குப்புச்சாமி ஐயர். சென்னை கார்டியன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 24 × 18. செ. மீ., பக்கங்கள் 36. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் விலை அணா ஐந்து.

மக்களுக்கு நல்லொழுக்க நெறியைப் போதிக்க வேண்டுமென்னும் நோக்கத்தோடு தோன்றிய இவ்விதழ் மெய் யறிவு நெறிக்கேற்ற பல கட்டுரைகளையும் மக்களின் அறிவை நேரிய முறையில் வளர்த்துப் பயன் விளைக்கக்கூடிய தமிழ் நாட்டுப் பழங்கதைகளையும் வெளியிட்டு மக்கட்கு மிகு பயனை விளைவித்தது. இதன் பழையபடிகள் பழைய நூல் களைப்போல் பயன்தருவனவாய் விளங்குகின்றன. (கஅ)

## 43. கர்மயோகி - 1910

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 1. இலக்கம் 3. சௌம்ய ஆண்டு பங்குனித் திங்கள்.

ஆசிரியர் சி. சுப்பிரமணிய பாரதி. இவ்விதழ் புதுச்சேரியில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு : 24 × 18 செ. மீ., பக்கங்கள் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டு. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் ஆரிய தருமம், பாரதநாட்டுக் கலைகள், தொழில்கள், காவியங்கள், சாஸ்திரங்கள், அரசியல் விஷயங்கள் முதலியவைகளைப்பற்றி எளிய தமிழ்நடையில் எழுதப்பட்டு வெளியாகியது. (கசுகூ)

## 44. ஞானப் பிரகாசம் - 1910

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 1. இலக்கம் 8. சாதாரண ஆண்டு பங்குனித் திங்கள் (1911 ஏப்ரல்) ஆசிரியர் : ஆ. சண்முக ரத்தின சர்மா. யாழ்ப்பாணம் கணேச அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு : $25\frac{1}{2} \times 17\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 16. ஆண்டுக் கையொப்பம் யாழ்ப்பாணத்திற்கு ரூபாய் இரண்டு. இலங்கை, இந்தியாவுக்கு இரண்டேகால். தனியிதழ் காசு இருபது.

இவ்விதழ் சைவசமய வளர்ச்சியையும் அறிவு வளர்ச்சியையும் அடிப்படையாகக் கொண்டு தோன்றியது. பிரணவம், தமிழ்மொழி, கிறித்துமத கண்டனம், கம்பராமாயண சிவபரத்துவம் முதலிய பல கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. (கஎ0)

## 45. பிராசீ - 1910

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 1. சஞ்சிகை 3. சாதாரண ஆண்டு. (1910)

ஆசிரியர்: எல். வி. இராமச்சந்திர அய்யர். சென்னை ஓரியண்டல் அச்சுக்கூடத்தில் அச்சிட்டுவெளியிடப்பட்டது.

அளவு: 22 × 14. செ. மீ., பக்கங்கள் 32 தனியிதழ் அணா இரண்டு.

இது பல செய்திகளைக் கொண்டதன்று. இராமாயணம் மகாபாரதம் முதலிய நூல்களைத் திங்கள் தோறும் முப்பத்திரண்டு முப்பத்திரண்டு பக்கங்களாக வெளியிட்டு வந்தது. வடமொழி நூல்களைக்கொண்டே இவ்விதழ்கள் எழுதப்பட்டன. (கஎக)

## 46. பூர்ண சந்திரோதயம் - 1910

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 6. பகுதி 4. இராட்சஸ ஆண்டு ஆவணித் திங்கள் (1915 ஆகஸ்டு)

ஆசிரியர்: அரங்கசாமி ஐயர், பி. ஏ., பி. எல்., எப். டி. எஸ்., மதுரை விக்டோரியா அச்சியந்திர சாலையில் பதிப்பித்து வெளியிடப்பெற்றது.

அளவு: 20 × 14. செ. மீ., பக்கங்கள் 50. தனி இதழ் அணா நான்கு. ஆண்டுக்கையொப்பம் ரூபா இரண்டு.

இவ்விதழின் நோக்கம் மக்கட்கு மெய்யறிவு உண்டாகுமாறு ஒளிநெறிக்கட்டுரைகள் பலவற்றை வெளியிட வேண்டுமென்பது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் குப்தவித்யை, தியானக்கிரம விஷயம் முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (கஎஉ)

## 47. அமிர்தவசனி - 1911

பத்திதழ்கள் பார்வைக்குக் கிடைத்தன. விரோதிகிருது ஆண்டு வைகாசித் திங்கள் முதல். (1911)

ஆசிரியர்: பண்டிதர் எஸ். முத்துச்சாமிப் பிள்ளை. எஸ். அய்யாப்பிள்ளை என்பவரால் திருவனந்தபுரம் பி. சே. அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 20 X 13 செ. மீ., பக்கங்கள். 24. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் அமிர்தம் போன்ற சிறந்தகட்டுரைகளை மக்கட்கு வழங்குதல் வேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றி அவ்வாறே வழங்கி வந்தது. சீரிய பல கட்டுரைகளும் செய்யுட்களும் இவ்விதழ்களில் வெளியாகியுள்ளன. ஆசிரியர் புலவராகையால் நன்முறையில் இதனை நடத்தியுள்ளார். இப்பெயரோடு இந்நாளிலும் ஓர் இதழ் நடைபெறுகிறது. (கஎங)

## 48. செந்தமிழ்ச் செல்வம் - 1911

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. பகுதி 6 விரோதிகிருது ஆண்டு புரட்டாசித் திங்கள் 1உ (1911 - செப்டம்பர்)

ஆசிரியர் : பண்டிதர் அமிர்தம் சுந்தரநாதப் பிள்ளை. திருச்சி இலட்சுமி விலாச அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 28. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றே கால். தனியிதழ் அணா இரண்டு.

ஆசிரியர் தமிழறிஞர். தமிழறிவை நாட்டில் நன்கு வளர்க்க வேண்டும் என்னும் நோக்கத்துடன் இவ்விதழைத் தொடங்கினார். திருப்பெருந்துறை ஆராய்ச்சி, கம்பராமாயணச் செய்யுளாராய்ச்சி முதலிய ஆராய்ச்சிக்கட்டுரைகளும் பிறகட்டுரைகளும் வெளியாகியுள்ளன. (கஎச)

## 49. தமிழ் - 1911

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 1. எண் 3. 1912-ஆம் ஆண்டு பிப்ரவரித்திங்களில் வெளியானது.

ஆசிரியர் : அ. சிவப்பிரகாசம் பிள்ளை. திண்டுக்கல் நேடிவ் ராயல் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $21\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்று. தனியிதழ் விலை அணா இரண்டு.

"கல்வி அறிவு ஒழுக்கங்களைப் பரவச் செய்யும் மாதாந்தப்பத்திரிகை" என்று இதழின் தலைப்பில் அறிவிக்கப்பட்டுள்ளது. உலகச் செய்திகள், கட்டுரைகள், தமிழ்நாட்டுவரலாற்றுப் பாடங்கள் முதலியன வெளியாகியுள்ளன. இனிய தமிழ்நடையை எங்கும் பரப்பவேண்டுமென்பது இதன் நோக்கமாக இருந்தது. தமிழாசிரியராகிய இதழாசிரியர் பள்ளியிலும் தமிழாசிரியராகப் பணிபுரிந்தவர். (கஎ௩)

## 50. தெக்ஷிணதீபம் - 1911

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 1 (1911) ஆண்டு ஜுன் திங்கள்.

ஆசிரியர்: ஜெ. எம். மேகரி. திருவனந்தபுரம் பி. ஜெ. அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளிப்படுத்தப்பட்டது.

அளவு: $21 \times 16$ செ. மீ., பக்கங்கள் 16. இதன் ஆண்டுக் கையொப்பம் அணா பதினைந்து.

இவ்விதழ் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் ஆடவர்க்கும் பெண்டிர்க்கும், பெரியோர்க்கும் சிறியோர்க்கும் பயன் படக்கூடிய நன்மை மறுமைச் செய்திகள், சொற்பொழிவுகள், கதைகள் வரலாறுகள் முதலியவைகளை வெளிப்படுத்துவதற்காகத் தோன்றியது. ஆத்மதியானம், இளங்குழை, சுகம் பேணும் முறை முதலிய கட்டுரைகள் வெளியாயின. (கஎ௪)

## 51. பகவத்கீதை - 1911

பார்வைக்குக் கிடைத்தது: இதழ் 4. 1912 பிப்ரவரி.

ஆசிரியர்: உ. வெ. நரசிம்மாசாரியார். சென்னை பிரஹ்மவாதின் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 25 × 17 செ. மீ., பக்கங்கள் 64. தனி இதழ் அணா ஆறு.

இது பல செய்திகளைக் கொண்டதன்று. பகவத்கீதை சுலோகங்கட்குப் பதவுரை திரு. பாஷ்யகாரர் அருளிச் செய்த பாஷ்யம், மேற்படி பாஷ்யத்திற்கு திரு. நிகமாந்த மகாதேசிகன் அருளிச்செய்த தாத்பர்ய சந்திரிகை, கீதார்த்த சங்க்ரகரட்சை, ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த சங்கிரக சுலோகங்கள் ஆகியவைகட்குச் சரி யான தமிழ்மொழிபெயர்ப்பும் நிகமாந்த மகாதேசிகன் அருளிச்செய்த கீதார்த்த சங்கிரகப்பாட்டுக்களுக்குப் பொழிப்புரையுமாக வெளியாயிற்று. (கஎஎ)

## 52. வேதாந்த தீபிகை - 1911

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 5. இதழ் 9. 1915 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள்.

ஆசிரியர்: திவான் பகதூர் டி. டி. அரங்காச்சாரியார் பி. ஏ., பி. எல்., சித்தூரில் இருந்து ஸ்ரீ அகோபால மடத்து சிஷ்ய சபைச் செயலாளரால் சென்னை கே. ஆர். அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது

அளவு: $24\frac{1}{2} \times 16$ செ. மீ., பக்கங்கள் 38. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டு. தனியிதழ் அணா மூன்று.

இவ்விதழ் வேதாந்தக் கொள்கையை மக்கள் நன்கு புரிந்துகொள்ளுமாறு செய்யவேண்டும் என்னும் நோக்கத் தோடு தோன்றியது. வேதாந்தக் கட்டுரைகளும் நூல்க ளும் வடமொழி மிகுதியும் விரவிய போக்கில் வெளிவந்தது. வேதாந்த நூலை அறிவதில் விருப்பம் உள்ளவர்கட்கு மிகு துணையாக விருந்தது. (கஎஅ)

## 53. கதாமஞ்சரி - 1912

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 2. எண் 2. 1913 ஜூலை.

ஆசிரியர்: கோ. வடிவேலுச் செட்டியார். சென்னை கோமளேசுவரன்பேட்டை சச்சிதானந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிட்டது.

அளவு: 21 × 14 செ. மீ., பக்கங்கள் 40. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக்கையொப்பம் ரூபாய் ஒன்று.

இவ்விதழிற் பலவிதச் செய்திக் கட்டுரைகள் வெளியிடப்படவில்லை. சோமதேவர் இயற்றிய சமஸ்கிருத கதா சரித்சாகரத்தின் தமிழ்மொழிபெயர்ப்பு வெளியாகியது. நூல் முடிவுபெற்றதும் இதழும் முடிவுபெற்றது.

(கஎகூ)

## 54. தமிழன் - 1912

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 3. இதழ் 6. 1915 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள்.

ஆசிரியர்: எஸ். முத்துச்சாமிப் பிள்ளை. திருவனந்தபுரம் பாஸ்கர அச்சகத்தில் அச்சியற்றி ஆசிரியரால் வெளியிடப்பெற்றது.

அளவு: 28 × 21½ செ. மீ., பக்கங்கள் 20. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டு. தனியிதழ் அணா நான்கு.

தமிழர்கட்குப் பயன்படத்தக்க கட்டுரைகளையுஞ் செய்திகளையுந் தரவேண்டுமென்பதையே தனது நோக்கமாகக் கொண்டு இவ்விதழ் தோன்றியது. மாணிக்கவாசகர் வரலாறு, ஆறுமுகநாவலர் வரலாறு முதலிய வரலாறுகளும் வேறுபல கட்டுரைகளும் இவ்விதழில் வெளியாகியுள்ளன. 'தமிழன்' என்னும் பெயரோடு பிற்காலத்திலும் அடிக்கடி இதழ்கள் தோன்றின. (கஅ0)

## 55. பெண் கல்வி - 1912

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 8. பகுதி 2 1919 பிப்ரவரித் திங்கள்.

ஆசிரியை: ஆர். தாயாரம்மா. சென்னையில் இந்தியா பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 14 செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டரை.

இவ்விதழ் பெண்களுடைய கல்வியறிவை நன்கு வளர்க்கவேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியிடப்பட்டது. பார்வைக்குக் கிடைத்த இதழில் பெண்களின் அருஞ்ஞானம், நாணம், பெண்கல்வி ஆராய்ச்சி, இராமாயணத்தில் இருந்து ஸ்த்ரீ தருமங்கள் முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (கஅக)

## 56. கமலாசனி - 1913

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 4. சஞ்சிகை 3. நள ஆண்டு ஆனித்திங்கள் (1916)

ஆசிரியர் டி. எஸ். தியாகராச ஞானியார். கும்பகோணம் ஆரியன் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் திருவாரூரில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு : $19\frac{1}{2} \times 13$ செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டு.

செந்தமிழ் வளர்த்த சோழ மன்னர்கள் அரசு புரிந்திருந்த ஆரூரில் இருந்தும் ஒரு தமிழ் இதழை வெளிப்படுத்தித் தமிழ்த்தொண்டு செய்யவேண்டும் என்னும் நோக்கத்தோடு ஆசிரியர் இவ்விதழை வெளிப்படுத்தித் தமிழ்த் தொண்டுபுரிந்தார். இவ்விதழ் நான்கு ஆண்டுகட்கு மேலும் வெளியாகியது. (கஅஉ)

## 57. கலைமகள் - 1913

பார்வைக்குக் கிடைத்தது: வெண்டாமரை 6. இதழ் 1. 1918 ஆம் ஆண்டு சனவரித் திங்கள்.

ஆசிரியர் : சி. பங்காரு பத்தர். புதுவை கலைமகள் கழகத்தில் இருந்து வெளியான இவ்விதழ் புதுவை சைகோன் சின்னையா அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 26. ஆண்டுக் கையொப்பம் உள்ளூரார்க்கு ரூபா ஒன்று. வெளியூரார்க்கு ரூபா ஒன்றேகால். வெளிநாட்டுக்கு ரூபாய் இரண்டு. தனியிதழ் அணா இரண்டு.

இவ்விதழ் சீரிய கட்டுரைகளை வெளிப்படுத்தித் தண்டமிழ்த் தொண்டு செய்யத் தோன்றியது. புலவர் பெருமக்களின் கட்டுரைகள் பலவற்றை வெளிப்படுத்தி ஆறு ஆண்டுகட்குமேல் பணியாற்றியது. இந்நாளிலும் கலைமகள் என்னும் பெயரோடு திங்களிதழ் ஒன்று நடைபெறுகிறது. (கஅரு)

## 58. கற்பகம் 1913

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 4. பகுதி 2. 1916 ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் வெளியானது.

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. புதுவை செகநாதம் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு; $21 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் அணா பன்னிரண்டு.

மக்கள் பலரும் விரும்பிப்படிக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு இவ்விதழை நடத்தத் தொடங்கினர். பிரஞ்சிந்திய அரசியற் செய்திகள், சில கட்டுரைகள், விசித்திர விநோத விகட சிண்டாமணி என்னும் நகைச்சுவைப்பாடல், சில மருத்துவமுறைகள் முதலியன இவ்விதழில் வெளியாகியுள்ளன. (கஅச)

## 59. ஞானபாநு 1913

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1 இதழ் 1. 1913 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள்.

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சென்னை மயிலாப்பூரில் இருந்து வெளியான இவ்விதழ் சச்சிதாநந்தா அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

அளவு : 21 × 14 செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றே முக்கால்.

இவ்விதழ் அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவைகளை மக்களுக்குணர்த்தி அவர்கள் மெய்யறிவினைப் பெற்று வீடுபேற்றையடையச் செய்யவேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றி மெய்யறிவுக் கட்டுரைகள் பலவற்றை வெளிப்படுத்தியது. இப்பெயரோடு பிற்காலத்திலும் சில இதழ்கள் தோன்றின. (கஅரு)

## 60. வன்னிகுல மித்திரன் - 1913

பார்வைக்குக் கிடைத்து : மலர் 1. இதழ் 12 (1-9-1914).

ஆசிரியர் : அ. சுப்பிரமணிய நாயகர். சென்னை வேப்பேரி கிருஷ்ண கம்பெனியில் அச்சியற்றப் பெற்று இஃது ஆசிரியரால் வெளியிடப் பெற்றது.

அளவு : 44 × 28 செ. மீ., பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்று.

இவ்விதழ் வன்னிய குலத்தாரின் முன்னேற்றத்தைக் கருதி வெளியிடப்பட்டது. உலகச்செய்திகளை அனைவருமே நன்கு உணர்ந்துகொள்ள வேண்டியது கட்டாயமாதலின் உலகச் செய்திகளும் இதில் விரிவாக வெளியிடப்பட்டன. (கஅச)

## 61. ஸ்ரீ லோக மித்திரன் - 1913

பார்வைக்குக் கிடைத்தது : வா - 2. ந. 2. ஆநந்த ஆண்டு வைகாசித் திங்கள், 1911.

ஆசிரியர்கள் : எம். வி. கோவிந்தராசய்யங்கார். நாமக்கல் யூனியன் அச்சியந்திர சாலையில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 22 × 14 செ. மீ., பக்கங்கள் 56. தனி இதழ் அணா ஆறு. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று. தபாற்கூலி, அணா நான்கு.

இவ்விதழில் இலௌகிக வைதிகச் செய்திகள், பழங் கால நூல் ஆராய்ச்சிகள், அரசியல் செய்திகள், இலக்கண இலக்கிய ஆராய்ச்சிகள், தொடர் நாவல்கள் முதலியன தகுந்த அறிஞர்களால் எழுதப்பெற்று வெளியாயின.

(கஅஎ)

## 62 சைவம் - 1914

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 10. இதழ். 5- இரக்தாட்சியாண்டு ஆவணித் திங்கள், 1924 ஆகஸ்டு.

ஆசிரியர் : திருக்கம் ஆதிமூல முதலியார். சென்னைச் சிவனடியார் திருக்கூட்டம் என்ப பெயரிய சைவ மஹா சபையின் திங்கள் வெளியீடாகிய இது சென்னை சாது அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 22 × 14 செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

சைவ சமய வளர்ச்சியைக் கருதி வெளியிடப்பட்டது. சைவ சமயச்சார்பான சிறந்த கட்டுரைகளே இவ்விதழில் வெளியாயின.

(கஅஅ)

## 63. திராவிட பாகவதன் - 1914

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 1. எண்-3. 1914

ஆசிரியர் : டி. கே. சீநிவாச ஐயங்கார். கோமளேசு வரன்பேட்டை சச்சிதானந்தம் அச்சியந்திர சாலையில் அச் சிட்டு ஆசிரியரால் சென்னை புரசவாக்கத்தில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு : 22 × 14 செ. மீ., பக்கங்கள் 24. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றே கால்.

இவ்விதழ் தனித்தனி நூல்கள் அச்சிடும் வகையில் அமைந்துள்ளது. இராம நாடகம், பாகவதர் சங்கீத காலட்சேபம், இந்திய ஸ்தல புராணம், பாரதக் கதைகள் முதலின வெளியாகியுள்ளன.

(கஅகூ)

## 64. தொழிற் கல்வி - 1914

பார்வைக்குக் கிடைத்தது: முதல் தொகுதி 1911 ஆம் ஆண்டில் வெளியாகியது.

ஆசிரியர்: வண்ணக் களஞ்சியம் நாஞ்சி நாகலிங்க முதலியார். சென்னை கலாரத்நாகரம் அச்சகத்தில் அச்சியற்றி ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்றரை.

இவ்விதழ் தொழிற் கல்வி பற்றிய அறிவை மக்களிடையே பரப்ப வேண்டும் என்னும் நோக்கோடு தொடங்கப் பெற்றது. தமிழ் வளர்ச்சிக்கான கட்டுரைகளும் வெளி வந்தன. பார்வைக்குக் கிடைத்த இதழில் உழவுத் தொழில், புகழேந்திப் புலவர் சரிதம், கல்வியே கருந்தனம், திருமுருகாற்றுப்படை, நெசவுத் தொழில், வெல்லஞ் செய்தல் முதலிய பல கட்டுரைகள் வெளி வந்துள்ளன. (கக௦)

## 65. நாட்டுக்கோட்டை வைசியம் - 1914

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 2. இதழ் 1. (1915).

ஆசிரியர்: ப. சொ. ஆண்டியப்பன். பாளையங் கோட்டை பென்ட்லாண்டு அச்சகத்தில் அச்சிடப் பெற்றது.

அளவு $24 \times 16\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 16. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டே கால். தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் பல வகையான செய்திகளையுந்தாங்கி எல்லோருக்கும் பயன் படத்தக்க முறையில் வெளியாகியது. இவ்விதழ் சீரிய முறையில் நடைபெற்றதாயினும் போதிய ஆதரவைப் பெறாமல் விரைவில் மறைந்தொழிந்தது போலும். (கககக)

## 66. வித்யாபாநு - 1914

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 6. பகுதி ஆனந்த ஆண்டு வைகாசித் திங்கள் (1914).

ஆசிரியர்கள்: மு. ரா. கந்தசாமிக் கவிராயர், ம. கோபாலகிருட்டிணையர். இவ்விதழ் மதுரையில் இருந்து ஆசிரியர்களால் அச்சியற்றி வெளியிடப்பட்டது. அச்சியற்றப்பெற்ற அச்சுக்கூடத்தின் பெயர் காணப்பெறவில்லை.

அளவு: 22 × 14 செ. மீ., பக்கங்கள் 42. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு. மாணவர்கட்கு ஒன்றே கால். தனியிதழ் அணா மூன்று.

இவ்விதழ் சிறந்த கட்டுரைகளை வெளியிட்டு மக்களுக்குக் கல்வியறிவைப் பெருக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றியது. அதற்குத் தக்கவாறு சிறந்த கட்டுரைகள் பல வெளியாயின. (கக௨)

## 67. வைத்திய கலாநிதி - 1914

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 7. சஞ்சிகை 5, 6. இரௌத்திரி ஆண்டு வைகாசித் திங்கள் 1920 மே ஜூன்.

ஆசிரியர்: ஆயுர்வேத பூஷணம் பண்டிட் எம். துரைசாமி ஐயங்கார். சென்னை தாம்ஸன் கம்பெனி மினர்வா அச்சுக்கூடத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வேப்பேரியில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 24 × 18. செ. மீ., பக்கங்கள் 24. கையொப்ப விவரம் தெரியவில்லை.

இவ்விதழ் மருத்துவத் துறையிற் பணிபுரிதற்கு வெளியிடப்பட்டது. காதுகளைக் கருத்துடன் பராமரித்தல், நித்திரையுறுகையில் வாயால் மூச்சு விடுதலைத் தடுத்தல், ஜனனவிகிதத்தின் கண்காணிப்பும் சிசுமரணமும் முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகியுள்ளன.

(ககங)

## 68. ஹைகோர்ட்டுத் தீர்மானங்கள் - 1914

பார்வைக்குக் கிடைத்தது: வால்யூம் 2. பாகம் 5. (1916 ஜனவரி)

ஆசிரியர்கள்: சி. சுந்தரமய்யர், பி.ஏ., பி.எல். வக்கீல். ஏ. நடேச பிள்ளை வக்கீல். சென்னை திருவல்லிக்கேணி கமர்ஷியல் அச்சகத்தில் அச்சிட்டு மாயூரத்தில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 25 × 17 செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஐந்து.

இவ்விதழ் தமிழ்மொழியைப் பயின்றவர்கள் வியவகார நுட்பங்களை எளிதில் உணரும் பொருட்டு உயர்நீதி மன்ற வழக்குகள் தீர்ப்புகள் முதலியவைகளை வெளியிட்டுக் கொண்டிருந்தது. இப்பொழுது நடைபெறும் 'வக்கீல்' என்னும் இதழைப் போன்றது. (கசுச)

## 69. ஆர்யவைசியாபிமானி - 1915

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 1. இராட்சத ஆண்டு சித்திரைத்திங்கள் (1915 ஏப்ரல்)

ஆசிரியர்: வீ. ஆர். நாகமய்ய செட்டி. சேலம் செவ்வாய்ப்பேட்டையில் ஆரிய வைசியாபிமானி அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: 21 × 14 செ. மீ., பக்கங்கள் 18. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றே கால்.

இவ்விதழ் ஆர்யவைசியர்களின் முன்னேற்றத்தையும் நன்மையையும் நாடி வெளியிடப்பெற்றது. மகன் மனைவி யிருக்க வேண்டிய முறை, சேலம் வைசிய மாணுக்கர்களின் சங்கம் முதலிய சில கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகி யுள்ளன. (கசுரு)

## 70. விவேக திவாகரன் - 1915

*பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 6, 7, இராட்சஸ ஆண்டு புரட்டாசி ஐப்பசித் திங்கள் 1925.*

*ஆசிரியர்: தி. அ. முத்துச் சாமிக் கோனார். திருச்செங் கோடு விவேக திவாகரன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*அளவு: 22 × 14 செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் விலை அணா ஆறு.*

*மக்கட்கு நல்லறிவையும் விவேகத்தையும் உண்டாக்கத்தக்க கட்டுரைகளை வெளியிட்டு மக்களுக்கு அறிவு நலம் சிறந்தோங்குமாறு செய்யவேண்டுமென்பதே இவ்விதழை வெளியிட்டவருடைய நோக்கம். பசுவின் அபிவிருத்தி, தாய்பாஷை, முப்பொருள் நிறைவு, இன்சொல் முதலிய கட்டுரைகள் வெளிவந்துள்ளன.* (கசுச)

## 71. விவேகோதயம் - 1916

*பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 4. நள ஆண்டு வைகாசித் திங்கள். (1916 மே.)*

*ஆசிரியர்கள் மா. கோபால கிருஷ்ணையர், வி. பாலம்மாள். திருமங்கலம் ஸ்ரீ கிருஷ்ணவிலாசம் அச்சகத்தில் அச்சிட்டு மதுரை புதுமண்டபம் புத்தக வியாபாரி இ. மா. கோ. பாலகிருட்டிணக் கோனாரால் வெளியிடப்பட்டது.*

*அளவு: $21\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தனியிதழ் அணா மூன்று.*

*இவ்விதழ் மதுரை மாணவர் செந்தமிழ்ச் சங்க வெளியீடாக வெளியாகியது. எல்லோரும் விருப்பங் கொண்டு படிக்கத்தக்க முறையில் பலவகையான கட்டுரைகளை ஒரு புத்தகம்போல் மக்கட்கு வழங்கி எல்லோருங் கற்று மகிழ்ந்து நல்லறிவு பெறுமாறு செய்யவேண்டும் என்பதனையே முதன்மையான நோக்கமாகக் கொண்டு தோன்றிய இவ்விதழ் சிறிய முறையில் பணிபுரிந்தது.* (கசுஎ)

## 72. ஜனோபகாரி - 1916

*பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 3. சஞ்சிகை ? பிங்கள ஆண்டு மாசித்திங்கள் (1918 பிப்ரவரி)*

*ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இராயவேலூர் வி. என். சாமராவ் கம்பெனியாரால் வெளியிடப்பட்டது.*

*அளவு: 24 × 18 செ. மீ., பக்கங்கள் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று. தனியிதழ் விலை அணு ஐந்து.*

*பொதுமக்களின் நன்மையை முன்னிட்டு இவ்விதழ் தோன்றியது. ஜனோபகாரி என்பதன் பொருளும் மக்களுக்கு உதவி செய்வது என்பதுதான். இதில் கல்வி, பயிர்த்தொழில், கைத்தொழில், கூட்டுறவு ஆகிய இவைகளைக் குறித்த பல கட்டுரைகளும் மக்கட் கூட்டத்தின் வளர்ச்சிக்குரிய பிற செய்திகளும், சிறந்த அறநெறியைப் போதிக்கவல்ல நவீனங்களும், நாடகங்களும், மாணவர் கட்குப் பயன்படத்தக்க கட்டுரைகளும், நாட்டுமுன்னேற்றத் திற்குப் பாடுபட்ட பெரியார்களுடைய வரலாறுகளும் வெளி வந்தன.* (ககூஅ)

## 73. கல்பதரு - 1917

*பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 3. இலக்கம் 3,4. சித்தார்த்தி ஆண்டு வைகாசித் திங்கள். (1919 ஜுன்)*

*ஆசிரியர்: கே. ஆர். கிருட்டிணமாசாரியார். ஆசிரியரால் சென்னை கிருட்டிணன் கோவில் தெருவில் இருந்து வெளியிடப்பட்டது.*

*அளவு: 24 × 16. செ. மீ., பக்கங்கள் 36. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.*

*ஒவ்வொருவரும் விரும்பிப படிக்கத்தக்க இனிய கட்டுரைகளை வெளியிட்டு மக்கள் விரும்பும் கலைப்பொருள்களை யெல்லாம் வழங்கவேண்டும் என்னும் நோக்கத்துடனேயே இக் கல்பதரு தோன்றியது. பெண்களின் முன்னேற்றம்*

பற்றிய கட்டுரை, வரலாறுகள், சிறுகதைகள் முதலியன இதில் வெளியாயின. (கூகூ)

## 74. கல்வி - 1917

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. பகுதி 1. பிங்கள ஆண்டு ஆடித்திங்கள் (1917 ஜூலை)

ஆசிரியர் : ஆர். எஸ். நாராயணசாமி அய்யர் பி. ஏ. பி. எல். மதுரை விக்டோரியா அச்சுக்கூடத்தில் எஸ். நாகராச அய்யரால் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 27 × 20½ செ. மீ., பக்கங்கள் 16. ஆண்டுக் கையொப்பவிவரம் இதழில் காணப்பெறவில்லை.

இவ்விதழின் நோக்கம் கல்வியை நாட்டிலே பரவச் செய்ய வேண்டுமென்பது போதனுமுறைச் சுருக்கம், கல்வி நிலைமை முதலிய கட்டுரைகள் இதழில் வெளியாகியுள்ளன. கட்டுரையாளர்களிற் பெரும்பாலார் உயர்தரக் கல்வி கற்ற பட்டதாரிகளாக உள்ளனர். (உ00)

## 75. தமிழர் நேசன் - 1917

ஏழாவது தொகுதி பார்வைக்குக் கிடைத்தது. ருத்ரோத்காரியாண்டு சித்திரைத் திங்கள்.

தமிழர் கல்விச் சங்கத்திலிருந்து வெளியான இதழ். ஆசிரியர் பெயரோ அச்சிட்டவர் பெயரோ அறிய முடியவில்லை.

அளவு : 20 × 12 செ. மீ., பக்கங்கள் 32. தனியிதழ் விலை அணு நான்கு. ஆண்டுக்கையொப்பம் ரூபா மூன்று.

தமிழர்களுடைய முன்னேற்றத்திற்கு உழைக்கத் தோன்றிய இவ்விதழ் உண்மையில் நல்ல தொண்டு செய்திருக்கிறது. பௌதிகம், இரசாயனம், தாவரம், உயிர், மருத்துவம், சிற்பம், வரலாறு, மொழியாராய்ச்சி முதலிய எல்லாத்துறைகளினும் முன்னின்று உழைத்திருக்கிறது. (உ0க)

## 76. தமிழ் மகவு - 1917

*பார்வைக்குக் கிடைத்தது: ஆண்டு 1. மதி: காளயுக்தி ஆண்டு ஆனித் திங்கள். (1918 சூன்)*

*ஆசிரியர்: புதுவை அரசினர் கல்விச்சாலைத் தமிழாசிரியர் வீ. துரைசாமி முதலியார்.*

*அளவு: $21\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 12. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் அணா ஒன்று.*

*புதுவைத் தமிழ்ச் சங்கத்தில் இருந்து திங்கள் தோறும் வெளிவந்த இவ்விதழின் நோக்கம் மக்கட்குக் கல்விப்பயிற்சி உண்டாகுமாறு செய்யவேண்டும் என்பதே. விவேகம், பத்துப்பாட்டு, பாரதம்பாடிய பெருந்தேவனார் வரலாற்றுக் குறிப்புக்கள் முதலியன பார்வைக்குக் கிடைத்த இதழில் வெளிவந்துள்ளன.* (உ0உ)

## 77. விவேகாமிர்தம் - 1917

*பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 3, 4. பிங்கள ஆண்டு புரட்டாசி ஐப்பசித் திங்கள். 1-8-1917.*

*ஆசிரியர்: சி. மு. நடேச முதலியார். சென்னை சிவகாமி விலாசம் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*அளவு: $2\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றேகால்.*

*இவ்விதழ் தமிழ் இதழ் ஒன்று நடைபெறுகிறதென்று யாரும் நினையாவண்ணம் முழு விளம்பரமாகவே உள்ளது. நாற்பது பக்கங்களில் 32 பக்கங்கள் புத்தகங்கள் மருந்துகள்முதலியவைகளைப்பற்றியவிளம்பரமாகவுள்ளன. இதனை ஒரு விலைப்பட்டியல் என்று உரைத்தலுக்கு இடையிருக்க இருந்தவை எட்டுப்பக்கங்களின் கட்டுரைகளேயாம். விளம்பரமே இதனுடைய குறிக்கோள்.* (உ0ௗ)

## 78. இராமாநுஜன் 1918

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 1. 1918 பிப்ரவரி.

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. திருநெல்வேலி இராமாநுஜ சபையாரால் திருநெல்வேலி தர்பார் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $20\frac{1}{2} \times 16\frac{1}{2}$ செ.மீ, பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் தனது நோக்கத்தை, "இதுகாறும் தமிழில் வெளிவந்திராத சித்தாந்த உண்மைகளும் சரித்திரக் குறிப்புகளும், சித்தாந்தத்தின் தற்கால அபிவிருத்திக்கு இன்றியமையாதனவாகக் கருதப்படும் மொழிபெயர்ப்புகளும், சமய வளர்ச்சிக்கும் ஆராய்ச்சிக்கும் வேண்டுவன வாகிய பிற விஷயங்களும் இராமாநுஜன் வாயிலாக வெளி வரும்" என்று குறிப்பிட்டுள்ளது. (உ0௪)

## 79. கலாசிந்தாமணி - 1918

பார்வைக்குக் கிடைத்தது: மணி 7. கதிர் 2. பிரபவ ஆண்டு வைகாசித் திங்கள்.

ஆசிரியர்கள்: சி. மு. முனி. நடேச முதலியார்; மயிலை க. மாணிக்கவேலு முதலியார். சென்னை சிவகாமி விலாசம் அச்சகத்தில் வெளியிடப்பட்டது.

அளவு: $24\frac{1}{2} \times 16\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் சிறந்த செந்தமிழ்த் திங்கள் வெளியீடாகத் திகழ்ந்தது. பல சிறந்த அறிஞர் உயர்ந்த கட்டுரைகள் எழுதியுள்ளனர். திருவள்ளுவர் திருப்புகழ், தமிழ்மொழியின் பெருமை, முப்பொருள் முதலிய கட்டுரைகளும், ஒட்டக்கூத்தர் தக்கயாகப் பரணிபாடிய வரலாறும் இவ்விதழில் வெளியாகியுள்ளன. (உ0௫)

## 80. கதா ரத்னாகரம் - 1918

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 6. பகுதி 3 உருத்ரோத்காரியாண்டு ஆவணித்திங்கள் (1923 ஆகஸ்ட்)

ஆசிரியர்: எம். ஏ. நெல்லையப்பர். சுதேசமித்திரன் அலுவலகச் சார்பாகச் சுதேசமித்திரன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 21 × 13½ செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு. தனியிதழ் விலை அணா நான்கு.

அரிய கதைகளை வெளியிட்டு மக்களின் மனத்தைக் கவரவேண்டும்; அவர்கட்கு மகிழ்ச்சியை அளிக்கவேண்டும் என்பதே இவ்விதழை வெளிப்படுத்தியதன் நோக்கமாகும். நோக்கத்திற் கேற்பக் கட்டுரைகளும் கதைகளும் நகைச் சுவைப்பகுதிகளும் இவ்விதழில் வெளியாயின. (உ0சு)

## 81. தமிழ்ச்சபைத் தீபிகை - 1918

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 3. இலக்கம் 10. (1920 அக்டோபர்)

இவ்விதழ் திருச்சிராப்பள்ளியில் இருந்து இராவ் சாகேப் எஸ். கே தேவசிகாமணி, கனம் சுஜேன் மனுவேல் ஐயர் முதலியோரைப் பதிப்பாளராகக் கொண்டு வெளியாகியது.

அளவு: 21½ × 13½ செ. மீ., பக்கங்கள் 50. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

கிறித்துவர்கள் நமது நாட்டிற்கு வந்து தங்களுடைய சமயத்தைப் பரப்புவதற்குப் பலவகை யேற்பாடுகளைச் செய்தனர். அவ்வேற்பாடுகளுள் இதழ்நடத்தி இதழ் களின் மூலம் மக்களின் மனத்தை மாற்றுவதும் ஒன்றாகும். அவ்வாறு வெளியான இதழ்களில் இதுவும் ஒன்று. (உ0எ)

## 82. தருமசீலன் - 1918

*பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 6. சஞ்சிகை 9. உருத்திரோத்காரியாண்டு மார்கழித்திங்கள் (1923 டிசம்பர்)*

*ஆசிரியர்: தி. ஆதிநயினார். சென்னைமாநகரில் தருமசீலன் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.*

*அளவு: 21 × 14 செ. மீ., பக்கங்கள் 24. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக்கையொப்பம் ரூபா ஒன்று.*

*இவ்விதழ் சைன சமயத்தினரால் நடத்தப்பட்டது. நமது சமயக்கோட்பாடுகளையேயன்றி எல்லாவகையான செய்திகளையும் வெளிப்படுத்தி மக்களுக்குத் தமிழ்த் தொண்டு புரியவேண்டுமென்பது இவ்விதழினுடைய நோக்கம். இரகுவமிசம், மல்லிநாதர் குறவஞ்சி, ஞானதீபம் முதலிய நூற்பகுதிகளும் சிறந்த கட்டுரைகள் பலவும் இதில் வெளியாகியுள்ளன.* (உ0அ)

## 83. ஸ்ரீலோகமாதா - 1918

*பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1 (14-3-1918)*

*ஆசிரியர்: ம. மு. நாராயணசாமி. திருவாங்கூரைச் சேர்ந்த புனலூரில் இருந்து வெளியான இவ்விதழ் கொல்லம் வி. வி. அச்சகத்தில் பி. என். சங்கர பிள்ளை என்பவரால் அச்சிடப்பெற்றது.*

*அளவு: 21 × 13½ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தனியிதழ் அணா இரண்டு.*

*இவ்விதழ் நல்ல கட்டுரைகளை வெளியிட்டுக் கலைப் பணி புரியவேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றியது. வ. உ. சிதம்பரம்பிள்ளை சாதிதத்துவம் என்னுங் கட்டுரையும் மறைமலையடிகள் சைவபரிபாலனம் என்னுங் கட்டுரையும் வரைந்துள்ளனர். வேறு சில அறிஞர்களுடைய கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன.* (உ0கூ)

## 84. ஆதி திராவிடன் - 1919

பார்வைக்கு கிடைத்தது: மலர் 1. இதழ் 7. (15-9-1919)

ஆசிரியர்: எஸ். பி. கோபாலசாமி. இலங்கை தென்னிந்திய ஐக்கிய சங்கத்தாரால் வெளியிடப் பெற்ற இவ்விதழ் கொழும்பு ராபர்ட் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $21 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 22. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்றேகால்.

இவ்விதழ் ஆதிதிராவிடருடைய முன்னேற்றங் கருதி வெளியிடப்பெற்றது. "ஆதிதிராவிடர் முன்னேற்றம்" "ஒருவரையும் பொல்லாங்கு சொல்லவேண்டாம்" முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. (உ௧0)

## 85. கதாவருஷிணி - 1919

பார்வைக்குக் கிடைத்தது: பருவம் 2. மழை 2. சித்தார்த்தியாண்டு மாசித்திங்கள் (1920 பிப்ரவரி)

ஆசிரியர்: சு. அ. சுப்பராய பிள்ளை. தூத்துக்குடி வேலாயுதம் பிரிண்டிங் பிரசில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: $20 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டு.

இவ்விதழ் சிறந்த கதைகள், வரலாறுகள், சொல்லாடல்கள், பாட்டுகள், கட்டுரைகள், நன்னெறிக் கட்டுரைகள், தமிழ்க்கலை ஆராய்ச்சிகள் முதலியவைகளைக்கொண்டு வெளியாகியது. நாடகங்கள் விடுகதைகள் பொதுச்செய்திகள் முதலியவைகளும் திங்கள்தோறும் வெளியாயின. சிறந்த அறிஞர்கள் பலர் இவ்விதழில் கட்டுரைகள் வரைந்தனர். (உ௧௧)

## 86. தாரகதூதன் - 1919

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 5. பகுதி 7. (1924 மார்ச்சு.)

ஆசிரியர் : டி. பி. பாஷ்யாசாரியார். கோயமுத்தூர் எலக்டிரிக் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிடப்பட்டு ஆசிரியரால் வெளிப்படுத்தப்பட்டது.

அளவு : 24 × 16 செ. மீ., பக்கங்கள் 36. தனிப்பிரதி அணா இரண்டு. ஆண்டுக்கையொப்பம் ரூபாய் ஒன்று.

இஃது உதயநிலை நட்சத்திர சங்கத்தில் இருந்து வெளியிடப்பட்டது. உலக குருவானவர் விரைவாக இவ்வுலகில் தோன்றப்போகிறார் என்னும் செய்தியை உலகத்தில் பரப்பி மக்களை அதற்குத் தயார் செய்வதே இவ்விதழின் நோக்கமாகவிருந்தது. உதயநிலை நட்சத்திரச் சங்கச் செய்திகள் இவ்விதழில் வெளியாயின. (உகஉ)

## 87. பரமஹம்ஸ ப்ரகாசினி - 1919

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. பகுதி 1. காளயுக்தியாண்டு தைத்திங்கள் (1919 ஜனவரி)

ஆசிரியர் : பெயர் தெரியவில்லை. திருவரங்கம் வாணி விலாச அச்சகத்தில் அச்சிட்டுப் புதுக்கோட்டையில் இருந்து வெளியாகியது.

அளவு : 22 × 14½ செ. மீ., பக்கங்கள் 32. தனிப்பிரதி அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

"ஆரிய மதத்தின் அருமை வெளிவர, ஆண்டவன் அருள் அனைவருக்கும் உண்டாக, பக்தி மார்க்கம் செழித்துப் பிரகாசிக்க, யோகத்தின் உண்மைக்கருத்து உலகெங்கும் ஓங்கி விளங்க, நமது தாய்மொழி முன்னேற" பரமஹம்ஸப்ரகாசினி வெளிவருகிறாள் என்று ஆசிரியர் தம் முடைய கொள்கையைக் கூறுகிறார். (உகங)

## 88. ஒற்றுமை - 1920

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 7. பகுதி 12. (1927 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள்.)

ஆசிரியர்: மு. ஏ. வீரபாகுப்பிள்ளை பி. ஏ. எல். டி. சென்னை மவுண்ட் ரோட் பி. என். அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 18 × 12 செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் அணா ஒன்றரை.

நல்ல தமிழ்க்கட்டுரைகள் பல வெளியிட்டுத் தமிழ்த் தொண்டுசெய்யவேண்டும்; மக்களுக்கும் மாணவர்களுக்குள்ளும் ஒற்றுமையை வளர்ப்பதற்குப் பாடுபட வேண்டும் என்னும் நோக்கத்தோடு இவ்விதழ் தொடங்கி நடத்தப்பெற்றது. மா. வே. நெல்லையப்ப பிள்ளை, ரா. பி. சேதுப்பிள்ளை முதலிய அறிஞர்கள் இவ்விதழில் கட்டுரைகள் எழுதினார்கள். இவ்விதழ் பிற்காலத்தில் காலத்திற்கேற்பக் கதைகள் நகைச்சுவைப் பகுதிகள் முதலியவைகளையுங் கொண்டு வெளிவந்தது. பிற்காலத்தில் இதழின் அளவு பெரிதாகி மாறுபாட்டையும் அடைந்தது. (உகச)

## 89. சகலகலாவல்லி - 1920

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1. 1920 ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் வெளிவந்த முதல் இதழ்.

ஆசிரியர்: ராம. வெ. இராமகிருட்டிண அய்யர் உசிலம்பட்டி. திருமங்கலம் கிருட்டிண விலாசம் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 22 × 14 செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டு. தனியிதழ் அணா மூன்று.

இதிற் பல கட்டுரைகள் வெளிவந்துள்ளன. ஆசிரியர் தம்முடைய நோக்கத்தை, "இத்தருணத்தில் தமிழைப்பயில

வேண்டுமென்ற விருப்பத்தை நம் நாட்டினரிடத்தில் வளர்க்கவேண்டும் என்பதையே பெருநோக்கமாகக்கொண்டு உழைத்து வருவாருள் யாமும் ஒருவராக இருக்கவிரும்பியே, காகித விலையேற்றத்தால் நேரும் கைப்பொருள் நஷ்டத்தை யும் பெரிதெனக் கருதாது இப்பத்திரிகையை வெளியிடுகின்றனம்" என்று எழுதியுள்ளார். (உகரு)

## 90. சித்தர் திரு உளம் - 1920

பார்வைக்குக் கிடைத்தது : மலர் *1*. இதழ் *2*. இரௌத்திரி ஆண்டு மார்கழித் திங்கள் (*1920* டிசம்பர்)

ஆசிரியர் : பரஞ்சோதி. சென்னை டைமன் அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : *21 × 14*, தனி இதழ் அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டு.

இவ்விதழ் மக்களுக்குச் சித்த வைத்திய அறிவினை உண்டாக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியிடப்பட்டது. பதார்த்த குணம், பருவ காலங்களும் அவற்றிற்குரிய பாதுகாப்பும், நோயாளிகளைப் பாதுகாக்கும் முறை, தத்துவ தீபிகை முதலிய கட்டுரைகள் இதனில் வெளியாயின. (உகசு)

## 91. மதிபூரணி - 1920

பார்வைக்குக் கிடைத்தது : மலர் *1*. இதழ் *2*. *1920* பிப்ரவரி.

ஆசிரியர்: எம். கே. இராசம் ஐயங்கார். இது திருவள்ளூர் காஞ்சிபூஷண அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது

அளவு : *21 × 13* செ. மீ., பக்கங்கள் *32*. தனி இதழ் அணா மூன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழின் நோக்கத்தைப்பற்றி ஆசிரியர், "இதன் கண், ஆடவர் மகிழும் நாடகமும், பாவலர் மெச்சும் நாவல்களும், முத்தியின்பமளிக்கும் பக்தர் கதையும், சு புடை மகளிர் களிக்கும் பொற்புறுஞ் சரிதமும், விவேக பயக்கும் வியாசங்களும், ஆண் பெண் இருபாலாரும் படித் தின்புறும் வண்ணம், அமிழ்தினும் இனிய செந்தமிழ் மொழியில், மிகவுங் கற்றுணர்ந்த மேதாவிகளால் எழுதப் பட்டுப் பொலியா நிற்கும்" என்று குறிப்பிட்டுள்ளார்.

(உகஎ)

## 92. மனோரஞ்சனி - 1920

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 5. இதழ் 7. (1924).

ஆசிரியர் வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார். சென்னை கேசரி பிரிண்டிங் பிரசில் பதிப்பிக்கப்பட்டு இராயப் பேட்டை விசயா கம்பெனியில் இருந்து வெளியாகியது.

அளவு : 21 × 14 செ. மீ., பக்கங்கள் 64. இதனுடைய விலை விவரம் தெரியவில்லை.

இது நாவல் என்னும் புதின வெளியீட்டிதழ். தொடர்ந்து நாவல்களையே வெளியிட்டுப் புத்தகமாக உரு வாக்கும் நோக்கமுடையது. இதன் பக்கங்கள் அறுபத்து நான்கிலும் ஆசிரியரால் எழுதப்பட்ட பூர்ண சந்திரோதயம் என்னும் நாவலின் 993 ஆம் பக்கம் முதல் 1056 ஆம் பக் கம் வரையுள்ள பகுதிகள் வெளியாகியுள்ளன. (உகஅ)

## 93. வித்தியாபிமானி - 1920

பார்வைக்குக் கிடைத்தது: வாலம் 1. இலக்கம் 2. (1920 மே)

ஆசிரியர் : பி. ஆர். சுந்தரராச ஐயர். சென்னை மாடன் அச்சகத்தில் அச்சிட்டு மதுரை மாவட்டம் பெரியகுளத்தில் இருந்து வெளியாகியது.

அளவு : $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று.

இவ்விதழ் பொது நோக்கத்தோடு தத்துவ ஆராய்ச்சி, மக்கட் சீர்திருத்தம், மாதர் சிறுவர் நல் பாதுகாப்பு, தமிழ் மொழிக் கல்வி வளர்ச்சி ஆகியவைகளைத் தனது நோக்கமாகக் கொண்டு வெளியாகியது. (உகக)

## 94. வித்தியாபோதினி - 1920

*பார்வைக்குக் கிடைத்தது : மலர் 2. இதழ் 1. துன்மதியாண்டு ஆவணித் திங்கள் (1921 ஆகஸ்டு)*

*ஆசிரியர் : பு. பி. புன்னைவனநாதன். கெ. வி. பத்மநாப ஐயரால் மதுரை ஸ்ரீகொண்டா பிரஸில் அச்சிட்டு வெளியிடப்பட்டது,*

*அளவு : 21 × 14 செ. மீ., பக்கங்கள 38. தனி இதழ் அணா இரண்டு. ஆண்டுக்கையொப்பம் ரூபாய் ஒன்று.*

*இவ்விதழ் விவசாயம், வாணிகம், கைத்தொழில், கூட்டுறவு, மருத்துவம், அறிவு நூல், சிறுவர் சிறுமியர்க்கான நீதிக் கதைகள் முதலியவைகளை வெளிப்படுத்தும் நோக்கத்தோடு தொடங்கப்பட்டது. பார்வைக்குக் கிடைத்த இதழில் சிறந்த கட்டுரைகள் சில வெளியாகியுள்ளன.* (உஉ0)

## 95. வைகானசன் - 1920

*பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 3. சஞ்சிகை 2. துந்துபியாண்டு வைகாசித் திங்கள் (1922 மே.)*

*ஆசிரியர். பி. கெ. அநந்தநாராயண ஐயங்கார். கோயமுத்தூர் வெரைட்டி ஹால் எலக்ட்ரிக் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிடப்பட்டுப் பண்ணைமடையில் இருந்து ஆசிரியரால் வெளியிடப்பட்டது.*

*அளவு : 21 × 13 செ. மீ., பக்கங்கள் 24. தனி இதழ் அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.*

இவ்விதழ் வைணவ சம்பிரதாயக் கொள்கைகளை வளர்ப்பதற்காகத் தோன்றியது. வைகானச வர்ணாச்ரம தர்மங்கள், யுகங்களின் விருத்தாந்தம் முதலிய கட்டுரைகள் இதில் வெளியாகியிருப்பதோடு வேறுபல கட்டுரைகளும் வெளியாகியுள்ளன. (உஉக)

## 96. வைசியரத்தினம் - 1920

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 3, 4. ரௌத்ரியாண்டு ஆனித் திங்கள்.

ஆசிரியர்: சேலம் செவ்வாய்ப்பேட்டை எஸ். எ. கே. சுப்பிரமணியஞ் செட்டியார். சேலம் சண்முக விலாச அச்சகத்தில் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது.

அளவு : $21\frac{1}{2} \times 14\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 26. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டரை.

இவ்விதழ் ஆயிரவைசிய சமூக மக்களின் முன்னேற்றங் கருதி வெளியிடப்பட்டது. ஆயினும் நாட்டு விடுதலை முதலிய துறைகளினும் இயன்ற அளவு ஈடுபட்டுழைத்துப் பணி புரிந்தது. (உஉஉ)

## 97. ஆநந்த சாகரம் - 1921

ஓராண்டு மலர்கள் முற்றும் பார்வைக்குக் கிடைத்தன. துன்மதியாண்டு சித்திரைத் திங்கள் (13-4-1921)

ஆசிரியர் : சி. பதுமநாப ஐயர். கொழும்பு இராபர்ட் அச்சகத்தில் அச்சிட்டுத் தேவராசு உடன்பிறந்தார்கள் என்பவர்களால் வெளியிடப்பெற்றன.

அளவு $30 \times 16$ செ. மீ., பக்கங்கள் 40. முதன் மலரின் விலை ரூபா இரண்டு.

ஆனந்தசாகரம் என்றால் இன்பக்கடல் என்று பொருள். இவ்விதழ் பலவகையான இனிய செய்திகளைப் படிப்பவர்கட்குக் கொடுத்து அவர்களை இன்பக் கடலில்

ஆழ்த்தவேண்டும் என்பதையே நோக்கமாகக் கொண்டு தோன்றியது. சிலேடை மொழிகள் விசித்திர விநோதங்கள், வரலாறுகள் கதைகள் முதலிய பலவும் இவ்விதழில் வெளியாயின. (௨௨௩)

## 98. கதாரஞ்சனி - 1921

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 3. (1922 மார்ச்.)

இது திருப்பாதிரிப்புலியூர் வாணி விலாச புத்தக சாலையாரால் மேற்படியூர் எஸ். கே. வி. அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 19 × 13 செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றேகால்.

இது கதை வெளியீடு. இதில் இனிய தமிழ்நாவல்கள் மட்டும் வெளியாயின. பெரிய நாவல்கள் ஒவ்வொரு திங்களிலும் பகுதி பகுதியாக வெளியாகி, ஆறு திங்களில் ஒவ்வொரு நாவல் முடிவு பெற்றுக்கொண்டிருந்தது. (௨௨௪)

## 99. குமரன் - 1921

பார்வைக்குக் கிடைத்தது: சதங்கை 6. மணி 9, 10 பிரபவ ஆண்டு ஆனி ஆடி.

ஆசிரியர்: காரைக்குடி சொ. முருகப்ப செட்டியார். ஆசிரியரால் குமரன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

டிம்மியளவுப் பக்கம் 32. தனி இதழ் அணா இரண்டு. ஆண்டுக்கையொப்பம் ரூபா ஒன்றரை.

செட்டிமார்நாட்டில் காரைக்குடியில் இருந்து குமரன் வார இதழ் வெளிப் போந்ததை அனைவரும் அறிவர். திங்களிதழ் ஒன்றும் வெளியிட வேண்டும் என்னும் நோக்கத்

தோடு இவ்விதழைத் தொடங்கினர். இதில் நட்பு, தூய்மை முதலிய நல்வழிக் கட்டுரைகளும், மருத்துவத்துறை முதலிய உடல்நலப் போக்கிலும் கட்டுரைகள் வெளியாயின.

(௨௨௫)

## 100. தமிழபிமானி - 1921

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1. 1921 ஆம ஆண்டு சனவரித் திங்கள்.

ஆசிரியர் : தமிழ்ப்பூடணம் வாசுதேவராவ் கேய்க்வார். பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரசில் அச்சிடப்பெற்ற இஃது அம்பாசமுத்திரத்தில் இருந்து வெளியிடப்பெற்றது.

அளவு 24 × 16 செ. மீ. பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டு. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் சமயக்கருத்துக்களையும் தமிழறிவையும் பரப்புவதற்குத் தோன்றியது. பார்வைக்குக் கிடைத்த இதழில், கடவுள், காலபேதங்களின் உண்மை, மாசி மகத்தின் மகிமை, தமிழ்ச்சிறப்பு, சிவஞான யோகிகள் வரலாறு, காலபேதங்களின் உண்மை, குருநானக் தேவ், அமெரிக்கரும் பத்திரிகையும் முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (௨௨௬)

## 101. நவசக்தி - 1921

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 13. இதழ் 6. 1933 ஆம் ஆண்டு சூலைத்திங்கள். ஆசிரியர் : திரு. வி. கலியாணசுந்தர முதலியார்.

சென்னை இராயப்பேட்டை சாது அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $24\frac{1}{2} \times 16\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக்கையொப்பம் ரூபா மூன்றரை.

ஆசிரியர் : திரு. வி. க. அவர்கள். உரிமைப் போர்ச் செய்திகளையும் கொள்கைகளையும் நாட்டுமக்கட்குப் புலப்

படுத்துவதற்கு நவசக்தியைக் கிழமையிதழாக வெளிப்படுத்தினர். பிறகு இது கிழமைக்கு மும்முறையிதழாகவும், பிறகு திங்களிதழாகவும் மாறியது. திங்களிதழாக மாறிய காலத்தில் சிறந்த பல கட்டுரைகளை வெளிப்படுத்தி நல்ல தொண்டு செய்தது. (உஉ௭)

## 102. இந்தியத்தாய் - 1922

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 2. இதழ் 2. 1929 ஆம் ஆண்டு மேத்திங்கள்.

ஆசிரியர்: வித்துவான் அமிர்தம் சுந்தரநாதப் பிள்ளை. திருச்சிராப்பள்ளி வெட்நஸ்டே ரிவ்யூ அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு $21 \times 13\frac{1}{2}$ செ. மீ. பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு. தனியிதழ் விலை அணா நான்கு.

இவ்விதழ் நல்ல கட்டுரைகளோடு ஒரு திங்களிதழை வெளிப்படுத்தவேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியிடப்பட்டது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் இராவணன் பத்துத்தலையனா? அரிச்சந்திரன் சரிதத்து ஓர் அதிசயம், தனக்குத்தானே மருத்துவன், அகடவிகடமும் அதற்குமேல் விகடமும் முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (உஉ௮)

## 103. சத்தியவாணி - 1922

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 1. துன்மதியாண்டு பங்குனித் திங்கள் (1922 மார்ச்)

பதிப்பாசிரியர்: எஸ். என் வேங்கடேச ஐயர்: சென்னை இராயப்பேட்டை சாது அச்சுக்கூடத்தில் அச்சிட்டுப் பதிப்பாசிரியரால் தங்கசாலைத் தெருவில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு 25 × 17 செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டு கையொப்பம் ரூபாய் மூன்று. தனியிதழ் விலை அணா ஐந்து

"சத்தியவாணியில் எல்லாச் சமயத்தவருக்கும் உரிய தத்துவங்கள், பண்டை இந்திய மக்களின் வரலாறு, அவர்கள் வழக்க ஒழுக்கம், அவர்கள் வளர்த்த அறம், அவர்கள் செய்த நூலாராய்ச்சி, தற்கால நாகரிகத்துறைக்கு வேண்டப்படும் பொருட்கள், மேல்நாட்டுப் பெரியோர்கள் கண்ட உண்மைகள், பூத பௌதிக தாவர ஆராய்ச்சி நுட்பங்கள் முதலிய விடயங்கள் அவ்வத் துறையில் வல்ல அறிஞர்களால் எழுதப்படும்" என்று பதிப்பாசிரியர் தம்முடைய நோக்கத்தைக் குறிப்பிட்டுள்ளார். மறைமலையடிகள் முதலிய அறிஞர்கள் இவ்விதழில் கட்டுரையெழுதியுள்ளனர்.

(உஉ௬)

## 104. சைவபரிபாலனம் - 1922

பார்வைக்குக் கிடைத்தது: 7 ஆவது ஆண்டு பதிப்பு 4. விபவ ஆண்டு புரட்டாசித் திங்கள் 16 உ (1-10-28)

ஆசிரியர் : கந்தசாமித் தம்பிரான். திருச்சிராப்பள்ளி ஸ்ரீநிலையம் அச்சகத்தில் அச்சிட்டுக் கரூரில் இருந்து வெளிப்படுத்தியது.

அளவு 28 × 22 செ. மீ., பக்கங்கள் 12. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டரை.

இவ்விதழ் சைவசமயக் கொள்கைகளை நாட்டிலே பரப்புவதற்காகத் தோன்றியது. குடியரசு, திராவிடன் முதலிய இதழ்களில் வெளிவந்த சைவ சமயப் பழிப்புக் கட்டுரைகட்கு இவ்விதழ் மறுப்பெழுதியது. இன்றியமையாத நாட்டு நடப்புச் செய்திகளும் ஓரளவு வெளியாயின. "கண்ணுவார் ஆயிடினும் உன்னைக் கைதொழார் ஆகிவிடின், அந்த மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே" என்பதை முதற்பக்கத்தில் தக்கவிடத்தில் வெளியிட்டிருக்கிறது.

(உ௬௦)

## 105. ஞானசூரியன் - 1922

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. துந்துபி யாண்டு வைகாசித் திங்கள் 1 உ. (14-5-1922)

ஆசிரியர்: கருணையாநந்தமஸ்தான் சுவாமிகள். இவ்விதழ் தஞ்சை மாவட்டத்தில் திருவாரூரில் இருந்து வெளியாகியது.

அளவு: 22 × 14½ செ. மீ., பக்கங்கள் 24. தனியிதழ் அணு மூன்று. ஆண்டுக்கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழை வெளிப்படுத்தியவர் முகமதிய சமயத்தில் தோன்றியவராயினும் வேதாந்த சித்தாந்த சர்வ சமய சமரச நெறியை மேற்கொண்ட உண்மை ஞானி. இவ்விதழில் மெய்யறிவு நெறியைப் பின்பற்றுதற்கேற்ற கட்டுரைகள் பல வெளியாயின. (உ௩௧)

## 106. பத்திரலேகரி - 1922

பார்வைக்குக் கிடைத்தது: வாலியம் 1. சஞ்சிகை 1. 1922 ஜூலை.

ஆசிரியர்: கிருட்டிணசாமி ஐயர். ஆசிரியரால் சென்னை சுகாஞ்சன் அச்சகத்தில் அச்சிட்டுக் கீழ்ப்பாக்கத்தில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 21 × 14 செ. மீ., பக்கங்கள் 16. ஆண்டுக்கையொப்பம் ரூபா இரண்டு.

பத்திரலேகரி என்றால் பத்திரம் எழுதுகிறவர்கள் என்று பொருள். இவ்விதழில் பத்திரங்கள் எழுதுகிறவர்களுக்கும், கிராம அதிகாரிகட்கும் தேவையான செய்திகள் பல வெளியிடப்பட்டு வந்தன. (உ௩உ)

## 107. விவேகாநந்தம் - 1922

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 1. துன்மதியாண்டு தைத்திங்கள், (1922 சனவரித்திங்கள்)

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. ஆரணி திருநாவுக்கரசு அச்சகத்தில் அச்சிட்டுச் சென்னையில் இருந்து எம். சக்கரவர்த்தி என்பவரால் வெளியிடப்பெற்றது. வேறு இடங்களில் இருந்தும் இப்பெயரோடு இதழ்கள் வெளியாகியுள்ளன.

அளவு : $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு. தனியிதழ் அணு நான்கு.

பௌதிக நூல், வரலாறு, தருக்கம், தத்துவம், நூலாராய்ச்சி, அறிவை வளர்க்கத்தக்க பலவகையான கட்டுரைகள், கதைகள், பண்டைப்பனுவல்கள், புதுவகையான பாடல்கள், மொழிபெயர்ப்புக் கட்டுரைகள் முதலியன இவ்விதழில் வெளியாயின. (உ௩௩)

## 108 ஸ்ரீகாளிதாசர் - 1922

பார்வைக்குக் கிடைத்தது : சஞ்சிகை நம்பர் 4. 1922 ஏப்ரல்.

ஆசிரியர் : பண்டித ரா. வே. கிருட்டிணமாசாரியார். கும்பகோணம் கோமளாம்பா அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $22 \times 14$ செ. மீ , பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் பலவகைச் செய்திகளைக் கொண்டதன்று. காளிதாசருடைய நூல்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுத் திங்கள்தோறும் வெளியிடப்பட்டு இறுதியில் நூல் வடிவாகச் செய்யப்பட்டது. பார்வைக்குக் கிடைத்த இதழில் மாளவிகாக்கினிமித்திரம் வெளியாகியுள்ளது. (உ௩௪)

## 109. ஆயுள்வேதம் - 1923

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. பகுதி 5. உருத்திரோத்காரி ஆண்டு ஆவணித் திங்கள் 12. (17-8-1923).

ஆசிரியர் : வைத்திய ஆசிரியன் பண்டிட் சிராம. வெ. தாஸ்.வேலூர் சுந்தர விநாயகர் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 14 செ. மீ. பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்னும் மூதுரையை மக்களுக்கு எடுத்துக்காட்டி, மருத்துவம், உடல் நலம் முதலானவைகளில் அவர்களுக்கு ஆற்றலையுண்டாக்குவதற்காக வெளியிடப்பட்டது. மதுபானத் தோற்ற வரலாறு, கொக்கிப்புழு நோய் முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகியுள்ளன. (உ௩௫)

## 110. ஆரியமித்ரன் - 1923

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 2. உருத்திரோத்காரியாண்டு வைகாசித் திங்கள் (1923 ஜூன்)

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சென்னை சௌகார் பேட்டை மனோரஞ்சனி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 13 செ. மீ., பக்கங்கள் 40. தனி இதழ் அணா நான்கு. ஆண்டுக்கையொப்பம் ரூபா ஒன்றரை.

ஆர்யமித்திரன் என்று இதழின் பெயர் அமைந்திருந்தபோதினும், பெயருக்கும் கட்டுரைகளுக்குந் தொடர்பில்லை. கதைகள் நாவல்கள் கட்டுரைகள் முதலியன இதில் வெளியாகியுள்ளன. (உ௩௬)

## 111. ஆரோக்கியமும் சிசுவின் சுகவாழ்வும் - 1923

பார்வைக்குக் கிடைத்தது ; மலர் 1. இதழ் 1. 1923 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள்.

ஆசிரியர் : டாக்டர் அன்னா தாமஸ் அம்மையார். திருநெல்வேலி பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரசில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 24 × 16 செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் அணு ஆறு.

சிறப்பாகக் குழந்தைகளின் நல்வாழ்வுக்கான வழி முறைகளை இவ்விதழ் வெளியிட்டு வந்தது. எல்லோருடைய உடல் நலத்திற்கும் வேண்டிய பாதுகாப்பு முறைகளையும் நன்கு புலப்படுத்தியது. சிறந்த டாக்டர்கள் பலர் இவ்விதழில் கட்டுரைகள் எழுதி இதழைப் பயன்தரும் வெளியீடாகச் செய்தனர். (௨௩௭)

## 112. இலட்சுமி - 1923

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 2. இதழ் 1. இரக்தாட்சியாண்டு ஆவணித்திங்கள் (ஆகஸ்ட் 1924)

ஆசிரியர் : கே. எஸ். முத்தையா, எம். ஏ., நெல்லையப்பரால் சென்னை வெஸ்ட் அண்டு கம்பெனியில் அச்சிடப்பட்டுக் கே. எஸ். சுந்தரத்தால் வெளியிடப்பட்டது.

டிம்மி அளவுப்பக்கம் 54. தனி இதழ் விலை அணு நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

மக்கள் எல்லோருக்கும் மகிழ்ச்சியை அளிக்கக்கூடிய கதை கட்டுரை முதலியவைகளை வெளியிடுதல் வேண்டும்; நல்ல திங்கள் இதழ் இஃது என்று எல்லோரும் பாராட்ட வேண்டும் என்பதொன்றையே இது முக்கிய நோக்கமாகக் கொண்டு வெளிவந்தது. (௨௩௮)

## 113. சீவானந்த போதினி - 1923

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. உருத்திரோத்காரியாண்டு வைகாசித் திங்கள் (மே. 1923)

ஆசிரியர் : தமிழ்ப்பூஷணம் வாசுதேவராவ் கேய்க்வார். சென்னை தங்கசாலைத் தெருவில் தானியாம்பாள் அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 13. செ. மீ., பக்கங்கள் 12. தனியிதழ் அணு இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்று.

இவ்விதழில் வேடிக்கைக்கதைகள், சிறுவர்க்கான கதைகள், அறிவு விளக்கக்கதைகள் பொதுவான கதைகள், விகடக்கொத்துகள், , விவசாயக் குறிப்புகள் முதலியன வெளியாகியுள்ளன. (உ௩௯)

## 114. சோதிட கலாநிதி - 1923

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 2. துந்துபியாண்டு மாசித் திங்கள் (12-2-1923)

ஆசிரியர்: இராய வேலூர் வேலப்பாடி பால சோதிடர் வ. கு. வேலுநாயகர். வேலூர் இலட்சுமி விலாச அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $21\frac{1}{2} \times 14$. செ. மீ., பக்கங்கள் 34. ஆண்டுக் கையொப்பம ரூபா ஒன்று.

காலக் கணிதக் கலையை வளர்க்க வேண்டும் என்பதை நோக்கமாகக்கொண்டு இவ்விதழ் தோன்றியது. பூகோள சிந்தாமணி, மார்க்கண்டேயர் சாதகம், கோசார பல விளக்கம் முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகியுள்ளன. (உ௪0)

## 115 திருக்குறள் விளக்கம்

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1. 1923 ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள்.

ஆசிரியர்: கி. குப்புசாமி முதலியார். சென்னை மலைச் சாலை பி. என். அச்சகத்தில் அச்சிட்டு கே. ஆர். காளத்தீசுவர முதலியார் என்பவரால் வெளியிடப்பட்டது.

அளவு: $22 \times 14$. செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் திருக்குறளின் பொருளை விரித்து உரை நடையில் எழுதுவதற்குத் தோன்றியதாகும். அவ்வாறே

தொடர்ந்து எழுதப்பெற்ற இவ்விதழ் திருக்குறள் முழுதும் எழுதி முடிந்தபின்னர்த் தனி நூலாகிவிட்டது. (உசக)

## 116. நச்சினார்க்கினியன் - 1923

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 1. 1923 அக்டோபர்த் திங்கள்.

ஆசிரியர்: பண்டித ம. கோபால கிருட்டின ஐயர். ஆசிரியரால் திருச்சிராப்பள்ளி ஜூனூகூல அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பட்டது.

அளவு: 18 × 12. செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

ஆசிரியர் இவ்விதழின் நோக்கத்தைக் குறித்து, "இப்பொழுது இப்பத்திரிகையில் (1) இனிய வியாசங்கள் (2) நாவல், (3) நாடகம், (4) விநோதக்கூற்று, (5) விடுகதைவினு, (6) ஸ்கூல்பைனல் இண்டர் மீடியேட் முதலிய வகுப்பு மாணவர்க்கு உபயோகமான பரீட்சைக்குரிய வினுக்கள், (7) அச்சில் வாராத தமிழ் நூல்கள், (8) மொழி பெயர்ப்புக்கள், (9) நீதிக்கதைகள், (10) நன்மொழிகள். (11) ஆங்காங்குள்ள தமிழ்ச் சங்கங்கள் செய்துவரும் வேலைகள் முதலியன வெளிவரும்" என்று குறிப்பிட்டுள்ளார்.

(உசஉ)

## 117. பைந்தமிழ் - 1923

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 1. துன்மதியாண்டு தைத்திங்கள் (1923 ஜனவரி)

ஆசிரியர்: செகதீசன் பி. ஏ., வெளியிட்ட இடம் அச்சகம் முதலியன அறிய முடியவில்லை.

அளவு; 22 × 14. செ. மீ. பக்கங்கள் 52. ஆண்டுக் கையொப்பம் முதலியனவும் அறிய முடியவில்லை.

ஆசிரியர், "இவ்விதழில் கடவுள் வணக்கம், இதழாசிரியர் குறிப்பு, பொது அறிவு புகட்டக்கூடிய வியாசங்கள்,

ஆதிகாலத்தில் மேன்மையடைந்த சாஸ்திரங்களின் விஷயங்கள், தற்காலத்தில் உள்ள அவசியமான விஷயங்கள், சிறந்த ஆரியமக்களின் சீவிய சரிதைகள், விநோதக் குறிப்புக்கள், கதைகள், பொதுசமாச்சாரங்கள் புராணத் தொகுதிகள் முதலிய எல்லாவகை விஷயங்களையும் எழுதி வெளியிடுவோம்" என்று குறிப்பிட்டுள்ளார். நடை பைந் தமிழ் நடையாக இல்லை. ஆரியநடையாக அமைந்திருக்கிறது. (உசங)

## 118. மெய்கண்டான் - 1923

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 8. மெய் கண்டான் ஆண்டு 701 ஆவணித்திங்கள் உ (1923 ஆகஸ்டுத்திங்கள்)

ஆசிரியர்: த. ஆறுமுகநயினார். கொழும்பு மெய்கண்டான் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 22 × 14. செ. மீ., பக்கங்கள் 16. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் சைவ சித்தாந்தத்தைப் பரப்புவதற்காகத் தோன்றியது. இவ்விதழில் ந. சி. கந்தையா, அ. நாறும்பூ நாத தேசிகர் முதலியோர் சைவசித்தாந்தக் கட்டுரைகள் எழுதியுள்ளனர். இதழ் முழுவதுஞ் சைவ சித்தாந்தக் கட்டுரைகளே அமைந்துள்ளன. (உசச)

## 119. வைசியன் - 1923

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. உருத்ரோத்காரி ஆண்டு புரட்டாசித் திங்கள் (1923)

ஆசிரியர்: எஸ். வி. கே. வீரபத்திர செட்டியார்.

இது திருச்செங்கோடு தாய்நாடு அச்சகத்தில் அச்சிடப்பட்டு அருப்புக்கோட்டையில் இருந்து ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு : 22 × 14½. செ. மீ., பக்கங்கள் 24. தனி இதழ் அணா 4. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இது வைசிய குலத்தினர்களுடைய முன்னேற்றத்தை நாடி வெளியிடப்பட்டது. வைசியர்களது சிறப்பைப்பற்றியும், அறநூல், நல்லொழுக்கம் முதலியவைகளைப்பற்றியும் இதில் கட்டுரைகள் வெளியாயின. (உசரு)

## 120. அரிசமயதிவாகரம் - 1924

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. பகுதி 3. உருத்ரோத்காரி யாண்டு பங்குனித் திங்கள் (1924)

ஆசிரியர் : ஆ. அரங்கராமானுசன். மதுரை வடக்கு மாசிவீதி மனோன்மணி விலாச அச்சியந்திரசாலையில் அச்சிட்டு மதுரையில் இருந்து வெளியிடப் பெற்றது.

அளவு : 22 × 14. செ. மீ., பக்கங்கள் 28. தனியிதழ் அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இவ்விதழ வைணவ சமயக்கொள்கைகளை யாவரும் எளிதில் உணர்ந்து ஒழுகிச் சிறப்புஞ் சீர்மையும் அடைந்து திருமால் அருள்பெற்று உய்யுமாறு சிறந்த வைணவ அறிஞர்களால் தெளிவாக எழுதப்பெற்ற வைணவ சமயக் கட்டுரைகளைத் தாங்கி வெளியாகியது. இதிற் கட்டுரை வரைந்திருப்போர் அனைவருஞ் சிறந்த வைணவப் புலவர்கள் ஆவர். (உசசு)

## 121, ஆரோக்கிய தீபிகை - 1924

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 2. இதழ் 6. 1925 ஆம் ஆண்டு சூன் திங்கள்.

ஆசியர்கள் டாக்டர் யூ. ராமராவ் எம். எல். சி. டாக்டர் யூ. கிருஷ்ணராவ் எம்., பி. பி. எஸ்., சென்னை சுதேசமித்திரன் கிளை அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

*அளவு : $24\frac{1}{2} \times 16\frac{1}{2}$. செ. மீ., பக்கங்கள் 44. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.*

*மக்கள் உடல்நலத்தோடு வாழவேண்டு மென்பதனையே முதன்மையான நோக்கமாகக் கொண்டு இவ்விதழ் உடல்நலம் பாதுகாப்பு முறைகளை மிகத் தெளிவாக வெளியிட்டுவந்தது. இதனால் மக்கள் பலர் தம்மைத்தாமே காத்துக்கொள்வதற்கு வழியுண்டாயிருந்தது. மருத்துவத் துறையில் இம்மலர் சிறந்த பணிபுரிந்தது.* (உ௪எ)

## 122 ஆனந்தவிசயன் – 1924

*பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. பகுதி 2. 1924 பெப்ருவரி.*

*ஆசிரியர்கள் : டி. மாசில்லாமணிநாடார், ஒய். இராசநாயகம் நாடார். பாளையங்கோட்டை பிரிண்டிங் அச்சுக் கூடத்தில் அச்சிட்டுப் பாளையங்கோட்டை புதுப்பேட்டைத் தெருவில் இருந்து வெளியிடப்பட்டது.*

*அளவு : $21 \times 13$. செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்று.*

*இவ்விதழ் இனிய எளிய செந்தமிழ் நடையில் ஆடவர் மகளிர் சிறுவர் சிறுமியர் முதலிய எல்லோரும் படித்துப் பயனடையத்தக்க சில கட்டுரைகளை வெளியிட்டது.* (உ௪அ)

## 123. கம்பநாடர் - 1924

*பார்வைக்குக் கிடைத்தது : பொய்கை 1. மலர் 2. உருத்ரோத்காரி யாண்டு புரட்டாசித் திங்களில் வெளி வந்த இதழ்.*

*ஆசிரியர் : மோ. வே. கோவிந்தராச ஐயங்கார். காரைக்குடி தன வைசிய ஊழியன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*அளவு : $21 \times 14$. செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஐந்து. தனியிதழ் விலை அணா எட்டு.*

கம்பருடைய இராமயணப் பாடலை நன்கு விளக்கமாக ஆராய்ந்து ஆராய்ச்சிகளுடனும் குறிப்புக்கள் முதலியவை களுடனும் வெளியிடுவதையே முதன்மையான நோக்கமாகக் கொண்டு இவ்விதழ் வெளியிடப்பட்டது. ஆசிரியர் ஐயங்கார் வைணவ சமய நூல்களில் சிறந்த ஆராய்ச்சி யுடைய வராகத் திகழ்ந்தமையின் இதழ் சீரிய முறையில் வெளியா கியது. (உசக)

## 124. கல்விக்கடல் - 1924

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. பகுதி 2. 1924 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள்.

ஆசிரியர் : எச். தேவதாஸ் பி. ஏ., எல். டி., திருநின்ற ஊர் தாசர் அச்சுக்கூடத்தில் அச்சிட்டுத் தாசர் புத்தக சாலையாரால் வெளியிடப்பட்டது.

அளவு : $24\frac{1}{2} \times 16\frac{1}{2}$. செ. மீ., பக்கங்கள் 16. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்றரை. தனியிதழ் அணா இரண்டு.

இவ்விதழ் மக்களுக்குக் கல்வியறிவைப் பெருக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியிடப்பட்டது. செந்தமிழ்க் களஞ்சியம், புகையிலை புகைத்தல், நாட்டுப் பெண் கும்மி முதலிய பல கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (உருo)

## 125. கிராமவாழ்க்கை - 1924

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 2. சஞ்சிகை 5. குரோதன ஆண்டு ஆனித் திங்கள் (1925 ஜூலை.)

ஆசிரியர் : கே. பி. சேஷாத்திரி அய்யங்கார். சென்னை கேசரி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு ஏ. ஜி. சீநிவாசாச் சாரியாரால், தங்கசாலைத்தெருவில் இருந்து வெளியிடப் பட்டது.

அளவு: 27 × 22 செ. மீ., பக்கங்கள் 16. விலை விவரந்தெரியவில்லை.

இவ்விதழ் கிராமமக்களின் முன்னேற்றத்தைக் கருதி வெளியிடப்பட்டது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் கிராம அமைப்பு, தென்னிந்தியத் தாய்மார்களுக்கு அறிக்கை, இந்தியாவின் பொருள் நிலை விருத்தி முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (உ௫க)

## 126. குணநிதி - 1924

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 8, 9. இரக்தாட்சி ஆண்டு தை மாசி (1925 சனவரி)

ஆசிரியர்: ம. சோ. பிச்சையதேசிகர். ஆசிரியரால் தஞ்சைமாவட்டம் திருவிடைமருதூரில் இருந்து பிரகத் சுந்தர குசாம்பிகா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு: 21 × 14. செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் ஒன்று. பதிவு எண் 1953.

சிறந்த கட்டுரைகள் பலவற்றை வெளியிட்டு மக்களு டைய மனப்பண்பாட்டைச் சிறந்ததாகச் செய்யவேண்டு மென்பதே இவ்விதழின் நோக்கம். ஆசிரியர் சிறந்த அறிவாளியாகையால் நல்ல கட்டுரைகளையே இதழில் வெளியிட்டார். (உ௫உ)

## 127. கொங்குவேள் - 1924

பார்வைக்குக் கிடைத்தது: சிலம்பு 1. பரல் 1. இரக் தாட்சியாண்டு சித்திரைத் திங்கள். (1924 ஏப்பரல்)

ஆசிரியர்: தி. அ. முத்துச்சாமிக் கோனார். ஈரோடு சுயராச்யா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 22 × 14. செ. மீ., பக்கங்கள் 54. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டரை. தனியிதழ் விலை அணா நான்கு.

ஆசிரியர் இவ்விதழின் நோக்கத்தை, "நமது நோக்கம் கொங்கு வேளாளராய்ச் சிறந்துள்ள நமது பெருஞ்சன சமூகத்தார்க்கு அறிவும் ஞானமும் தெளிவுபட இலக்கியம், இலக்கணம், அறிவுநூல், வேதாந்தம், சித்தாந்தம், கலை வகை, லௌகீகநூல், வைத்தியம் முதலியவைகளும், இக் கொங்கு மண்டலத்திலும் பிறமண்டலங்களிலும் வேளாளராயுள்ளவர்களில், வித்துவான்கள், புலவர், நாவலர், உபகாரிகள், பிரபுக்கள், வள்ளல்கள், அரசர்கள், பேரடியார், தவத்தர், அனுபவ ஞானிகள் ஆகிய பெரியோர்களின் வரலாறுகளும், குறிப்புரைகளும், அவர்கள் இயற்றிய நூல்கள், நூலுரைகள் இவை முதலியவைகளும், இக்கால நாகரிகத்திற்கேற்ப விகடம், வேடிக்கை, விநோதம், மாதவர்த்தமானம், பொதுச் செய்தி, நல்ல உத்தமவழியில் அறிவு செல்லக்கூடிய செந்தமிழ் நடை சிறந்த உயர்ந்த நாவல் முதலிய விஷயங்களையும் இப்பத்திரிகையில் வெளியிட வேண்டுமென்பதே" என்று குறிப்பிட்டுள்ளார். இம் முதலிதழில் நோக்கத்திற் கேற்ற கட்டுரைகள் சில வெளியாகியுள்ளன. (உருஉ)

## 128 சத்திய வாதி – 1924

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. இரக்தாட்சியாண்டு கார்த்திகைத்திங்கள் 24 உ (1924 டிசம்பர்)

ஆசிரியர்: காங்கயம் கே. வி. வேல்மயில் முதலியார். பழநி ஞானரத்திஞகர அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு: $23 \times 23\frac{1}{2}$. செ. மீ., பக்கங்கள் 44. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டரை. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் பயிர்த்தொழில், வாணிகம், அரசியல் கல்வி, கலைஞானம், வரலாற்று ஆராய்ச்சி, பெரியோர் வரலாறு, பழம் புலவர்களுடைய வரலாறு, வேதாந்த சித்தாந்தநெறி, நாவல்கள், கதைகள், வேடிக்கைகள்

முதலியவைகளை வெளியிடவேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றி அந்நிலையில் சிலகாலம் வெளிவந்தது. (உருச)

## 129. சிந்தாமணி - 1924

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 3. இதழ் 1. 1926 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள்.

ஆசிரியை: வி. பாலம்மாள் அம்மாள். சென்னை சீனிவாச வரதாச்சாரி கம்பெனியால் அச்சிடப்பெற்றது.

அளவு: 24 x 18. செ. மீ., பக்கங்கள் 80. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஐந்து.

இவ்விதழ் பெண்களின் முன்னேற்றத்தை நாடி வெளிவந்தது. பார்வைக்குக் கிடைத்த இதழில் சுபோதராம சரிதம், மார்க்கோபோலோவின் யாத்திரைகள், சரீரக் கடமை, இந்திய வீரப்பெண்மணிகளின் சரிதைகள், சிறுகதைகள் முதலியன வெளியாகியுள்ளன. (உருரு)

## 130. தர்மபோதினி – 1924

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 1. இரக்தாட்சியாண்டு சித்திரைத் திங்கள் (1924 ஏப்பிரல்) வெளிவந்தது.

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. தர்மபுரி சஞ்சீவி அச்சகத்தில் அச்சிட்டு பி. ஆர். சீநிவாசனால் வெளியிடப்பட்டது.

அளவு: 22 x 14. செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தனியிதழ் விலை அணா மூன்று.

ஆசிரியர் இத்திங்கள் வெளியீட்டின் நோக்கத்தை, "தெய்வபக்தி, ஞானம், கல்வி, கைத்தொழில், வேளாண்மை, வியாபாரம், சரித்திரம், சிறுவர் சிறுமியர் கட்கான நீதிகள், இராசாங்க சனங்க சமாசாரங்கள்,

விநோதக் கதைகள், உலக வர்த்தமானங்கள் முதலிய விடயங்களை மக்கட்குப் புகட்டி அவர்களைச் சன்மார்க்க நெறியில் நிற்கச்செய்து நம் தமிழர்களது பழைய நாகரி கங்கள் பலவற்றையும் உலகில் பரப்பும் வண்ணம் நம் 'தர்மபோதினி'யைத் தொடங்கி நடத்தக்கருதி முதற்கண் இப்பகுதியினை வெளியிட்டுள்ளோம்" என்று குறிப்பிட்டுள் ளார். முதலிதழிற் சில சிறந்த கட்டுரைகள் வெளியாகி யுள்ளன. (உ௫௬).

## 131. திருக்குறட் குமரேச வெண்பா - 1954

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 4. புத்தகம் 6. 1928 ஆம் ஆண்டில் வெளிவந்தது.

ஆசிரியர் : செகவீரபாண்டியன் : தூத்துக்குடி வேலா யுதம் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு : 22 × 14. செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா நான்கு.

திருக்குறட்பாக்களுக்குத் தக்க கதையைப் பல நூல் களினின்றும் ஆராய்ந்தெடுத்துத் திருக்குறட் பாக்களோடு இணைத்து ஆசிரியர் இந்நூலை முடித்து விரிவான உரை யும் எழுதித் திங்களுக்குத் திங்கள் வெளியிட்டுவந்தார். பிறகு நூல்வடிவாக முடிந்துவிட்டது. (உ௫௭)

## 132. நவரச மஞ்சரி - 1924

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 1. இலக்கம் 2. உருத்ரோத்காரியாண்டு தைத்திங்கள் (1924 பிப்ரவரி)

ஆசிரியராகவும் வெளியிடுபவராகவும் இருந்தவர் ஏ. எம். போரூரான் செட்டியார். சென்னை தங்கசாலைத் தெரு மனோரஞ்சனி அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளி யிடப்பட்டது.

அளவு : 25 × 16. செ. மீ., பக்கங்கள் 48. இதனுடைய ஆண்டுக் கையொப்பம் ரூபா 5-8-0.

இவ்விதழ் தெய்வபக்தி, ஞானம், கல்வி, சமயநூல், பொதுச் செய்திகள் முதலியவைகளைத் தன்னகத்தே கொண்டு வெளியாகியது. இது பாரதம் முதலிய நூல்கட்கு உரையெழுதி வெளியிட்டுப் புத்தக உருவாக்கும் பணியை மேற்கொண்டு உலவியது. (உ௫அ)

## 133. பஞ்சாமிர்தம் - 1924

பார்வைக்குக் கிடைத்தவை : இரண்டு தொகுதிகள் 1924, 25 இல் வெளியானவை.

ஆசிரியர் : அ. மாதவையர். சென்னை ஸ்ரீராமா அச்சகத்தில் அச்சிடப்பட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$. செ. மீ., பக்கங்கள் 88. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஐந்து.

மக்களுக்குச் சிறந்த இதழ் ஒன்று வேண்டும் என்னும் நோக்கத்துடனேயே ஆசிரியர் இவ்விதழைத் தொடங்கினார். பெயருக்கேற்ப நல்ல கட்டுரைகள், கதைகள், தொடர் கதைகள், நாட்டு நடப்புக்கள், உலக நிகழ்ச்சிகள், பாடல்கள் முதலியவைகளை வெளிப்படுத்தினார். மக்களின் மனதைக் கவர்ந்து விளங்கிய இவ்விதழ் ஆசிரியர் காலமாகும் வரை (இரண்டாண்டுகள்) நடைபெற்றது. (உ௫கூ)

## 134. புதுயுகம் - 1924

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி க. பகுதி ச. இரக்தாட்சி யாண்டு பங்குனித் திங்கள் (28-3-1925)

ஆசிரியர் : இராவ்சாகிபு. சு. வி. கனகசபை பிள்ளை. சென்னை திருவல்லிக்கேணி ஆர்டிசன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $25 \times 16\frac{1}{2}$. செ. மீ., பக்கங்கள் 26. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இஃது உதய திசை நட்சத்திர சங்கத்தின் திங்கள் வெளியீடு. தற்போதுள்ள உலகத்தைச் சீர்ப்படுத்தி அதை நல்வழியில் முன்னுக்குக் கொண்டுவரப் பரமஞானாசிரியர் ஒருவர் அண்மையில் வரப்போகிறார் என்று நம்பிய பலர் ஒன்று சேர்ந்து 'உதயநட்சத்திர சங்கம்' என்னும் சங்கத்தை ஏற்படுத்தினர். அவர்களுடைய கொள்கைக் கேற்ற கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. (உசாo)

## 135. கிராம பஞ்சாயத்து - 1925

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 3. இதழ் 1. பிரபவ ஆண்டு சித்திரைத் திங்கள் (1927 மே)

ஆசிரியர்: எம். எஸ். ஆர். சந்திரன். ஆசிரியரால் திருச்சிராப்பள்ளியில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 21 × 14. செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழின் முகப்புப்பக்கத்தில்; "எல்லாக் கிராமங்களிலும் கிராமப் பஞ்சாயத்துக்கள் ஏற்படவேண்டு மென்பதே இப்பத்திரிகையின் முக்கிய நோக்கம்; கிராமப் பஞ்சாயத்துக்கள், காட்டு நிர்வாகப் பஞ்சாயத்துக்கள், நீர்ப்பாசனப் பஞ்சாயத்துக்கள், யூனியன் போர்டுகள், ஐக்கிய சங்கங்கள் இவைகளைப்பற்றியும், கிராமக்கல்வி, விவசாயம், கைத்தொழில், ரயத்வாரி நிலவிஷயங்கள், குடிகளின் முற்போக்குக் குரிய விஷயங்கள், பொதுவாகக் கிராம சுகவாழ்வின் சம்பந்தமான ஜலாதார, சுகாதாரப் பிரச்சினைகள் முதலியவற்றைப் பற்றியும் பிறவற்றைப் பற்றியும் விரித்துக் கூறும் பத்திரிகை இஃது ஒன்றேயாகும்" என்று வெளியிட்டிருப்பதனால் இவ்விதழின் நோக்கத்தை நன்குணர்ந்து கொள்ளலாம். (உசாக)

## 136. சன்மார்க்கபானு - 1925

பார்வைக்குக் கிடைத்தது: கற்றை 1. கதிர் 6. குரோதன ஆண்டு ஆனித் திங்கள் (1925 ஜூலை)

ஆசிரியர்: பண்டித. பூ. சீநிவாசலுநாயுடு. சித்தூர் விட்டோரியா சூபிலி அச்சகத்தில் எம். இராமாநுசாச் சாரியாரால் அச்சிடப்பட்டு ஆசிரியரால் இராணிப் பேட் டையில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 21 × 14. செ. மீ., பக்கங்கள் 16. தனி இதழ் அணா இரண்டு; ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் மக்களுக்குச் சன்மார்க்கவழியைப் போதிக் கத் தோன்றியது. அறிவு விளக்கத்திற்கு ஏற்றவைக ளான கட்டுரைகள் பல வெளியாயின. தமிழறிஞர் ச. கந்தசாமி முதலியார், கோ. வடிவேல் செட்டியார் முதலிய அறிஞர்கள் இவ்விதழில் கட்டுரைகள் வரைந்த னர். (உசுஉ)

## 137. தமிழர் - 1925

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1. குரோ தன சித்திரை (1925 ஏப்ரல்)

ஆசிரியர்: உ. க. பஞ்சரத்தினம். திருச்சி கோல்டன் கம்பெனியில் அச்சிடப்பட்டு வெளியாகியது.

அளவு: 21 × 14. செ. மீ., பக்கங்கள் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டரை. தனியிதழ் விலை அணா நான்கு.

முதல் இதழில் ஆசிரியர் தமது நோக்கத்தினைப் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார்; "அறிவுவளர்ச்சிக்கு வேண்டு வன பள்ளிகளும் பலதரப்பட்ட பட்டிகைகளுமே (சஞ்சிகை கள்). பள்ளிகள் நாள்தோறும் பெருகி வருகின்றன. ஆனால் படிக்கும் படிப்பு ஒரு வழிப்பட்டதா யிருக்கின்றது. உயர்ந்த பதவி பெறுதலே படிப்பவர் முதனோக்கமாகக் காணப்படும். நாட்டு வளப்பத்திற்கு வேண்டியன பயிலப் படுவதில் இந்நாட் பட்டிகைகளோ பெரும்பாலும் சமயப் போர்களை வளர்க்கின்றன. அரசியல், வைத்தியம், பொரு

னீட்டல், தொழில் விருத்தி இவற்றினை விளக்கும் பட்டிகைகள் சிலவேயாம். பல துறைகளையும் ஒருங்கே விளக்கும் ஒரு பட்டிகை இதுவரை கண்டிலம்; இக்குறையை நீக்குவதே இப்பட்டிகையின் தலை நோக்கமாம்." (உசுரு)

## 138. பாலபாரதி - 1922

பார்வைக்குக் கிடைத்தவை தொடக்கத்தில் இருந்து 18 இதழ்கள் (கலியப்தம் ருOஉ௬-ல். ஐப்பசி) 1925.

ஆசிரியர்: வ.வெ.சுப்பிரமணிய ஐயர். சேரமாதேவி பாரத்துவாச ஆசிரமத்தில் இருந்து குருகுல அச்சுக் கூடத்தில் அச்சிட்டு அனந்தகிருட்டிணன் என்பவரால் வெளியிடப்பெற்றது.

அளவு: $23 \times 17$ செ. மீ., பக்கங்கள் 64. தனியிதழ் அணுப்பத்து. ஆண்டுக்கையொப்பம் ரூபா ஐந்து.

தமிழ்க்குருகுல வித்தியாலயச் சார்பில் தோன்றிய இவ்விதழ் நாட்டுமுன்னேற்றம் தமிழ்வளர்ச்சி முதலிய பலதுறைகளிலும் உழைப்பதற்கென்றே தோன்றியது. சுத்தாநந்த பாரதியார், பொ. திருகூடசுந்தரம் பிள்ளை, மகேசகுமார சர்மா, வையாபுரிப் பிள்ளை, ப. சீநிவாச ஆச்சாரியார் முதலியோர் இவ்விதழ்களில் கட்டுரையெழுதினர்கள். ஆசிரியர் பாபநாசம் அருவிக்கு இரையாகவே எல்லாம் நின்று விட்டன. (உசுச)

## 139. வேத வித்யாபோதினி - 1925

பார்வைக்குக் கிடைத்தது: கமலம் 1. இதழ் 1—5. (1925)

ஆசிரியர்: பட்டூர் சண்முக முதலியார். சென்னை பிராட்வே கார்டியன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $21 \times 14$ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக்கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழில் கணபதி மகாத்மியம், திருச்செந்தூர்ச் சுப்பிரமணியர், கம்பராமாயணம், குரு நமஸ்காரம், பகவத் கீதை முதலிய பல பொருள்கள் வெளியாகியுள்ளன. மறை முதற் கலைகளை மக்கட்குப் போதிக்கவேண்டுமென்பதே இவ்விதழின் நோக்கமாகும். (உ௬ரு)

## 140. வைஷ்ணவன் - 1925

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 2. பகுதி 2. அட்சய ஆண்டு மார்கழித் திங்கள். (1927 சனவரி)

ஆசிரியர் : டி. ஆர். பெரியநம்பியா பிள்ளை. திருநேல்வேலிச் சந்திப்பு காந்திமதி விலாசம் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $23 \times 14\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 16. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் வைணவக் கொள்கைகளை நாட்டிலே பரப்பவேண்டும் என்னும் நோக்கத்துடன் வெளியாகியது. ஸ்ரீ வைஷ்ணவ தருமம், ஆழ்வார்கள் கவிச்சுவை, ஆழ்வார்களும் பண்டரீபுர பக்தர்களும் முதலிய கட்டுரைகள் பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் வெளியாகியுள்ளன. (உ௬௬)

## 141. அமிர்தகுணபோதினி - 1926

பார்வைக்குக் கிடைத்தவை ஆநந்தகுணபோதினி பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் சில. 1926ஆம் ஆண்டு முதல் 1930 முடிய. (அட்சய ஆண்டு முதல்)

ஆசிரியர் : திரிசிரபுரம் எஸ். ஜி. இராமாநுசலு நாயுடு. இதனை அச்சிட்டு வெளியிட்டவர் சென்னை தங்க சாலைத் தெரு 302ஆம் எண் வீட்டில் இருந்த டி. இராச கோபால் முதலியார்.

டிம்மியளவுப் பக்கம் 48 முதல் 80 வரை பலவகையாக வெளியாகியது. ஆண்டுக் கட்டணம் ரூபா ஒன்று.

இவ்விதழ் மக்களுக்கு மகிழ்ச்சியளிக்கும் கட்டுரை முதலியவைகளை வெளியிட்டுப் பொருள்திரட்ட வேண்டும் என்னும் நோக்கத்தோடு தொடங்கப்பெற்றது. ஆசிரியர் சீரங்கத்திலும் பதிப்பாளர் சென்னையிலும் இருந்தனர். இரண்டாண்டுகள் ஆனந்தகுணபோதினி என்னும் பெயரோடு நடத்தப்பெற்ற இவ்விதழ் பிறகு அமிர்தகுணபோதினி என்று பெயர் மாற்றப்பட்டு மேலும் சில ஆண்டுகள் நடைபெற்றன. பிறகு பத்திரிகையும் ஆங்கில ஆசான் முதலிய இப்பத்திரிகை உரிமையாளரின் உரிமை நூல்களும் மதுரை இ. மா. கோபாலகிருட்டிணக் கோனுல் விலைக்கு வாங்கப்பெற்றன. பண்டித பா. பக்கிரிசாமி செட்டியார் என்பவர் பிறகு ஆசிரியராக இருந்து சில காலம் நடத்தினர். அதன் பின் பத்திரிகை நின்றுவிட்டது. (உகூஎ)

## 142. இயற்கை - 1926

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 3. இதழ் 11. விபவ ஆண்டு வைகாசித் திங்கள் (1928)

ஆசிரியர்: சுவாமி சுத்தானந்த பாரதியார். காஞ்சிபுரம் பிரதிவாதி பயங்கரமடத்தின் ஆதரவில் வெளியாகியது. காஞ்சிபுரம் சுதர்சன அச்சுக்கூடத்தில் அச்சிட்டு சி. பி. ஏ. அரங்காச்சாரியரால் வெளிப்படுத்தப்பட்டது.

அளவு: 22 × 14 செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் மக்கள் இயற்கை வாழ்வோடு இயைந்து நடந்து நோயற்றவர்களாய் வாழவேண்டுமென்னும் அடிப்படை நோக்கத்தைக் கொள்கையாகக்கொண்டு வெளியாகியது. உடல்நலம் பற்றிய கட்டுரைகள் சில இவ்விதழில் உள்ளன. (உகூஅ)

## 143. உதயபாரதி - 1926

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1. அட்சய ஆண்டு ஆடித் திங்கள் (1926 அக்டோபர்)

ஆசிரியர் : ப. இராமசாமி ஐயங்கார். நெல்லை மாவட்டம் சேரமாதேவி குருகுல அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 13½ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தனியிதழ் அணா இரண்டு.

இவ்விதழைக் குறித்து ஆசிரியர், "இப்பத்திரிகையில் பல அறிஞரால் எளிய முறையில் எழுதப்பட்ட வியாசங்களும், இனிய சிறுகதைகளும் மிகுந்த பயன் விளைக்கக் கூடிய மொழிபெயர்ப்புகளும் வெளிவரும். இன்னும் பொருளாதாரம், அரசியல், சுகாதாரம், விவசாயம் முதலிய பெரும் விஷயங்களைப்பற்றியும் அவைகளின் அபிவிருத்திக் குரிய முறைகளைப்பற்றியும் பல விஷயங்கள் வெளிவரும்" என்று குறிப்பிட்டுள்ளார். முதலிதழ் இத்தகைய கட்டுரைகள் சிலவற்றைக் கொண்டுள்ளது. (உசுகூ)

## 144. ஏலவிவசாயி - 1926

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 2. இதழ் 9. விபவ ஆண்டு மார்கழித் திங்கள் (1928 டிசம்பர்)

ஆசிரியர் : ரா. நாராயணசாமி. உத்தமபாளையம் ஆநந்தா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 13½ செ. மீ., பக்கங்கள் 56. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இவ்விதழ் திருவாங்கூர் ஏல விவசாயிகள் சங்கத்தில் இருந்து வெளிவந்தது. ஏல விவசாயிகளின் நன்மை, முன்னேற்றம், ஒற்றுமை ஆகியவைகளைக் குறிக்கோளாகக் கொண்டு வெளியாகியது. எல்லோருக்கும் பயன்படக் கூடிய பொதுக்கட்டுரைகளும் வெளிவந்தன. அரசியல் துறையிலும், சுதந்திர வளர்ச்சியிலும, மொழிப்பற்றிலும் ஈடுபட்டு அத்துறையிலும் நன்கு தொண்டுபுரிந்தது. (உஎ0)

## 145. கமருஸ்ஸமான் - 1926

பார்வைக்குக் கிடைத்தது: மலர் *1*. இதழ் *1*. *1926*ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள்.

ஆசிரியர்: எஸ். இ. எம். மௌலானா. திருநெல்வேலி மீரானியா அச்சகத்தில் அச்சிடப்பட்டுக் காயல்பட்டினத்தில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு : $24\frac{1}{2} \times 16\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் *24*. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் முஸ்லீம் சமயத்தவர்கட்குப் பயன்பட வேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியிடப்பட்டது. முஸ்லீம்கட்கு ஏற்ற பல நல்ல கட்டுரைகள் இதனில் வெளியாயின. (உஎக)

## 146. சமரசம் - 1926

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் *1*. பகுதி *7*. *1927* ஜூன்.

ஆசிரியர் : எம். வரதராச முதலியார். விழுப்புரம் எஸ். ஆர். வி. அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளிப்படுத்தப்பெற்றது.

அளவு : $22 \times 14\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் *24*. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் எல்லாச் சமயங்களினும், உண்மையுள்ளதாகலின், எல்லோரும் உடன் பிறந்தார் போல் சாதி சமய பேதமின்றி வாழவேண்டுமென்பதை மக்களுக்கு எடுத்துக் காட்டி அறிவுரைபுகலத் தோன்றியது. சிறுயுகப் பிறப்பு, வருணாச்சிரம தருமம், பகவத் கீதை, நன்மொழி முதலிய கட்டுரைகள் வெளியாயின. (உஎஉ)

## 147. சுதேசபந்து - 1926

குரோதன ஆண்டு மார்கழித் திங்கள் (*1-1-1926*) இதழ் பார்வைக்குக் கிடைத்தது.

ஆசிரியர்: ஆர். சுப்பிரமணிய ஐய்யர். சென்னை வேப்பேரி எம். வி. அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளியாகியது.

இது காங்கிரஸ் கட்சியினரால் நடத்தப்பெற்ற நாட்டு விடுதலைப்பத்திரிகை. நாட்டு விடுதலைக்கு உதவியான பல செய்திகள் இவ்விதழில் வெளியாயின. இரண்டு மூன்று பக்கங்கள் முழு விளம்பரங்களைக் கொண்டதாகவும் உள்ளன. (உஎரு)

## 148. செல்வக்களஞ்சியம் - 1926

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 5. பகுதி 7. பிரமோதூத ஆண்டு ஆடித்திங்கள், (1930)

நூற்பதிப்புத் தலைவர் ஆர். எஸ். பதி. மதுரை மீனலோசனி அச்சகத்தில் அச்சிட்டு ஆர். எஸ். பதியினால் மதுரையில் இருந்து வெளிப்படுத்தப்பட்டது.

அளவு: $21 \times 13\frac{1}{2}$. செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் விலை அணா இரண்டு.

இவ்விதழ் மருந்து விளம்பரங்களை வெளிப்படுத்துதற் பொருட்டு வெளியிடப்பட்டது. மருந்து விளம்பரங்களோடு இடையே இரண்டொரு கட்டுரைகளையும் வெளியிட்டது. (உஎச)

## 149. திவ்யார்த்த தீபிகை - 1926

பார்வைக்குக் கிடைத்தது: சம்புடம் 13. நெம்பர் இரண்டு. (12-11-1938)

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர். சென்னை டேவிட்சன்தெரு நீயூமன் அச்சுக்கூடத்தில் டி. நாராயணசாமி நாயுடுவால் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 25 × 17. செ. மீ., பக்கங்கள் 28. தனி இதழ் அணு ஐந்து.

இவ்விதழின் நோக்கம் பெரியோர்கள் அருளிய சிறந்த நூல்களை உயரிய உரைகளுடன் வெளியிட வேண்டுமென்பதுதான். பார்வைக்குக் கிடைத்த இதழின்கண் திருவாய்மொழி உரை. ஆசார்ய ஹ்ருதயசாரம் ஆகிய நூலுரைகள் வெளியாகியுள்ளன. (உஎரு)

## 150. தொழிற் கல்வி - 1926

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 5. அட்சய ஆண்டு ஆவணித் திங்கள் 20 உ. (1926 செப்டம்பர்)

ஆசிரியர் : ஏ. இராமசாமி முதலியார். கும்பகோணம் கோமளாம்பா அச்சகத்தில் அச்சிட்டுத் திருவிடைமருதூரில் இருந்து வெளிப்படுத்தப்பட்டது.

அளவு : 22 × 14. செ. மீ., பக்கங்கள் 56. ஆண்டுக் கையொப்பம் ரூபா நான்கு. தனியிதழ் விலையணு ஆறு.

நாட்டிலே பொதுவான கல்வி வளருதலைவிடத் தொழிற்கல்வி வருமானால் மக்கட்கு நன்மையுண்டாகும் என்று கருதி இவ்விதழ் தொழிற் கல்வியை வளர்க்கத் தோன்றி உழைத்தது. நம் புராதன கப்பல் தொழில், மோட்டார் வண்டிகளில் நிகழும் கெடுதல்களும் காரணங்களும் நிவர்த்திக்கும் முறைகளும் முதலிய பல கட்டுரைகள் பார்வைக்குக் கிடைத்த இதழில் வெளியாகியுள்ளன. (உஎசா)

## 151. மாருதி - 1926

பார்வைக்குக் கிடைத்தது : முதல் தொகுதி இதழ்கள் சில. (1926) ஆம் ஆண்டு.

ஆசிரியர் : வி. கே. சடகோபாச்சாரியார். ஆசிரியரால் திருத்தணியில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$. செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

ஆசிரியர் வைணவர். ஆகவே அநுமாருடைய பெயரை இதழுக்கிட்டார். நாட்டுப்பற்று மிக்கவராக விளங்கியதோடு காலக் கணிதத்திலும் சிறந்த புலமையடைந்து திகழ்ந்தார். நாட்டு முன்னேற்றத்திற்கான நல்ல கட்டுரைகள், காலக் கணிதச்செய்திகள் முதலியவைகளை வெளிப்படுத்த வேண்டும் என்பதே ஆசிரியருடைய கொள்கை. (உளஎ)

## 152. விவேகானந்தன் - 1926

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 3. பகுதி 6. விபவ ஆண்டு ஆனித்திங்கள். (1928)

இப்பத்திரிகையைக் கொழும்பு விவேகாநந்த சபையார் கொழும்பு மெய்கண்டான் அச்சியந்திர சாலையில் அச்சிட்டு வெளியிட்டனர்.

டெம்மி எட்டுப்பக்க அளவில் 18 பக்கம். சதம் 15. ஆண்டுக் கட்டணம் ரூபா ஒன்றரை.

ஆன்மஞான வளர்ச்சியையும் உலகியல் அறிவுப் பெருக்கையும் மக்களிடையே வளர்ப்பதை முதன்மையான நோக்கமாகக் கொண்ட இவ்விதழ் சமயத்தொண்டு, ஒழுக்கநெறி, பெரியோர்கள் வரலாறு முதலியவைகளையும் நாட்டு மக்கட்கு நல்கியது. எவ்வளவு காலம் வெளிவந்ததென்னும் விவரம் தெரியவில்லை. (உளஅ)

## 153. வேளாள மித்திரன் - 1926

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 2. இதழ், 2, 3. விபவ ஆண்டு பங்குனித் திங்கள் (1927 பிப்ரவரி மார்ச்)

ஆசிரியர்: எம். ஏ. பாலசுப்பிரமணிய முதலியார். ஆசிரியரால் கோயமுத்தூர் தேசபந்து அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

டிம்மி அளவுப் பக்கம் 28. தனி இதழ் அணா மூன்று (19 காசு) ஆண்டுக் கட்டணம் ரூபா இரண்டு.

இவ்விதழ் வேளாள வகுப்பாரின் முன்னேற்றத்தை முன்னிட்டே வெளியிடப்பட்டது. ஆயினும் பலவகைச் செய்திகளையும் தாங்கி வெளிவந்தது. நாமக்கல் கவிஞர் முதலியோர் இதிற் கட்டுரை வரைந்தனர். (உஎகூ)

## 154. அருட்பிரகாசம் - 1927

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 2. இதழ் 4. சாலி சகாப்தம் 62. விபவ ஆண்டு ஆவணித் திங்கள். (26-8-1928)

ஆசிரியர் : தி. கோ. வரதராசன். ஆசிரியரால் மாயூரம் வசந்தா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $22\frac{1}{2} \times 14\frac{1}{2}$. செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் இரண்டு. ஆயுட் கையொப்பம் ரூபா இருபத்தைந்து.

இவ்விதழ் உத்தரஞான சிதம்பரம் ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்க சங்க நிலையத்தினின்றும் வெளியாகியது. திருவருட்பிரகாச வள்ளல் வடலூர் இராமலிங்க அடிகளாரின் கொள்கைகளை உலகிற் பரப்புவதற்குத் தோன்றிய இதழ்கள் பல. அவைகளுள் இதுவும் ஒன்று. இதனிற் பல சிறந்த கட்டுரைகள் வெளியாயின. (உஅ०)

## 155. அன்பு - 1927

பார்வைக்குக் கிடைத்தது : கொடி 2. மலர் 10. பிரபவ ஆண்டு தைத்திங்கள்.

ஆசிரியர் : அ. மு. சாமிநாதப் புலவர். இரங்கோனில் இருந்து வெளியாகியது.

அளவு : 24 × 16. செ. மீ., பக்கங்கள் 36. தனி மலர் அணா 8.

இவ்விதழ் நாட்டு மக்களிடையே அன்பினைப் பரப்பி அன்பின் சிறப்பை எல்லோரும் அறியுமாறு செய்யவேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியிடப்பட்டது. வடமொழி எழுத்துக்களையோ ஆங்கில எழுத்துக்களையோ இவ்விதழிற் கலக்கவிடல் கூடாது. முற்றிலுந் தமிழ் எழுத்துக்களையே பயன் படுத்துதல் வேண்டும் என்பதையும் ஆசிரியர் உறுதியான கொள்கையாக மேற்கொண்டு தமிழ் எழுத்துக்களை மட்டுமே இதழிற் பயன் படுத்தியுள்ளார். (உ௲க)

## 156. இஸ்லாம் - 1927

பார்வைக்குக் கிடைத்தது: மாலை 1. முத்து 3. 1927 செப்டம்பர்த் திங்கள். (ரபிஉல் ஆகிர் 1346 ஹிச்ரி)

ஆசிரியர்: மௌ. ஆ. அபுல்ஹுதா. சென்னை கேசரி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: 24 × 16 செ. மீ., பக்கங்கள் 80. தனி இதழ் அஞ்சற் கூலியுட்பட அணு ஒன்பது. ஆண்டுக் கையொப்பம் முஸ்லீம்கட்கு ரூபா ஐந்து. இந்துக்கட்கு ரூபா நான்கு. மாணவர்கட்கு ரூபா மூன்றரை.

இவ்விதழ் முஸ்லீம்களின் முன்னேற்றத்திற்காக வெளியிடப்பட்டது. முஸ்லீம் சமயத் தொடர்பான கட்டுரைகள் பல இதில் இடம்பெற்றுள்ளன. உயர்ந்த தாளில் அழகாக் அச்சிடப்பட்டு வெளிவந்துலாவியது. (உ௲உ)

## 157. காமதேனு - 1927

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 3. அட்சய ஆண்டு மாசித் திங்கள் 1-3-1927.

ஆசிரியர்: பெயர் தெரியவில்லை. கோபிச்செட்டிப் பாளையம் மணியன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டுக் கே. எஸ். சுப்பிரமணிய ஐயரால் வெளியிடப்பட்டது.

*அளவு : 21 X 14 செ. மீ., பக்கங்கள் 40. தனி இதழ் அணா மூன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.*

*இவ்விதழ், காமதேனு மக்கட்கு வேண்டியவைகளை யெல்லாம் வழங்குவதைப் போலத் தானும் மக்கட்கு வேண்டிய கட்டுரைகளையெல்லாம் வெளியிட்டு மக்களை மகிழ்ச்சியுறுத்த வேண்டும் என்னும் நோக்கத்தோடு காமதேனு என்னும் பெயரோடு தோன்றியது. நல்ல கட்டுரைகள் சில இதிற் காணப்பெறுகின்றன.* (உஅரு)

## 158. கிராமானுகூலன் - 1927

*பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 2. சஞ்சிகை 10. சுக்கில ஆண்டு சித்திரைத் திங்கள். (1929 - ஏப்பிரல்)*

*ஆசிரியர் : என். ஆபத்சகாய ஐயர். கும்பகோணம் கலா அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் கும்பகோணத்தில் இருந்து வெளியிடப்பட்டது.*

*அளவு : 25 × 19 செ. மீ., பக்கங்கள் 24. தனி இதழ் அணா மூன்று: ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.*

*இவ்விதழில் பெருநிலக்கிழார்கள், பயிர்த் தொழிலாளர்கள், சிற்றூர்த் தலைவர்கள், தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள், கிளை அஞ்சல் நிலையத் தலைவர்கள் ஆகியவர்களின் நன்மையை நாடிய கட்டுரைகளும் வேறு பல வகையான கட்டுரைகளும் வெளியாயின.* (உஅச)

## 159. குலாபிமானி - 1927

*பார்வைக்குக் கிடைத்தது : பதுமம் 1. இதழ் 1. பிரபவ ஆண்டு கார்த்திகைத் திங்கள். 1927 நவம்பர்.*

*ஆசிரியர்: ஏ. எம். முத்துச்சாமிப் பிள்ளை. திருச்சி பாலக்கரை இஸ்லாமியா அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*அளவு : 21½ × 14 செ. மீ., பக்கங்கள் 56. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.*

*இவ்விதழ் தனது நோக்கத்தை, "உலகுக்கச்சாணி யாக விளங்குவாரும், கோழைபடா மேழிச்செல்வமுடை யாரும், சீரைத் தேடின் ஏரைத் தேடு என்ற முதுமொழிக் கிணங்க ஏரைக் கைக்கொண்டாருமாகிய வேளாண்மக்களுட் சிறந்து விளங்கும் ஆறுநாட்டு வேளாளரின் பெருமைகளை எடுத்துரைக்கவும், அவர் சரிதங் கூறவும், அவர் ஒழுக்க விழுப்பங் காட்டவும், அவர்கள் முன்னேற்றம் பெறவும் இப்பத்திரிகை புறப்பட்டிருக்கிறது" என்று குறிப்பிட் டுள்ளது. கூடிய வரை பொதுக்கட்டுரைகளும் இடம் பெற்றன.* (உஅரு)

## 160. சமயஞானம் - 1927

*பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. பிரபவ ஆண்டு வைகாசித் திங்கள். (1927 மே)*

*ஆசிரியர்: வி. சிதம்பரராமலிங்கம் பிள்ளை. திருநெல் வேலி வைதிக சைவ சம்மேளனத்தினரால் திருநெல்வேலி பாலம் சரசுவதி விலாசம் அச்சகத்தில் அச்சிட்டு வெளி யிடப் பெற்றது.*

*அளவு: 22 × 14 செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றேகால். தனியிதழ் அணா இரண்டு.*

*இவ்விதழ் சமய ஞானத்தோடு தமிழறிவையும் மக்களுக்குப் புகட்டவேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றியது. சமயம், தமிழிலக்கியம், தமிழிலக்கணம், ஒழுக்கம், நூல்வெளியீடு, கதைகள், விநோதக்கட்டுரைகள், பொதுச்செய்திகள் என்பன இவ்விதழுக்கு உறுப்புக் களாக இருந்தன.* (உஅசு)

## 161. சமரசசன்மார்க்கம் - 1927

*பார்வைக்குக் கிடைத்தவை: முதல் தொகுதியின் பன்னிரண்டு பகுதிகளும் சேர்த்துக்கட்டப்பெற்ற தொகுதி. பிரபுவ ஆண்டு. (1927)*

ஆசிரியர்கள் : வி. இராமச்சந்திர நாயுடு, இராவ் சாகிபு சு. வி. கனகசபைப் பிள்ளை. திவ்ய ஞானத் தாரக சபைகளின் திங்கள்வெளியீடாகிய இது சென்னை சோல்டன் கம்பெனி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 24 × 15 செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் எவ்விதச் சமயச் சார்புங் கொள்ளாமல் எல்லோருக்குந் தக்க வகையில் நின்று பொதுநோக்காகப் பணிசெய்து எல்லோரையும் ஒன்றுபடுத்தவேண்டும் என்பதைக் குறிக்கோளாகக்கொண்டு வெளியாகியது. அறிஞர் பலருடைய சிறந்த கட்டுரைகள் இவ்விதழ்களில் வெளியாயின. (உஅஎ)

## 162. சரஸ்வதி - 1927

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 4. பிரபவ ஆண்டு ஆடித் திங்கள்; (1927 ஜூலைத் திங்கள்)

ஆசிரியர் : பெயர் தெரியவில்லை; கொழும்பு சிந்தும் பட்டித் தெரு சரஸ்வதி புத்தகசாலைக்காக எஸ். பத்மநாப ஐயர் என்பவரால் கொழும்பு ஆனந்தா பிரிண்டிங் ஒர்க்ஸில் அச்சியற்றி வெளியிடப்பட்டது.

அளவு : $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ., மீ., பக்கங்கள் 52. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இவ்விதழ் பலவகையான கட்டுரைகளையும் மக்கட்கு வழங்கி நாட்டிலே கல்வியறிவைப் பரப்பவேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றியது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் சைவ சமய வளர்ச்சிக்கான தில்லைத் திருநடனம், சேக்கிழார், திருநீற்றின் பெருமை முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன.

இந்தியாவில் சென்னை பிடாரியார் கோவில் சரஸ்வதி சங்கத்தில் இருந்தும் ஒரு வெளியீடு சரசுவதி என்னும் பெயரோடு சில ஆண்டுகள் நடைபெற்றுக்கொண்டிருந்தது. (உஅஅ)

## 163. சிவநேசன் - 1927

பார்வைக்குக் கிடைத்தது : ஆண்டு 8. திங்கள் 5. பவ ஆண்டு மார்கழித் திங்கள் (1934 டிசம்பர்)

ஆசிரியர் : ராம - கு. இராமசாமிச் செட்டியார். ஆசிரியரால் பலவான்குடி சிவநேசன் அச்சியந்திர சாலையில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

அளவு : $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டேகால். தனியிதழ் அணா மூன்று.

இவ்விதழ் சைவமுந் தமிழுந் தழைத்தினிதோங்கக் காரைச் சிவநேசர் திருக் கூட்ட ஆதரவில் முதலில் கிழமை யிதழாகத்தோன்றி, நல்ல சைவத்தொண்டு செய்தது. சில ஆண்டுகட்குப் பின்னர்த் திங்க ளிதழாக மாறிச் சில ஆண்டுகள் நடைபெற்றது. சுயமரியாதை யியக்கமெனவும் தன்மான இயக்கமெனவும் பேர்கொண்டு தோன்றி நாட்டிலே பெருமுழக்கஞ் செய்து திரிந்த நாத்திகத்தை நாட்டை விட்டுத் தொலைப்பதற்கு இவ்விதழ் நல்ல தொண்டு செய்தது. (உஅசு)

## 164. தொழிலாசிரியன் - 1927

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 2. இதழ் 2. விபவ ஆண்டு வைகாசித் திங்கள். 1928 சூன்.

ஆசிரியர் : கே. எஸ். வி. நாத். ஆசிரியரால் சிவகங்கை தொழிலாசிரியன் அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 42. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் அணா ஆறு.

இவ்விதழ் மக்களுக்குத் தொழில் முறைகளைப் போதிப்பதற்காகத் தோன்றியது. குடிசைத் தொழில்,

கிராமக் கல்வி, சிறு கைத்தொழில்கள், வைத்தியப் பகுதி முதலிய பல செய்திகள் இவ்விதழில் வெளியாயின. (உகூ0)

## 165. அனுபவஆசான் - 1928

பார்வைக்குக் கிடைத்தது: மலர் *1*. இதழ் *1*. *26-4-1928*.

ஆசிரியர்: டி. சங்கரலிங்கம். ஈரோடு ஸ்ரீசங்கர் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ. பக்கங்கள் *24*. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றேகால். தனியிதழ் அணு இரண்டு.

இவ்விதழ் உலகிற்குப் பயன்படவேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியிடப்பட்டது. ஆரம்பப் பாடசாலைகளில் ஒரு பெருங் குறை, பொதுசனக் கல்வி, ஆரம்பப் பாடசாலைகளும் சுகாதார போதனையும், ஆரம்ப பாடசாலைகளில் கணித போதனாமுறை, தமிழ் இலக்கிய மாண்பு, ஆரம்பப்பாடசாலைகளில் பூகோளம் கற்பித்தல் முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. (உகூக)

## 166. ஆனந்த விசய விகடன் - 1928

பார்வைக்குக் கிடைத்தது: தாய் *1*. பிள்ளை *1*. பிரபவ ஆண்டு மாசித் திங்கள் (*1928* பிப்ரவரி)

வீரசைவர் விகடகவி பூதூர் வைத்தியநாதையர் இதன் ஆசிரியராக இருந்தார்.

முதற்கண் ஆனந்த விகடனை நடத்திய இவர் அதனை விற்றுவிட்டுப் பிறகு இந்த ஆனந்த விசய விகடனைத் தொடங்கிச் சிலகாலம் நடத்தினார். நகைச் சுவைக் கதை கட்டுரை முதலியவைகளை வெளியிட்டு மக்களுக்கு மகிழ்ச்சியை அளிப்பதே இவ்விதழின் நோக்கமாகவிருந்தது. டிம்மி அளவில் நாற்பது பக்கம் வெளியாகியது. (உகூஉ)

## 167. இந்திய கேசரி - 1928

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 1. இலக்கம் 10. விபவ ஆண்டு புரட்டாசித் திங்கள் (1928 அக்டோபர்)

ஆசிரியர்: ஞா. பா. வேதநாயகம். ஆசிரியரால் இலங்கை தெகிவளை யூனியன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பெற்றது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் இலங்கைத் தமிழர்கட்குப் பணிபுரியத் தோன்றியது. இலக்கியக் கட்டுரைகள், அரசியற் கட்டுரைகள், வரலாற்றுக் கட்டுரைகள், சமயக் கட்டுரைகள் முதலியன இவ்விதழில் வெளிவந்தன. உலகக் கண்ணாடி என்னும் பகுதியில் உலகத்தில் நிகழ்ந்த அரிய செய்திகளும் வெளியாயின. (உகூரு)

## 168. இளந் தமிழன் - 1928

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ 2. 1928 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள்.

ஆசிரியர்: ந. சோமயாஸலு. தூத்துக்குடி ஸ்ரீராம் அச்சகத்தில் அச்சிடப் பெற்ற இஃது ஆசிரியரால் வெளியிடப்பெற்றது.

அளவு: $24\frac{1}{2} \times 18\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் 54. ஆண்டுக் கையொப்பம் ரூபா நான்கு. தனியிதழ் அணா ஆறு.

இவ்விதழ் இளந் தமிழர்களைத் தட்டி யெழுப்பி உரிமைப் போரில் ஈடுபடச் செய்ய வேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றியது. புரட்சியும எழுச்சியுங் கொண்டு விடுதலையை விரும்பி நின்ற பலர் இவ்விதழில் கட்டுரைகள் எழுதியுள்ளனர். மற்றும் இலக்கியத் துறைக்கு வ. வெ. சு. ஐயர், ஜெகவீர பாண்டியக் கவிராச பண்டிதர், சுத்தாநந்த பாரதியார் முதலியோருங் கட்டுரைகள் வரைந்தனர். (உகூச)

## 169. கள்வர் கோமான் – 1928

பார்வைக்குக் கிடைத்தது : உயிர்- 1, மெய். 7 விபவ ஆண்டு மார்கழித் திங்கள் (டிசம்பர் 1928)

ஆசிரியர் : திருக்களர் மு. சுவாமிநாதமாதவராயர். மன்னார்குடி சி. எல். வி. அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

ராயல் அளவுப் பக்கம் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

கள்ளர் குலத்தாரின் முன்னேற்றத்திற்காக உழைப்பதையே இவ்விதழ் முதன்மையான நோக்கமாகக் கொண்டு வெளியாகியது. பெரும்பான்மை சமூகச் செய்திகளையும் சிறுபான்மை பொதுச் செய்திகளையும் கொண்டு வெளியான இப்பத்திரிகை போதிய ஆதரவு பெறாமல் விரைவாகவே மறைந்துவிட்டது. (உகரு)

## 170. கார்த்திகேயன் - 1928

பார்வைக்குக் கிடைத்தது : ரதங்கை-1. மணி-1. விபவ ஆண்டு ஆவணித் திங்கள் (1928)

ஆசிரியர் : M. A. கணபதியா பிள்ளை. சாத்தூர் இலக்குமி விலாசம் பிரசில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

டிம்மி அளவுப்பக்கம் 32. ஆண்டுக் கட்டணம் ரூபா ஒன்று.

இவ்விதழ் தனது கொள்கையைக் கீழ்க் கண்டவாறு குறிப்பிட்டுள்ளது. "நல்லவை நலம் பெற நாடியுழைப்பன். மெய்ம்மை பெருக்குவன்; அல்லவை தேய அலறுவன்; அறம் மிகவளர்ப்பன் ; பொய்ம்மை போக்குவன் ; நாட்டின் கலைகள் நனி சிறந் தோங்கவும், உழவும் வாணிபமும் ஊன்றி விளங்கவும் உறுதியாய் நிற்பன்." (டசுசா)

## 171. தமிழாநந்த போதினி - 1928

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 1. விபவ ஆண்டு ஐப்பசித் திங்களில் வெளி வந்தது.

ஆசிரியர்: திருத்தங்கல், பொ. ஆ. அய்யப்பரெட்டியார். திருத்தங்கல் கம்ம ஐக்கிய அச்சுச் சங்கம் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $21 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ்விலை அணு இரண்டு.

மக்களிடம் தமிழ்ப்பற்றைப் பெருக்கிக் கல்வி வளர்ச்சியைப் புகட்டி முன்னேறச் செய்யவேண்டுமென்று திட்டம் வகுத்துக்கொண்டு இவ்விதழ் வெளிப்பட்டதாயினும் தன்னுடைய எண்ணம் நிறைவேறாமல் சிலகாலம் உலாவிப் பிறகு மறைந்து போயது. (உகூஎ)

## 172. மருத்துவன் - 1928

பார்வைக்குக் கிடைத்தது: மலர்-1. இதழ்-1. 1928 ஆம் ஆண்டு அக்டோபரில் வெளிவந்தது.

ஆசிரியர் : எம். எஸ். ஆனந்தம். சென்னை கந்தன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $21\frac{1}{2} \times 14$ செ. மீ , பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் மூன்று ரூபா. தனியிதழ் அணு நான்கு.

தமிழ் மருத்துவத் துறை உலகில் பழமையும் பெருமையும் வாய்ந்தது. அதனை நாட்டு மக்களுக்கு நன்கு விளக்கிக்காட்டுவதோடு தமிழ் மருத்துவச் சிறப்பை அன்பர்கள் அனைவரும் நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும் என்பதையுங் கருதியே இவ்விதழ் வெளியிடப்பட்டது. முதலிதழில் மருத்துவர்களுடைய இலக்கணம், மருத்துவப் பெரியார் வரலாறு முதலிய செய்திகள் வெளியாகியுள்ளன. (உகூஅ)

## 173. விமோசனம் - 1928

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 8. சுக்கில ஆண்டு பங்குனித் திங்கள் 1929.

ஆசிரியர்: சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரி. திருச்செங்கோடு காந்தி ஆசிரம வெளியீடாகச் சென்னை ஹிந்திப் பிரச்சார அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு: $21\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் விலை அணு ஒன்று.

அந்நாளில் கள்ளுக் கடைகள் நாட்டிலே இருந்தன. மதுவிலக்குச் சட்டம் இல்லை. ஏழை எளியவர்கள் கண்ட வாறு குடித்துத் தங்களைக் குட்டிச் சுவராக்கிக் கொண் டார்கள். அவர்களுடைய குடிப்பழக்கத்தை யொழித்து அவர்களை நல்வழிக்குக் கொண்டுவரவேண்டும் என்பதையே இவ்விதழ் முதன்மையான நோக்கமாகக்கொண்டு வெளி யாகியது. இதழ் முழுவதும் மதுவிலக்குக் கட்டுரைகளே நிறைந்திருந்தன. (உ-சுகா)

## 174. விவேகபாநு - - 1928

பார்வைக்குக் கிடைத்தது: மாலை 1. மலர் 6. விபவ ஆண்டு ஐப்பசித் திங்களில் (1928 அக்டோபர்) வெளிவந்தது.

ஆசிரியர்: சு. கு. கோவிந்தசாமிப் பிள்ளை. டி. செங்கல்வராய நாயுடு என்பவரால் சென்னை சௌகார் பேட்டை முரகரி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளிப் படுத்தப்பட்டது.

அளவு: $21 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 60. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ விலை அணு இரண்டு.

பல கட்டுரைகளை வெளிப்படுத்தித் தமிழ்த் தொண்டு செய்யவேண்டுமென்பதையே நோக்கமாகக் கொண்டு வெளியாகியது. மதுரையில் மு. ரா. கந்தசாமிக் கவிராயர் முதலில் இப்பெயரோடு இதழ் நடத்தினர். வேறு சிலரும் விவேகபாநு என்னும் பெயரோடு இதழ் நடத்தியுள்ளனர்.

(கூ00)

## 175. வேளாளமித்திரன் - 1928

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 2. இதழ் 2. விபவ ஆண்டு மாசித் திங்கள் (1929 பிப்ரவரி).

ஆசிரியர்: எம். ஏ. பாலசுப்பிரமணிய முதலியார். ஆசிரியரால் கோயமுத்தூர் தேசபந்து அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $22\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு. தனியிதழ் அணா மூன்று. வாணாட் கையொப்பம் ரூபா 25.

இவ்விதழ் வேளாளர்களுடைய முன்னேற்றத்தையே முதன்மையான நோக்கமாகக் கொண்டு வெளியிடப்பட்டது. வேளாளர்களுடைய சிறப்பைக் கூறும் கட்டுரைகள் பொருள்கள் முதலியன இதில் வெளியாயின. (கூ0க)

## 176. செந்தமிழ்ப்பாநு - 1929

பார்வைக்குக் கிடைத்தது: பொய்கை 1. மலர் 3. விபவ ஆண்டு பங்குனித் திங்கள்.

ஆசிரியர்: வை. செல்லையாச் செட்டியார். விசயபுரம் வெல்லிங்டன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

டிம்மியளவுப் பக்கம் 32. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தஞ்சை மாவட்டம் திருவாரூரில் இருந்து இவ்விதழ் வெளியாகியது.

செந்தமிழுக்குத் தொண்டுசெய்ய வேண்டுமென்பதையே நோக்கமாகக்கொண்டு வெளியிடப்பட்ட இவ்விதழ் ஆதரிப்பாரைப் பெறாது ஐந்தாறு மலர்கள் வரை வெளிவந்து பிறகு மறைந்து போயது. செந்தமிழ் மன்னர்கள் ஆட்சிபுரிந்த திருவாரூரில் தோன்றிய இவ்விதழ் மிகுவிரைவாக மறைந்தது வியப்பே. (௩௦௨)

## 177. ஞான அரசு - 1929

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 3. 1929ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள்.

ஆசிரியர்: வ. சி. தங்கவேலுப் பிள்ளை. திருநெல்வேலி மீனாம்பிகை அச்சகத்தில் அச்சிட்டுத் திருநெல்வேலிப் பேட்டையில் இருந்து ஆசிரியரால் வெளியிடப்பெற்றது.

அளவு: 21 × 14 செ. மீ., பக்கங்கள் 34. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

சமயஞானத்தைப் பரப்புதற்குத் தோன்றிய இதழ். தேவார விளக்கம், நமது கடவுளுணர்ச்சி, திருவள்ளுவரும் ஆண் பெண் ஒற்றுமைத் தொடர்பு நிலையும், சௌர மாத சாந்திர மாத விளக்கம் முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. (௩௦௩)

## 178. தமிழரசி - 1929

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1. விபவ ஆண்டு தைத்திங்கள் (1929 ஜனவரி).

ஆசிரியை: கமலாவதி சந்திரராஜ். இவ்விதழ் கோலாலம்பூர் லாசர் அண்டு சன்ஸில் அச்சியற்றி வி. ஜே. சந்திரராஜ் என்பவரால் வெளியிடப்பெற்றது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 24. மலாய நாட்டிற்கு ஆண்டொன்றிற்கு வெள்ளி இரண்டு. இந்தியா இலங்கைக்கு ஆண்டொன்றிற்கு ரூபா மூன்று. தனியிதழ் 15 காசு.

இவ்விதழ் மலாய் நாட்டில் தமிழருக்கென்றத் தமிழரால் தமிழ்மொழியில், தமிழகத்தின் தொன்மையை விளக்குவதாய், தமிழ்ப் பெண்மகளிர்க்கு உரிமைதருவதாய், வாழ்க்கைக்கு இனிமை பயப்பதாய் ஏழைகளும் பெற்றனுபவிக்கத் தக்க குறைந்த விலையுடையதாய்த் தோன்றியது. தமிழ்மோசை, தமிழிலக்கியச் சிறப்பு முதலிய கட்டுரைகள் வெளிவந்தன. (௩௦௪)

## 179. தேசிகப்ரகாசிகை - 1929

பார்வைக்குக் கிடைத்தது : சம்புடம் 1. சஞ்சிகை 10. சுக்கில ஆண்டு பங்குனித் திங்கள் (1930).

ஆசிரியர் : மா. ரெ. பா. கோவிந்தராசராமாநுச தாசர். துறையூர் சஞேபகார அச்சுக்கூடத்தில் அச்சிட்டுப் பெருமாள்மலை என்னும் ஊரில் இருந்து வெளியிடப் பட்டது.

அளவு : 21 × 14 செ. மீ., பக்கங்கள் 28. தனி இதழ் அணு ஆறு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழில் தத்துவம், தருமம், ஒழுக்கம் முதலிய சமயக் கொள்கைகளும், இராமாயணம், பாரதம், பாகவதம், விட்டுணு புராணம், பகவத்கீதை, ஆழ்வார், ஆசார்யர்கள் அருளிச் செய்த பிரபந்த ரகசிய வியாக்கியானங்கள் முதலியவற்றிலுள்ள அருமையான பொருள்களும் பொதுச் செய்திகள் சிலவும் வெளியிடப் பெற்றன. (௩௦௫)

## 180. பாண்டியன் - 1929

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 1. 1929ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள்.

ஆசிரியர்: ம. சின்னத்தம்பித் தேவர். திருவைகுண்டம் திருஞானவித்யா அச்சகத்தில் அச்சியற்றப்பட்டுத் தூத்துக்குடியில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு. தனியிதழ் அணா மூன்று.

இவ்விதழ் தமிழ் மொழியைப் பேணுதற்கும், பக்தி முறையைப் பகருதற்கும், தீண்டாமையை ஒழிப்பதற்கும், பெண் கல்வியைப் பெருக்குதற்கும் தோன்றியது. கட்டுரைகளையும் கதைகளையும் வெளிப்படுத்தியது. (கூ0கா)

## 181. பாரதி - 1929

பார்வைக்குக் கிடைத்தது: மாலை 6. மணி 8. பவ ஆண்டு கார்த்திகைத் திங்கள் (1934 நவம்பர்).

ஆசிரியர்: ரா. நாராயணசாமி. பொறுப்பாசிரியர்: ரா. சுப்ரமண்யம். பொறுப்பாசிரியர் ரா. சுப்ரமண்யம் அவர்களால் தாது உத்தமபாளையம் ஆனந்தா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $21 \times 14$ செ.மீ., பக்கங்கள் 90. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

உரிமை, சமதர்மம், உடன்பிறப்புப் பண்பு முதலிய கொள்கைகளை மக்களிடையே பரவச் செய்யவேண்டுமென்பதையே இவ்விதழ் தன்னுடைய நோக்கமாகக் கொண்டு தோன்றியது. ஆயினும் எல்லா வகையான கட்டுரைகளுக்கும் இடங்கொடுத்து ஆறு ஆண்டுகளுக்கு மேலே தொண்டு செய்தது. (கூ0எ)

## 182 மணிவாசகம் - 1929

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி-1 பகுதி-1 (31-10-1929)

ஆசிரியர்: சு. சுப்பராய பிள்ளை. கோவை திருப்பேரூர் மணிவாசகவிலாசம் சுப்பராய பிள்ளை அவர்களால் கோயமுத்தூர் வேளாள அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டு வெளியாகியது.

அளவு : $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் ,4. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் சைவசமயத் தொண்டு செய்து சமயப பற்றை நாட்டிலே பரப்புதற்குத் தோன்றியது. பார்வைக் குக் கிடைத்துள்ள இதழில் சைவசமயக் கட்டுரைகள் பல வெளியாகியுள்ளன. (௯௦அ)

## 183. யாதவமித்திரன் – 1929

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. பகுதி 6) சுக்கில ஆண்டு தைத்திங்கள். (1930 சனவரித்திங்கள்.

நிருவாக ஆசிரியர் : தி.மா. கோபால கிருஷ்ணக் கோன். ஆசிரியர் கூட்டத்துத் தலைவர் ஆர் கார்மேகக் கோன். மதுரை எஸ்ரெல்லியர் அச்சகத்தில் நிருவாக ஆசிரியரால் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் 34. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் அணா இரண்டு.

இவ்விதழ் கல்வி, பொருளாதாரம், ஆசாரச் சீர் திருத்தம், முதலிய துறைகளில் சிறந்த அறிஞர்களால் எழுதப் பெற்ற கட்டுரைகளைக் கொண்டு யாதவ மக்களின் முன்னேற்றத்தையே முதன்மை யாகக் கருதி வெளி யாகியது. (௯௦௧)

## 184. விஞ்ஞான பாஸ்கரன் - 1929

பார்வைக்குக் கிடைத்தது : பாஸ்கரன்-1 கிரணம்–2 சுக்கில ஆண்டு வைகாசித் திங்கள் (1929)

ஆசிரியர் : உ. வே. வித்துவான் திருமழிசை கோயில் கந்தாடை உபந்யாசரத்நம் சீநிவாசாசாரிய சுவாமிகள். சென்னை பத்திசார அச்சுக்கூடத்தில் பதிப் பிக்கப் பட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு : 22 × 15 செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் வைணவசம்பிரதாயங்களை மேற்கொண்டது. மருத்துவம் பாரதாதி தனிச்லோகம், இராமாயண இரகசியம், வேதப்ராமண்யம் முதலிய கட்டுரைகளைத் தாங்கி வெளியாகியது. (ரு-கம)

## 185. வீரசைவம் - 1929

இவ்விதழின் இரண்டாண்டுத் தொகுதிகள் பார்வைக்குக் கிடைத்தன. விபவ ஆண்டுத் தைத் திங்கள் (1929 சனவரி) முதல் சுக்கில ஆண்டு பங்குனித் திங்கள் இறுதியாக உள்ள இதழ்கள்.

டிம்மி அளவில் உள்ள இவ்விதழ இரண்டு மூன்று இதழ்கள் ஒன்றாகச் சேர்ந்தும் வெளியாகியுள்ளன.

"பொம்மபுரம் ஸ்ரீ சிவஞான பாலைய தேசிக சுவாமிகள் அருட்கொடையால், தமிழ் நாட்டு வீரசைவ மகாசங்கத்து நிறைவேற்றற் கழகத்தினின்று வரும் செந்தமிழ்த் திங்கள் வெளியீடு" என்று இதழின் முகப்பில் குறிக்கப்பட்டுள்ளது. குமாரவீரையர் என்பவர் இதற்கு ஆசிரியராக இருந்தார். சிக்க வீரப்பா, ஏகாம்பர ஐயர், கந்தசாமி ஐயர் வா. சா. வைத்தியலிங்கையர், ந.மு. வேங்கடசாமி நாட்டார் முதலியோர் இதிற் கட்டுரை யெழுதியுள்ளனர். இவ்விதழ் வீரசைவ சமயத்தை வளர்ப்பதற்குத் தொண்டு புரிந்தது. திருச்சிமாவட்டம் முசிரியில் இருந்து வெளியாகியது. (ரு-கக)

## 186. வைத்தியக் களஞ்சியம் - 1929

பார்வைக்குக் கிடைத்தது. தொகுதி 2. பகுதி 2. பிரமோதூத ஆண்டு சித்திரைத் திங்கள் (1930)

பதிப்பாசிரியர் ஐ. பொன்னையா. ஏழாலை சுன்னாகம் திருமகள் அச்சியந்திரசாலையில் பதிப்பாசிரியரால் பதிப்பித்து வெளியிடப்பட்டது.

அளவு : $22\frac{1}{2} \times 14$ செ.மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா நான்கு.

இவ்விதழ் சில மருத்துவக்கட்டுரைகளை வெளியிட்டதோடு தமிழ்ச் சித்தவைத்தியம்; பரராச சேகரம், உரோக நிதானம் முதலிய நூல்களையும் இதழின் அங்கமாக வெளியிட்டு நூல் வடிவாக்கும் பணியை மேற்கொண்டிருந்தது. (௩௪௨)

## 187. அகம்படியர் குலசேகரன் - 1930

பார்வைக்குக் கிடைத்தது: மலர் - 1. இதழ் 10. பிரசோற்பத்தியாண்டு ஆடித்திங்கள் (14-8-1931)

ஆசிரியர் : ஆர். செல்லம் பிள்ளை. மதுரை ராசா அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு : $21 \times 14$ செ.மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா. ஒன்று.

இவ்விதழ் அகம்படிய குலமக்களின் முன்னேற்றத்தைக் கருதி வெளியிடப் பெற்றது. தென்னாட்டில் பெரும்பாலான ஊர்களில் அகம்படியர்கள் வாழ்ந்துள்ளனர். அவர்களுடைய முன்னேற்றங்கருதி இவ்விதழ் நன்கு உழைத்தது. தீண்டாமையுஞ் சாதிபேதமும், இந்திராணி, உலகமாண்பு முதலிய கட்டுரைகள் இதில் வெளியாயின. (௩௪௩)

## 188. இந்தியர் ஒளி - 1930

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 1. பிரமோதூத ஆண்டு ஐப்பசித் திங்கள் (1930 அக்டோபர்)

ஆசிரியர் : கோ. இராமசாமி. தென்னாப்பிரிக்கா டர்பனில் விக்டோரியா தெருவில் இலட்சுமி விலாச அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 31½ செ.மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் பத்து ஷில்லிங். தனியிதழ் ஒரு ஷில்லிங்.

ஆசிரியர் : இவ்விதழின் நோக்கத்தைப் பற்றி, "நமது சமயத்தின் உயர்வு, நமது கல்வியின் பெருமை, நமது ஆசாரத்தின் உண்மை, நம் மூதாதைகளின் சரித்திரம், நமது நாகரிகத்தின் உயர்வு, நமது கைத் தொழிலின் வழிகள், வியாபாரத்தின் நுணுக்கங்கள், விவசாயத்தின் முறைகள் முதலியவைகளைப் பற்றி ஆராய்ந்து தகுந்த ஆதாரத்துடன் அவசியமானவைகளைப் பற்றி எழுதப்படும்" என்று குறிப்பிட்டுள்ளார். (கூகச)

## 189. ஆரோக்கிய சிந்தாமணி - 1930

பார்வைக்குக் கிடைத்தது : 1. சஞ்சிகை. சுக்கில ஆண்டு தைத்திங்கள் (1930 ஜனவரி)

ஆசிரியர் வி. என். சாமராவ். சென்னை சுக்லகலா அச்சுக் கூடத்தில் அச்சிட்டுத் தம்புச் செட்டித் தெரு சிந்தாமணி வைத்திய ஆசிரமத்தில் இருந்து வெளியிடப் பட்டது.

அளவு : 21 × 14 செ.மீ., பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் அணு எட்டு.

இவ்விதழ் உடல் நலத்தோடு மக்கள் வாழ்வதற்குரிய வழிகளைப் போதிப்பதற்காகத் தோன்றியது. உடல்நல முறைகள், பிள்ளைப்பேறு, குழந்தை வளர்ப்பு, பிள்ளை பெற்ற பெண்களைப் பாதுகாக்கும் முறைகள், நோய்களைத் தடுக்கும் வழிகள், நீண்டவாழ்வைப்பெறும் வகைகள் மற்றும் இவைகளைப் போன்ற கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. (கூகரு)

## 190. கிராம முன்னேற்றம் - 1930

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 12. 1931 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள்.

ஆசிரியர்: ஓ. சம்பந்தமுதலியார். செங்கற்பட்டு மாகசின் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப் பட்டது.

அளவு: $24\frac{1}{2} \times 16$ செ.மீ., பக்கங்கள் 24. தனி இதழ் அணா 4. ஆண்டுக் கையொப்பம் ரூ. 3. இதன் அலுவலகம் உழலூர் பொன்விளைந்த களத்தூர்ப் போஸ்ட் ஒத்திவாக்கம் எஸ் ஆர்.

இவ்விதழில் ஐக்கிய இயக்கம், கிராம சீவனோபாய ஆராய்ச்சி, விவசாயம், கல்வி, இந்தியாவில் உள்ள காடுகள், இந்திய வியாபார முறை, இந்திய கிராம வாழ்க்கை, வறுமைநிலைமை, பணமுதல், கிராம சுகாதாரம், கிராமப் புனருத்தாரணம் முதலியவைகளைப் பற்றிய கட்டுரைகள் வெளியாயின. (௩௧௬)

## 191. சென்னைச் சகோதரன் – 1930

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 8. பிரமோதூத ஆண்டு புரட்டாசித் திங்கள் (1930 - செப்டம்பர்).

ஆசிரியர்: ஒய். சி. கே. பாணி அவர்கள். சென்னை சூளை மோகனபந்தர் பவர் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $20 \times 13$ செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

அறிவு, கல்வி, அன்பு, அனுபவம், ஞானம், ஆநந்தம், ஆச்சரியம், விகடம், விநோதம் முதலிய செய்திகளை இவ்விதழ் தாங்கி வெளியாகியது. தாள் மிகமிக மட்டமானது. விளம்பரங்கள் அதிகமாக உள்ளன. (௩௧௭)

## 192. சோதிடசந்திரிகா - 1930

பார்வைக்குக் கிடைத்தது: சம்புடம் 1. சஞ்சிகை 2. சுக்கில ஆண்டு மார்கழித் திங்கள் (1930).

ஆசிரியர்: காஞ்சி காமகோடி பீடாதிபதி சகத்குரு சங்கராசாரிய சுவாமிகள் மடம் ஆத்தான வித்துவான் பாஷ்யபாவக்ஞ—ஸ்மிருதிபூடண வரகூர் ஸ்வா. வேங்கட்ராம சாத்திரிகள். கும்பகோணம் கோமளாம்பா அச்சுக்கூடத்தில் அச்சிட்டு ஆசிரியரால் திருவானைக்காவலில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 22 × 14 செ. மீ., பக்கங்கள் 40. தனியிதழ் அணா ஆறு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இதிற் பல செய்திகள் வெளியிடப்பெறவில்லை. காலக் கணித நூல்களான பிருஹத் ஜாதகம் முதலியவை ஐவ்வைந்து பாரங்களில் வெளிவந்து நூலாக முடிவுபெற்றன. (௩-க௮)

## 193. தர்மசோதி - 1930

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 3. சுக்கில ஆண்டு பங்குனித் திங்கள் (1930 மார்ச்)..

ஆசிரியர்கள்: தி. மு மாணிக்கம் பிள்ளை. எல். எம். பி. இராவ்சாகிபு சு. வி. கனகசபைப் பிள்ளை, தமிழ்நாட்டு 'தியாசொபி' சங்கத்தாரின் திங்கள் வெளியீடு. சென்னை இராயப்பேட்டை சாது அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டு அடையாற்றில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு. 21 × 14 செ. மீ., பக்கங்கள் 32. தனி இதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

தியாசொபி என்பது இந்து சமயக் கொள்கைகளில் ஒன்று. பொதுவான அடிப்படை நோக்கத்தைக் கொண்டது. இவ்விதழில் கிறித்து சமயம், ஆத்மவிசாரம், சிவஞான போதம், திருக்குறள், சூரியமண்டலம் முதலிய பலவகையான கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (௩-கக)

## 194. திருவரங்கம் பெரிய கோயில் - 1930

பார்வைக்குக் கிடைத்தது: சஞ்சிகை 4-பத்திரிகை 3 பவ ஆண்டு

ஆசிரியர் : பார்த்தசாரதி ஐயங்கார். திருச்சி இம்பீரியல் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் சீரங்கத்தில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 21×14 செ. மீ., பக்கங்கள் 24. தனி இதழ் அணா ஒன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

திருவரங்கம் பெரிய கோயில் என்று பெயர் சூட்டிக் கொண்ட இவ்விதழ் திருவரங்கம் பெரிய கோயிலைப் பற்றிய செய்திகளை மக்களுக்குத் தெரிவிக்கத் தோன்றியது. அக் கோயிலைப்பற்றிய சில செய்திகளைத் தெரிவித்ததோடு தீண்டாமை விலக்கு முதலியவைகளுக்கு எதிரிடையாகவும் பிரசாரஞ்செய்து கொண்டிருந்து மறைந்தொழிந்தது. (௩௨௦)

## 195. நவமணி - 1930

பார்வைக்குக் கிடைத்தது மாலை-1. மணி-2. சுக்கில ஆண்டு மாசித்திங்கள் (1930)

ஆசிரியர்: சி. ராம. இராமநாதன். இராமநாதபுரம் மாவட்டம் பள்ளத்தூர் வேதாம்பாள் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு : 22×14 செ. மீ., பக்கங்கள் 32. தனி இதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் பெண்கள் முன்னேற்றம், தீண்டாதார் நலம், மதுவிலக்கு, உயிர்கள்மாட்டு அருளுடைமை, கதர் வளர்ச்சி ஆகியவைகளை நாட்டிலே பரப்புவதற்காகத் தோன்றிச் சில திங்கள்கள் வெளியாயிற்று. (௩௨௧)

## 196. பாலவித்யா - 1930

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி-1. பகுதி-4. பிரமோதூத ஆண்டு சித்திரைத்திங்கள் (1930 ஏப்ரல்).

என். வேங்கடராமனால் கும்பகோணம் ஸ்ரீவித்யா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 18½ × 7 செ. மீ., பக்கங்கள் 48. தனி இதழ் அணு மூன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் குழந்தைகளின் வெளியீடு. இதில் குழந்தைகளும் பெரியவர்களும் விரும்பிப் படிக்கத்தக்க சிறு கதைகளும் தொடர் கதைகளும் வெளியாயின. இரண்டொரு கட்டுரைகளும் முதலில் வெளியாயின. (௩௨௨)

## 197. முயற்சி

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி-1. பகுதி-1. பிரமோதூத ஆண்டு ஆவணித்திங்கள் 1௳ (1930)

ஆசிரியர்: சுப. ஆறுமுகன். ஆசிரியரால் பினங்கு மெர்க்கண்டைல் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு : 20½ × 13½ செ. மீ., பக்கங்கள் 36. ஆண்டுக் கையொப்பம் மலாய் நாட்டிற்கு வெள்ளி 2-00. ஆயுட் கட்டணம் 25-00. தனியிதழ் 20 காசு.

பினங்கில் இருந்து வெளியான இவ்விதழ் அவ் விடத்தில் உள்ள தமிழ் மக்கட்குத் தமிழ்த்தொண்டு செய்ய வேண்டும் என்பதை நோக்கமாகக்கொண்டு வெளி யாகியது. பல சிறிய கட்டுரைகள் இவ்விதழில் வெளி யாயின. ஆசிரியர் தமிழ்த்தொண்டு செய்ய முயன்றிருக் கிறார். (௩௨௩)

## 198. அபிநவ பத்திரிகை - 1930

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 1. சஞ்சிகை 2. 1930 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் வெளிவந்தது.

ஆசிரியர்கள்: கு. ரா. ஸ்ரீநிவாச ஐயங்கார், பி. ஏ. ந. ராமானுசாசாரியா, எம். ஏ., எல். டி., வி. என். குபிலீ அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 22×14 செ. மீ., பக்கங்கள் 20. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் அணா நான்கு.

பெயருக்கேற்ப இதழ் வடமொழிப் போக்கையே பின் பற்றியது. வடநூன்மொழிபெயர்ப்பாகிய மிருச்சகடிகை, வேதாந்தசாரம், சரீரக சாஸ்திரம், சுதவ்ருட்சம் முதலியன இதில் வெளியாயின. (௩௨௪)

## 199. லங்கா - 1930

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 1. பிரமோதூத ஆண்டு ஐப்பசித்திங்கள் (1930 அக்டோபர்)

ஆசிரியர் : கே. எஸ். அனந்தநாராயண ஐயர். ஆசிரிரால் கொழும்பு மீனும்பாள் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $21\frac{1}{2}$×14 செ. மீ. பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் சதம் 10.

இவ்விதழ் இலங்கையில் உள்ள தமிழர்களுக்குப் பணி புரிய வேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியிடப் பட்டது. கட்டுரைகளைவிட விளம்பரங்கள் மிகுதியாக வெளியாயின. (௩௨௫)

## 200. அரிதாசன் - 1930

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 2. இதழ் 1. பிரசோற்பத்தியாண்டு (1931)

ஆசிரியர் : என். தேவராசராவ். கொள்ளே காலம் ஸ்ரீநிவாசா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 25×19 செ. மீ., பக்கங்கள் 20. தனியிதழ் அணா ஆறு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

மத்வமதச் செய்திகளை இவ்விதழ் வெளியிட்டு வந்தது. இதில் மணிமஞ்சரி, மத்வ விஜயம் முதலிய

அடிப்படையான நூல்கள் வடமொழி அறியாதவர்களும் எளிதிலறியுமாறு வெளியாகியது. கிருட்டிணுவதாரத்துவம் மச்சய நிர்த்தவிசயம் முதலிய கட்டுரைகள் சிறந்து விளங்குகின்றன. (கூஉசு)

## 201. ஜீவரட்சகன் - 1930

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி *1.* பகுதி *1.* பிரமோதூத ஆண்டு ஐப்பசித்திங்கள் (*1930* அக்டோபர்)

ஆசிரியர்: கா. சா. மல்லிநாதன். சென்னை வண்ணாரப்பேட்டை இராம் பால் அச்சகத்தில் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது.

அளவு: $21\frac{1}{2} \times 14$ செ.மீ. பக்கங்கள் *24*. கையொப்ப விவரந் தெரியவில்லை.

மக்கள் பிற உயிர்களைக் கொன்று தின்று தங்களுடைய வயிற்றைச் சுடுகாடாக்கிக் கெட்டொழியும் அவல நிலையில் இருந்து விடுவித்து அவர்கட்கு அன்பையும் அருளையும் உண்டாக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு இவ்விதழை வெளிப்படுத்தி நல்லதொண்டு செய்தனர். இதனுல் நல்ல பலனும் உண்டாகியது. இவ்விதழ் நீண்டு நடைபெறுமல் போனது வருந்தத்தக்கது. (கூஉஎ)

## 202. கானவித்யா ப்ரகாசினி - 1931

பார்வைக்குக் கிடைத்தது: மலர் *1.* இதழ் *2.* நவம்பர் *1931.*

ஆசிரியர்: வி. அனந்தகிருட்டிணன், பி.ஏ., வி. எஸ். பார்த்தசாரதி ஐயங்கார் என்பவரால் திருவைகுண்டம் கானவித்யா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $20 \times 14$ செ. மீ., பக்கங்கள் *48*. தனியிதழ் அணு இரண்டரை. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் இசைத் தமிழை வளர்க்க வேண்டும் என்பதையே தன்னுடைய நோக்கமாகக் கொண்டு வெளி

யாகியது. தியாகராசய்யர் வரலாறு, இந்து சங்கீதம், கவிதையஞ் சோலை முதலிய கட்டுரைகள் பார்வைக்குக் கிடைத்த இதழில் வெளியாகியுள்ளன. (நூஉஅ)

## 203. குலாலமித்திரன் - 1931

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. பகுதி 11. பிரசோற்பத்தியாண்டு மாசித் திங்கள் (1932 பிப்ரவரி)

ஆசிரியர்: மு. பெரி. வீர. அழகர்சாமி வேளார். பழநி சண்முகானந்தம் பதிப்பகத்தில் அச்சிட்டு வெளிப் படுத்தப்பட்டது.

அளவு : $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., அளவுப் பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றே கால். தனியிதழ் விலை அணா இரண்டு.

குலால மக்களின் முன்னேற்றங்கருதித் தென்னிந்திய குலாலர் சங்கத்திலிருந்து வெளி வந்தது. கிடைத்துள்ள இதழில் நவபாண்ட வியாபாரம், குடியால் வருங்கேடுகள் முதலிய பலகட்டுரைகள் வெளியாகியுள்ளன. (நூஉகூ)

## 204. காலச்சந்திரன் - 1932

பார்வைக்குக் கிடைத்தது : வருடம் 6. மாதம் 1. 1937 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள்.

ஆசிரியர்: செய்யிது அஹமது மவுலானு. திரு நெல்வேலி மீரானியா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு : $24 \times 18\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் விலை அணா நான்கு.

இஃதொரு முஸ்லீம் சமய வெளியீடு. இதற்கு முன் இவ்விதழ் வேறு பெயரோடு நடந்துகொண்டிருந்த தென்பது, "இம்மாசிகை 1927 முதல் 1931 முடிய ஐந்து

வருடங்களாக 'கிருஸ்ஸமான்' என்ற அரபிநாமத்தோடு நடந்தேறிவந்து பல அசௌளரியங்கள் காரணமாய் நிறுத்தப் பட்டிருந்தது'' என்று ஆசிரியர் எழுதியிருப்பதால் பெறப்படுகிறது. இவ்விதழில் பல வகையான கட்டுரைகள் வெளியாயின. முஸ்லீம் சமய வளர்ச்சிக்கு உழைத்தது. (௩௩௦)

## • 205. சன்மார்க்கன் - 1931

பார்வைக்குக் கிடைத்தது: தாய் 2. சேய் 4. ஆங்கீரச ஆண்டு ஆடித்திங்கள் (1932 ஜூலை ஆகஸ்ட்)

ஆசிரியர்: சுவாமி சிவநேசம். இதனை இவர் திண்டுக்கல்லில் இருந்து நடத்தினார்.

டபுள் கிரௌன் அளவுப் பக்கம் 40. ஆண்டுக் கட்டணம் ரூபா 1.

இதனை ஆசிரியர் மக்களுக்கு நல்வழியைப் போதிக்க வேண்டும் என்னும் பொது நோக்கத்துடனே நடத்தினார். சில ஆண்டுகள் இவ்விதழ் நடைபெற்றது. (௩௩௧)

## 206. தமிழ்ப் பெருமாட்டி - 1931

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 8. (1931)

ஆசிரியர்: வடுவூர். கே. துரைசாமி ஐயங்கார், பி.ஏ. சென்னை திருவல்லிக்கேணியில் ஓரியண்டல் ஹோம் யூனிவர்சிட்டி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

அளவு: 18 × 12 செ. மீ., பக்கங்கள் 100. தனியிதழ் அணு மூன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இது பல பொதுச் செய்திகளைக்கொண்ட இதழ் அன்று. புதினங்களைத் தொடர்ந்து வெளிப்படுத்திப் புத்தகமாக உருவாக்கும் வரிசைகளில் ஒன்று. இதில் வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார் இயற்றிய புதினங்கள் தொடர்ந்து வெளியாயின. (௩௩௨)

## 207. தனவணிகன் - 1931

பார்வைக்குக் கிடைத்தது: இதழ் மலர் 1. இதழ் 2 பிரமோதூத ஆண்டு மார்கழித்திங்கள் நிருவாக ஆசிரியர் கருப்பன் செட்டியார்.

ஆசிரியர்: கருப்பன் செட்டியாரால் கோட்டையூர் தனவணிகன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

டிம்மி அளவுப் பக்கம் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இவ்விதழ் தமிழ் இலக்கியத் தொடர்பாகவும் தன வணிக சமூக முன்னேற்றத் தொடர்பாகவும் தொண்டு செய்தலைத் தன்னுடைய கடமையாகக் கொண்டு வெளி வந்துலாவியது. (ருருரு)

## 208. விவேக சக்தி - 1931

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 5. பிர சோற்பத்தியாண்டு கார்த்திகைத்திங்கள் (1931 நவம்பர்)

ஆசிரியர்: மே. சக்கரவர்த்தி. ஆரணி அமெரிக்கன் ஆறுகாடு மிஷன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டு வடாற்காடு மாவட்டம் குழப்பலூரில் இருந்து வெளி யாகியது.

அளவு: $24\frac{1}{2} \times 18$ செ.மீ., பக்கங்கள் 20. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் சைன சமயத்தாரால் வெளியிடப்பட்டது. சைன சமய தத்துவம், ஜின குண கீதாஞ்சலி திருமேற்றி, சையந்தாதி முதலிய சைன சமயக் கட்டுரைகளும் நூலும் இதனில் வெளியாயின. (ருருச)

## 209. ஆயுர்வேத சீவரட்சகம் - 1932

பார்வைக்குக் கிடைத்தது: புத்தகம் 2. சஞ்சிகை 1. ஆங்கீரச ஆண்டு மாசித்திங்கள் (1933 பிப்ரவரி)

ஆசிரியர் : வைத்திய வித்தியாசாகர பண்டித டி.வி. எம். பில்வநாதய்யர். வேலூர் ரிகார்ட் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வடாற்காடு மாவட்டம் திருப்பத்தூர் ஆயுர்வேத சீவரட்சக காரியாலயத்தில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு : 24 × 17 செ. மீ., பக்கங்கள் 24. தனிப் பிரதி விலைக்குக் கிடையாது. மாதிரி காப்பி கொடுக்கப்பட மாட்டாது. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்னும் சீரிய மொழியைத் தன்னுடைய பல்லவியாகக் கொண்டு நோய்களைப் பற்றியும் அவைகளைப் போக்கற் குரிய மருந்துகளைப் பற்றியும் விரிவாகக் கட்டுரைகளை வெளியிட்டதோடு காலக்கணித நூல்களையும் பின்னிணைப் பாக வெளியிட்டு வந்தது. (௩௩௫)

## 210. சந்திரிகை - 1932

பார்வைக்குக் கிடைத்தது. ஆண்டு - க. உலா - க, உ, ஆங்கிரச ஆண்டு ஆடித்திங்கள் (1932 ஆம் ஆண்டு ஜூலை, ஆகஸ்டு)

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இதழ் திருத்தில்லை யில் இருந்து வெளியாகியது. டிம்மி அளவுப் பக்கம் 32.

ஆசிரியர் இவ்விதழின் கொள்கையைப் பற்றி, "சந்திரிகை ஒவ்வொரு மாதத்திலும் பூரணை தோறும் ஆடவர், பெண்டிர், சிறியோர், பெரியோர் முதலிய யாவரும் படித்தின்புறும் வண்ணம் அறிவாளர்களின் அரிய கட்டுரைகளைத் தாங்கியவளாய் வெளிவருவாள். இச் செல்வி பெரியார்களின் சரித்திரங்கள் மேல்நாட்டுக் கீழ் நாட்டு அறிஞர்களின் கருத்துரைகள், ஆராய்ச்சிகள், அநுபவங்கள், சிறு கதைகள், தமாஷ் துணுக்குகள், கைத்தொழில் விவசாயம் வியாபாரம் கல்வி முதலியவை களைப் பற்றிய கட்டுரைகள், தொடர்ச்சியாக வரும் ஓர் துப்பறியும் நவீனம், ஆங்காங்கு நிகழும் சில முக்கியமான

செய்திகள் இவைகளைப் போன்ற பல அரிய விஷயங்களைத் தன்னுட் கொண்டு தோன்றுவாள்" என்று குறிப்பிட்டுள்ளார். (௩௩௬)

## 211. சுபோத பாரிசாதம் - 1932

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 3. இதழ் 8. இது வெளியான காலந்தெரியவில்லை. வெளியிட்ட ஆண்டைக் குறிப்பிட மறந்துவிட்டனர்.

ஆசிரியர் : எஸ். ஏ. சுப்பிரமணிய அய்யர். திருச்சிராப் பள்ளியில் சிங்காரம் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 14 செ.மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

வேடிக்கையான பெயர் அமைந்த இவ்விதழ் எந்நோக்கத்தோடு வெளிப்பட்டதென்று தெரியவில்லை. அவா வறுத்தல், பத்திரிகை பலவிதம், எனது வீரம், சரம்பன், காலம் காலம் போராத காலம் முதலிய கட்டுரைகள் இதில் வெளியாகியுள்ளன. (௩௩௭)

## 212. பாரத நேசன் - 1932

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 1. ஆங்கீரச ஆண்டு கார்த்திகைத்திங்கள் (1932 டிசம்பர்).

ஆசிரியர்: பெ. வ. கண்ணப்ப முதலியார். சென்னை செயசந்திரா அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் சிந்தாதிரிப்பேட்டையில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு : 24 × 18½ செ. மீ. பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் அணா பன்னிரண்டு. தனியிதழ் விலை ஒன்றேகாலணா.

ஆசிரியர் : இவ்விதழின் கொள்கையைப் பற்றி "நாட்டு முன்னேற்றத்தில் கருத்தைச் செலுத்திச்

தொண்டுபுரிய, வழிகாட்ட நம் பாரத நேசன் தோன்றி யிருக்கிறான். அவன் நாட்டு முன்னேற்றத்திற்குரிய விவசாயம், நெசவு முதலிய கைத்தொழில், பொருளாதார நிலை, வைத்தியம், கல்வி, சமயம் ஆகியவைகளைப் பண்டை நிலையில் கொண்டு வருதற்குரிய வழிகளைக் கோலி மக்க ளுக்குக் கண்களைத் திறப்பான்" என்று குறிப்பிட்டுள்ளார். பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் நல்ல கட்டுரைகள் சில வெளிவந்துள்ளன. (௲௲௮)

## 213. வர்த்தக ஊழியன் - 1932

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 5. இதழ் 50. (1936 ஆகஸ்ட்)

ஆசிரியர் : டி. வி. கே. நாயுடு. திருச்சிராப் பள்ளி ஸ்ரீ நிலையம் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $27\frac{1}{2} \times 22$ செ. மீ., பக்கங்கள் 18. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் ஆங்கிலத்திலும் தமிழிலும் கட்டுரைகளை வெளியிட்டது. வணிகர்களுடைய நன்மையைக் கருதியே வெளியிடப்பட்டது. சப்பானுடன் வர்த்தக ஒப்பந்தம், திருச்சிவர்த்தக சங்கம், சென்னை மாகாண தொழில்நிலைமை முதலிய கட்டுரைகள் வெளியாயின. (௲௲௬)

## 214. விசயலக்ஷ்மி - 1932

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 3. ஆங்கிரச ஆண்டு மாசித்திங்கள் (1933 பிப்ரவரி)

ஆசிரியர் : சுகவனம் சிவப்பிரகாசன். தர்மபுரியில் சஞ்சீவி அச்சகத்தில் அச்சிட்டு என். தேவராசன் என்பவரால் தருமபுரியில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு : $21 \times 14$ செ. மீ., பக்கங்கள் 64. தனியிதழ் அணா ஒன்றரை. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் மக்கட்கு மகிழ்ச்சியளிக்கும் கட்டுரைகளை வெளியிட வேண்டுமென்னும் நோக்கத்தோடு வெளியிடப் பட்டது. எண்ணும் எழுத்தும், திருவருட்பா ஆராய்ச்சி, சர்வ கலா சாலைப்படிப்பு, தமிழின் தற்கால நிலை முதலிய சிறந்த கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகியுள்ளன. (௩௪0)

## 215. ஆத்மரட்சா - 1933

பார்வைக்குக் கிடைத்தது : சிமுக ஆண்டு ஆவணித் திங்களில் வெளியான இதழ் (*1933*)

ஆசிரியர் : தேவுடு அய்யர். மதுரை வேங்கடேஸ்வர் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : *21* × *14* செ. மீ., பக்கங்கள் *44*. தனியிதழ் அணா நான்கு; ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இவ்விதழ் உடல் நலத்தைக்கருதி வெளியிடப்பட்டது. மருத்துவச் செய்திகள் பல இதனில் வெளியாயின. உடலைப் பாதுகாத்துக்கொண்டால் பிறகு ஆன்ம லாபத்தைத் தேடிக்கொள்ளலாம் என்னுங் கருத்துடனே தான் ஆத்மரட்சா என்று பெயர் வைத்துள்ளனர். (௩௪௧)

## 216 இந்திய விவசாயம் - 1933

பார்வைக்குக் கிடைத்தது : புது மலர் *1*. இதழ் *10*. ஆங்கிரச ஆண்டு தைத்திங்கள் (*1933* சனவரி)

ஆசிரியர் : பெயர் வெளியிட்ட இடம் முதலியன பார்வைக்குக் கிடைத்துள்ள இதழைக் கொண்டு அறிய முடியவில்லை.

அளவு : *28* × *19* செ. மீ., பக்கங்கள் *12*.

இவ்விதழின் தலைப்பில் "கொழுமீந்ற் குடிகொண்ட குடிச்செல்வமே செல்வம்" என்னும் மொழியொன்று காணப்பெறுகிறது. இவ்விதழில் கோழிப் பண்ணை

ஆரம்பத்தில் செய்வதென்ன? தென்னிந்தியாவில் கிராம்பு சாகுபடி, மண்புழு முதலிய பல கட்டுரைகள் வெளியாகி யுள்ளன. (௩௪௨)

## 217. காந்தி - 1933

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. சீமுக ஆண்டு சித்திரைத் திங்கள் (1933 ஏப்ரல்)

ஆசிரியர்: டி. எஸ். சொக்கலிங்கம். சென்னை ரெயித்பி கம்பெனியில் அச்சிட்டுச் செம்புதாஸ் தெருவில் இருந்து வெளியாகியது.

அளவு: 24 × 16 செ. மீ., பக்கங்கள் 56. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை; தனியிதழ் விலை அணு இரண்டு.

இவ்விதழ் நாட்டு விடுதலைக் கொள்கையை மேற் கொண்டு அதற்கான கட்டுரைகளையும் பிற செய்திகளையும் வெளியிட்டது. இது பின்னாளில் திங்களுக்கு இருமுறை யாகவும் வெளிவந்து நற்றொண்டு புரிந்தது. (௩௪௩)

## 218. சந்திரோதயம் - 1933

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 5. சீமுக ஆண்டு ஆனித்திங்கள் பன்னிரண்டாம் நாள் வெளி வந்தது.

ஆசிரியர்: எம். இராச சிகாமணி ரெட்டிகாரு, பி.ஏ. பாளையங்கோட்டை பென்ட் லாண்ட் அச்சகத்தில் அச் சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 21 × $13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 54. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

சந்திரோதயமாகிய நிலவுத் தோற்றம் மக்கட்கு இன் பத்தை யளித்தலைப்போல இவ்விதழைக் கொண்டும் மக்கட்கு இன்பத்தைச் செய்ய வேண்டுமென்பதே இவ்வித

ழின் நோக்கமாகும். இதில் சில கட்டுரைகள் கதைகள் முதலி யன வெளியாகியுள்ளன. இதன் மறைவுக்குப் பின் வேறொரு சந்திரோதயம் தோன்றி அதுவுஞ் சில காலம் விளங்கி மறைந்துபோயது. (௩௪௪)

## 219. சன்மார்க்கப்ரதர்சினி - 1933

பார்வைக்குக் கிடைத்தது : வால்யூம் 2. இலக்கம் 5. 1935 சனவரி.

ஆசிரியர்: சாஸ்த்ர ரத்னம் தேதியூர் சுப்பிரமணிய சாஸ்த்ரிகள். மதுரை அரிசமய திவாகரம் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 22 × 14 செ. மீ. பக்கங்கள் 40. தனியிதழ் அணா இரண்டு; ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழில் பாகவதம், இராமாயணம், பகவத் கீதை முதலிய நூல்கள் விரிவுரைகளோடு வெளியாயின. இவை முடிவு பெற்ற பின் நூல் வடிவாக ஆயின. (௩௪௫)

## 220. செந்தமிழ் மலர் - 1933

பார்வைக்குக் கிடைத்தது : மலர் க. இதழ் எ. 1933.

ஆசிரியர் : பண்டித இராமசுப்பிரமணிய நாவலர். ஆசிரியரால் தக்கலை செந்தமிழ் நிலையம் நூற்பதிப்புச் சாலையில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 22 × 14 செ. மீ., பக்கங்கள் 24. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. அரசர்கட்கு ரூபா ஐந்து; ஆயுட் சந்தா ரூபா இருபத்தைந்து.

இவ்விதழ் சீரிய செந்தமிழ்ப் பாடல்கள், உரைநடைகள் முதலியவைகளை வெளிப்படுத்தற்குத் தோன்றியது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் தனிப்பாவலங்கல் என்னுஞ் செய்யுட் பகுதி, கடற்காட்சி, விசும்பு முதலிய கட்டுரைப் பகுதிகள் ஆகியன வெளியாகியுள்ளன. (௩௪௬)

## 221. ஞாயிறு - 1933

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1, கதிர் 1. சிமுகயாண்டு (1933)

இவ்விதழுக்கு ஆசிரியக் கழகம் ஒன்று அமைந்திருந்தது. அதன் தலைவர் சு. நடேச பிள்ளை, பி. ஏ. பி. எல்., அமைச்சர், சுவாமி உருத்திரகோடீசுவரர்.

யாழ்ப்பாணம் சைவப் பிரகாச அச்சகத்தில் அச்சிட்டு க. நவரத்தினம் என்பவரால் வெளியிடப்பட்டது.

ராயல் அளவுப் பக்கம் 80. தனிக்கதிர் அணு 12. ஆண்டுக் கையொப்பம் ரூபா 4.

இவ்விதழைக் கலையாக்கங் கருதியே அன்பர்கள் பலர் ஒன்று சேர்ந்து வெளிப்படுத்தினர். தமிழ் வல்ல அறிஞர்கள் பலர் இவ்விதழில் உயரிய கட்டுரைகளை வரைந்துள்ளனர். சுவாமி விபுலாநந்தர், சு. நடேசபிள்ளை, வை. இராமசாமி சர்மா, சுவாமி ஞானப் பிரகாசர், சாமி வேலாயுதம் பிள்ளை, முத்துக்குமாரசாமிப் பிள்ளை முதலியோருடைய கட்டுரைகள் இதழை அழகு செய்தன. (௩௨௭)

## 222. தமிழ்க் கடல் - 1933

பார்வைக்குக் கிடைத்தது: கடல் 1. அலை. 1. 1933 ஆம் ஆண்டு சனவரித் திங்களில் வெளி வந்த இதழ்.

ஆசிரியர்: கா. நமச்சிவாய முதலியார்: மயிலாப்பூர் தமிழ்க் கடல் அலுவலகத்தில் இருந்து வெளியிடப் பட்டது.

அளவு: $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

தமிழானது கடலைப் போன்றது. இது பலவகையான கலைச் செல்வங்களையுந் தன்னகத்தே கொண்டது.

ஆசிரியர் பலவகையான கலைச் செல்வங்களையும் தமிழ் நாட்டிற்கு வழங்கவேண்டும் என்னுஞ் சீரிய நோக்கத்தோடு, இவ்விதழைத் தொடங்கினுர். பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் பல கட்டுரைகள் வெளியாகியுள்ளன ஆசிரியர் தமது நோக்கத்தை:

"தமிழக் கடல் என்னும் இப்பத்திரிகையில் பொது மக்களுக்கு இன்றியமையாத செய்திகளே வெளிவரும் அவையாவன: பூமி சாஸ்திரம், வான சாஸ்திரம், தாவர சாஸ்திரம், ரசாயனசாஸ்திரம், பௌதிக சாஸ்திரம் முதலியனவாம். தமிழ்மொழியின் வளர்ச்சியைக் கருதிய அரிய செய்திகளும் தொடர்ச்சியாக வரும்; இக்காலத்தில் பரவிவரும் ஆகாய விமானம், மின்னெளி, கம்பியில்லாத் தந்தி, ஒலிபரப்புங் கருவி முதலிய புதிய செய்திகளையும் உடன்கொண்டு இது வெளிவரும்" என்று குறிப்பிட்டுள்ளார். (௩௪அ)

## 223. பிரதாப விகடன் - 1933

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 4. 1934 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் (சிமுக ஆண்டு மாசித்திங்கள்.)

ஆசிரியர்: ஏ. என். இராமமூர்த்தி. டிம்மியளவுப் பக்கம் 64.

இவ்விதழ் விகடக் கதைகளையும் செய்திகளையும் படங்களையும் வெளியிட்டு மக்களை மகிழ்ச்சிக் கடலுக்குள் அமிழ்த்தவேண்டுமென்பதையே தன்னுடைய நோக்கமாகக் கொண்டு வெளிவந்து சிலகாலம் உலாவியது. இதில் விகடப்படங்களும் செய்திகளும் மிகுதியாகக் காணப்பெறுகின்றன. (௩௪௯)

## 224. பொன் மலர் - 1933

பார்வைக்குக் கிடைத்தது: சிமுக புரட்டாசி (1933 செப்டம்பர்) மாலை—1. மலர் 2.

ஆசிரியர் : வீ. துரைசாமி முதலியார். புதுவை செங்குந்தர் தெற்கு வீதியில் இருந்து வெளியாகியது செகநாதம் அச்சகத்திற் பதிப்பிக்கப்பட்டது.

டிம்மி அளவுப்பக்கம் 24. ஆண்டுக் கட்டணம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் நாட்டில் கல்வியை வளர்க்கவேண்டும் என்னும் நோக்கத்தையே முதன்மையாகக் கொண்டு வெளியாகியது. சங்கநூல் விளக்கம், பழந்தமிழ்ப் புலவர் வரலாறு முதலிய பல கட்டுரைகள் இதழில் வெளியாகியுள்ளன. "பொன் மலர் நாற்ற முடைத்து" என்பது குமரகுருபரர் திருவாக்கு. (௩௫௦)

## 225. ரிக் வேதம் - 1933

பார்வைக்குக் கிடைத்து: அஷ்டகம் 1. அத்தியாயம் 5. 1933 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள்.

ஆசிரியர்: சிவத்தியாநாநந்த மஹரிஷி. சென்னை நூர்சகான் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 22 × 14 செ.மீ., பக்கங்கள் 66. தனியிதழ் விலை ரூபா ஒன்று.

இருக்குமறையைத் தமிழில் மொழிபெயர்த்துத் திங்களுக்கொரு புத்தகமாக வெளிப்படுத்தப்பட்டது. மறைக் கருத்துக்கள் தமிழில் பாடல்களாக இயற்றப் பட்டன. பாடல்களுக்குப் பொருளும் எழுதி வெளியிடப் பட்டது. (௩௫௧)

## 226. வைதிக மத தீபிகை - 1933

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. (1933).

ஆசிரியர்: எஸ். வாசுதேவாச்சாரியார் பி.ஏ., எல்.டி. சென்னை கே. ஆர். அச்சகத்தில் அச்சிடப்பட்டுச் சைதாப் பேட்டை சத்வித்யா சபையினரால் வெளியிடப்பெற்றது.

அளவு: $24 \times 16\frac{1}{2}$ செ. மீ., பக்கம் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் விலை அணா ஐந்து.

இவ்விதழ் வைதிகமதக் கோட்பாடுகளை நிலைநிறுத்தும் பொருட்டும் மக்களுக்கு அறிவுறுத்தும் பொருட்டுந் தோன்றியது. வேதாந்தச் செய்திகள் மிகுதியாக வெளிவந்தன. ஸ்ரீவிசிட்டாத்வைத ஸித்தாந்தம், பாகவத ஸம்பிரதாயம், தர்மசாஸ்த்ரம் முதலிய பலகட்டுரைகள் இவ்விதழில் வெளிவந்தன. (௯௫௨)

## 227. ஆதிராவிட மித்திரன் - 1934

பார்வைக்குக் கிடைத்து: ஆரம் 1. முத்து 2. பவ ஆண்டு சித்திரைத்திங்கள் (1934 மே).

ஆசிரியர்: ஆர். இராசகோபால். சென்னை இராயப்பேட்டையில் கணபதி நாயக்கருடைய யூனிவர்சல் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் ஆயிரம் விளக்கில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: $20 \times 14$ செ. மீ., பக்கங்கள் 29. தனி இதழ் அணா ஒன்று. ஆண்டுக்கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ ஆதி திராவிடர்களுடைய முன்னேற்றத்தைக் கருதிவெளியிடப்பட்டது. ஆதிதிராவிடர் முன்னேற்றம் பற்றிய கட்டுரைகளை யன்றிப் பிறவகையான கட்டுரைகளும் இவ்விதழில் வெளியாயின. (௯௫௯)

## 228. ஆத்திக மித்திரன் - 1934

பார்வைக்குக் கிடைத்து: மலர் 1. இதழ் 1. 1-10-1934.

ஆசிரியர்: வி. கிருட்டிணமூர்த்தி பாகவதர். சேலம் மாவட்டம் தருமபுரி சஞ்சீவி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $21 \times 14$ செ. மீ., பக்கங்கள் 36. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் தென்னாட்டில் நாத்திகக் கொள்கை தலை தூக்கிய சமயத்தில் அதனைப் போக்குதற்காகத் தோன்றி நாட்டிலே கடவுட் பக்தியை வளர்ப்பதற்காக உழைத்தது. மேலும் வீடுபேற்றை அடைவதற்கான சிறந்த கட்டுரை களும் இதில் வெளியாயின. (௩௫௪)

## 229. கொங்கு மலர் - 1934

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 4. இதழ் 4. ஈசுவர ஆண்டு ஆடித்திங்கள் (1-6-1937).

ஆசிரியர்: கோவைக்கிழார் சி. எம். இராமச்சந்திரன் செட்டியார். கோவைத் தமிழ்ச் சங்கத்தின் வெளியீடாகிய இதனை என். ஏ. சோமசுந்தரஞ் செட்டியார் கோவை ஸ்டார் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிட்டார்.

டிம்மி எட்டுப்பக்க அளவு. பக்கம் 40. தனி இதழ் விலை 0-2-0 (12 காசு) ஆண்டுக்கட்டணம் ரூபா1-8-0.

இவ்விதழின் நோக்கம் கொங்கு நாட்டின் பழைய வரலாறுகள் செய்திகள் முதலியவைகளை வெளிப்படுத்து வதும் புதிதாகக் கொங்கு நாட்டில் நிகழும் நிகழ்ச்சிகளை உலகுக்கறிவிப்பதும் ஆகும். நான்காண்டுகள் வரையில் நல்ல பணிசெய்த இவ்விதழ் மேலும் எவ்வளவு காலம் நடைபெற்றதென்பது தெரியவில்லை. இலக்கியம், வரலாறு, கலை, சமயம், ஆராய்ச்சி முதலியவைகளில் இது கருத்துச் செலுத்தியது. (௩௫௫)

## 230. சங்கீத அபிமானி - 1934

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 2. இதழ் 8. 1935 ஆகஸ்டு.

ஆசிரியர்: எம். வைத்தியநாத சாமி. பி ஏ., எல் டி. சென்னை சுங்குராம செட்டித் தெருவில் உள்ள லிபர்ட்டி அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: 24 × 19 செ. மீ., பக்கங்கள் 32. தனி இதழ் அணா இரண்டு. ஆண்டுக்கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் இசைத் தமிழ் வளர்ச்சிக்கு உழைப்பதற்காகத் தோன்றியது. பார்வைக்குக் கிடைத்த இதழில் கல்பஞஸ்வரம் படும்பாடு, பாட்டை நிறுத்துவதெப்படி? கீர்த்தனைப் பகுதி, சபா விளம்பரங்கள் முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (௩௫௬)

## 231. சித்தர் களஞ்சியம் - 1934

பார்வைக்குக் கிடைத்தது: கதிர் 1. கலை—1. பவ ஆண்டு ஐப்பசித் திங்கள் (1934 அக்டோபர்).

ஆசிரியர்: டாக்டர் கே. வேலன். திருவல்லிக்கேணி சோல்டன் கம்பெனி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 23 × 18 செ. மீ., பக்கங்கள் 32.

இவ்விதழ் சித்தர்களுடைய மருத்துவமுறை, காலக் கணிதம் முதலியவைகளை நாட்டு மக்கட்கு அறிவுறுத்துதற்காகத் தோன்றியது. பயன் தரத்தக்க பல மருத்துவ முறைகள் இதிற் கூறப்பட்டுள்ளன. மறைமுகமாக உள்ள மருத்துவச் செய்திகளை வெளிக்குக் கொண்டு வருவதில் இவ்விதழ் முன்னணியில் நின்றது. (௩௫௭)

## 232. மார்க்க பந்து - 1934

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 3. பகுதி 2. தாது ஆண்டு ஆவணித் திங்கள் (செப்டம்பர் 1936).

திருவல்லிக்கேணி கபீர் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு பி. எஸ். வைத்தியநாத ஐயரால் வெளியிடப்பட்டது.

அளவு: 21 × 14 செ. மீ., பக்கங்கள் 80. தனி இதழ் அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழில் உயரிய கலைகள், வேதசாத்திரங்கள், புராண இதிகாசங்கள், கிராமப்புனருத்தாரணம், சமூக

வாழ்க்கை, நல்லினையாறுகள், திருப்பதிகள் அரி அரபக்தர்கள் ஆகியவைகளைப் பற்றிச் சிறந்த கட்டுரைகள் பல வெளியாயின. (௩௩௮)

## 233. விஜயபாரதி - 1934

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 3. இதழ் 2. தாது ஆண்டு வைகாசித்திங்கள் (1946 சூன்).

ஆசிரியர்: எஸ். துரைசாமி முதலியார். சென்னை பாரதி அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டு வெளியாகியது. விநாயகம் அண்டு கம்பெனியாருடைய இதழ்.

அளவு: $24\frac{1}{2} \times 18\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் அணு ஒன்றரை.

இவ்விதழ் இலக்கியம், சமயம் முதலியவைகளைப் பற்றிய கட்டுரைகளையும் கதைகளையும் நவீனங்களையும் வெளியிட்டுத் தமிழ் நாட்டிலே மறுமலர்ச்சியை உண்டாக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றி மூவாண்டுகள் பணிபுரிந்தது. சு. அ. இராமசாமிப் புலவர் முதலிய பலர் இவ்விதழில் கதைகளும் கட்டுரைகளும் நகைச் சுவைப் பகுதிகளும் எழுதினர். (௩௩௧)

## 234. சித்தன் - 1935

பார்வைக்குக் கிடைத்தது: மாலை 1. மணி 4. 1935 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள்.

ஆசிரியர்: சி. பி. சாமி.

டபுள் கிரௌன் அளவுப்பக்கம் 32. ஆண்டுக் கட்டணம் ரூபா ஒன்று.

பழநியில் அச்சிடப்பட்டு வெளியாகியது. மருத்துவக் கலையை வளர்க்கத் தோன்றிய இவ்விதழ் முதலில் டபுள் கிரௌன் அளவிலும் பிறகு இராயல் அளவிலும் வெளியாகிச் சில ஆண்டுகள் நடைபெற்றன. சித்த வைத்தியம்

அஸ்வினிகள் வித்தை கற்ற வரலாறு முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. (௩௬௦)

## 235. சீவரத்தினம் - 1935

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 3. ஏப்ரல் 1935.

ஆசிரியர்: தங்கப்பழம். சாயர்புரம் பிரிண்டிங் பிரசில் அச்சிட்டுச் சாயர்புரத்திலிருந்து வெளியிடப்பட்டது.

அளவு : 24×19 செ. மீ. பக்கங்கள் 28. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இவ்விதழ் உயர்ந்த மணியனைய கட்டுரைகளையும், கதைகளையும் மக்கட்களிக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றியது. உண்மை விளக்கம், செய்யுள் நயம், குடும்ப வைத்தியம், மாணவர் பகுதி, கட்டுக் கதைகள், பொதுச் செய்திகள் முதலியவைகளைக் கொண்டிருக்கிறது. (௩௬௧)

## 236. தாயகம் - 1935

பார்வைக்குக் கிடைத்தது : கதிர் 1. மணி 1. யுவ ஆண்டு கார்த்திகைத்திங்கள் (1935).

ஆசிரியர் : எஸ். அருணாசலம். துறையூர் பெரிய கடை வீதி ஜனோபகார அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 14 செ. மீ., பக்கங்கள் 56. தனியிதழ் அணா மூன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இவ்விதழின் கொள்கையைப் பற்றி ஆசிரியர், "கல்வி, கைத்தொழில், சுகாதாரம், விவசாயம் முதலியவற்றை மேன்மைப்படுத்தவும், தெய்வ வழிபாட்டைச் சீர்ப்படுத்தவும், உலக நிகழ்ச்சிகளை மக்கள் உணரவும், பக்தி நிறைந்த வரலாறுகளை வெளியிடவும், பெண்மக்கள்உலகத்தைப் பெரிதும் மேன்மைப்படுத்தவும், சாதி வேற்றுமை கருதாது

எல்லோரையும் சகோதரராகப் பாவிக்கும் எண்ணத்தை உண்டாக்கவும், இலங்கை இந்தியரின் துயரத்தைப் போக்கவும் தாயகம் தலை சிறந்து பணியாற்றும்" என்று குறிப்பிட்டுள்ளார். (௩௬௨)

## 237. பாலசிந்தாமணி - 1935

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 12. (*1-6-1936*).

ஆசிரியர் : எஸ். எம். பக்தவத்சலம். மலைச்சாலையில் உள்ள பி. என். அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

ராயல் அளவுப் பக்கம் 26. தனி இதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் சிறுவர் சிறுமியர்களுக்குப் பயன்பட வேண்டும் என்னும் நோக்கத்தோடு வேடிக்கையான கதைகள், பாடல்கள், செய்திகள் முதலியவைகளைத் தாங்கி வெளி வந்து கொண்டிருந்தது. (௩௬௩)

## 238. மணிமாலை - 1935

பார்வைக்குக் கிடைத்தது : கோவை 1. மணி 3. பவ ஆண்டு பங்குனித்திங்கள். (*8—4—1935*).

ஆசிரியர்: கா. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., எம்.எல். திருநெல்வேலி மணிவாசக மன்றத்திற்காக டீ. ஆர். சுப்பையா பிள்ளையால் தென்காசி மீனாட்சி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $18\frac{1}{2} \times 12$ செ. மீ., பக்கங்கள் 172. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஐந்து. ஆயுட் கையொப்பம் ரூபா நூறு. பாதுகாப்பாளர் தொகை ரூபா ஆயிரம். தனியிதழ் விலை அணா எட்டு.

இவ்விதழ் பொதுமறை விளக்கம், பத்திரிகையாராய்ச்சி, இலக்கிய மாலை, இந்தியச் சட்டக்கோவை,

உலகியல் மாலே, ஆங்கிலம் முதலிய ஏழு பிரிவுகளாக வெளியாயது. பத்திரிகையாராய்ச்சியில் பல பத்திரிகைகளின் செய்திச் சுருக்கமும் வெளியாகியுள்ளது. (௩௬௪)

## 239. ஸ்ரீதேசிக ஸ்ரீஸூக்தி ஸம்ரக்ஷணி - 1935

பார்வைக்குக் கிடைத்தது : ஸம்புடம் 3. சஞ்சிகை 1 தாது ஆண்டு தைத் திங்கள் (1937 ஆம் ஆண்டு சனவரித் திங்கள்).

ஆசிரியர் : ஏ. வி. கோபாலாசாரியர், எம்.ஏ., பி.எல். திருவரங்கத்திலிருந்து ஸ்ரீ தேசிக ஸ்ரீஸூக்தி ஸம்ரக்ஷண சபையாரால் வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 14 செ. மீ., பக்கங்கள் 34 . ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தனியிதழ் அணு இரண்டு.

வைணவ சமய நெறியைத் தமிழ் உலகிற்குப் புலப்படுத்தத் தோன்றியது. இவ்விதழ் பெரும்பாலும் வடமொழி நூல்களே மணிப் பிரவாள நடையில் மொழி பெயர்த்து வெளியிடப்பட்டன. இடையே சம்ஸ்க்ருத எழுத்துக்களே மிகுதியாகக்கொண்ட இதழாகிய இது சமஸ்கிருதம் உணர்ந்த வைணவர்களுக்கு நூற்பொருள் உணர நல்ல வாய்ப்பாக இருந்தது. (௩௬௫)

## 240. ஹிந்து தர்மம் - 1935

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 1. யுவ ஆண்டு ஆனித்திங்கள் (1935 சூன்).

ஆசிரியர்: இ. எஸ். அரங்கசாமி. சென்னே ஒரிசனல் வேல் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு : $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ. பக்கங்கள் 52. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் ஒன்றே காலணு.

இவ்விதழ் இந்து தருமக்கொள்கைகளைப் பரப்புவதற்காக வெளியிடப்பட்டது. முதல் இதழில் இந்துக்களும் குருகுலக் கல்வியின் அவசியமும், ஆரிய சமாசம் என்பது என்ன? சாதியின்கொடுமை முதலிய பலகட்டுரைகள் வெளியாகியுள்ளன. (௩௬௬)

## 241. அறிவு - 1936

பார்வைக்குக் கிடைத்தது : மாலை 1. மணி 1. 1936 ஆம் ஆண்டு சனவரித்திங்கள்.

ஆசிரியர்: அ. இராகவன். திருநெல்வேலி மாவட்டத்தில் நாசரேத்தில் சத்தியா பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது.

அளவு : 21 × 14 செ. மீ., பக்கங்கள் 52. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

ஆசிரியர் இதழின் நோக்கத்தைப் பற்றி, "அறிவு பொதுவாக மனித சமூகம் மூடநம்பிக்கைகளையும் குருட்டுப் பழக்க வழக்கங்களையும் ஒழித்து அறிவு வளர்ச்சி பெற்று இன்புற்று வாழ்வதற்கே பெரிதும் பாடுபடும். என்றாலும் தாழ்த்தப்பட்டோர், பெண்கள் முதலியோர்களின் உரிமைக்கும், தமிழ்மொழியின் வளர்ச்சிக்கும் தன்னாலியன்ற தொண்டினைத் தவறாது செய்துவரும்" என்று குறிப்பிட்டுள்ளார். (௩௬௭)

## 242. அன்னைபாரத தேவி - 1936

பார்வைக்குக் கிடைத்தது : ரோசா 1. இதழ் 1. (1-11-1936).

ஆசிரியர்: பாண்டுரங்கம். திருச்சிராப்பள்ளி ஸ்ரீ நிலையம் அச்சகத்தில் அச்சிட்டு உறையூரில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு : 21½ × 14 செ. மீ., பக்கங்கள் 116. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் மத ஆராய்ச்சி, தமிழ்மொழி வளர்ச்சி, அரசியல் அறிவு, வியாபாரம், கைத்தொழில் முயற்சிக்கான அறிவு வளர்ச்சி, உடல் நல முன்னேற்றம், கிராம முன்னேற்றம், பெண்கள் முன்னேற்றம், தேசீய விடுதலை, தீண்டாமை விலக்கு, மதுவிலக்கு, ஆகிய பல வகையான செய்திகளைத் தாங்கி வந்ததோடன்றி விநோதச் செய்திகள், கற்பனைக் கதைகள் முதலியவைகளையும் தாங்கிச் சீரிய முறையில் வெளி வந்தது. (ரு௯அ)

## 243. இந்து தருமம் - 1936

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 6, 7. யுவ ஆண்டு கார்த்திகை, மார்கழி (1936 டிசம்பர்).

ஆசிரியர்: ர. எஸ். அரங்கசுவாமி. சென்னை திருவல்லிக்கேணி இந்திப் பிரசார அச்சுக்கூடத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 13 செ. மீ. பக்கங்கள் 40. தனியிதழ் அணு ஒன்றே கால். ஆண்டுக்கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ இந்து சமயத்தின் கொள்கையை யாண்டும் பரப்புவதற்குத் தோன்றியது. தேவவியாக்கியானம், கர்ம சித்தாந்தமும் புனர்சன்மமும், இந்து வேதம், தென் அமெரிக்காவில் சமாசப் பிரசாரம் முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகியுள்ளன. (ரு௯௯)

## 244. கதாநிதி - 1936

பார்வைக்குக் கிடைத்தது : தொகை 2. வகை 4. 1937 டிசம்பர்.

ஆசிரியை : திருநெல்வேலி. ஞா. ப. சதாநந்தம் அம்மாள். ஆசிரியையால் தர்மபுரி சஞ்சீவினி அச்சுக்கூடத்தில் அச்சிட்டுச் சேலத்தில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு : 20×14 செ. மீ. பக்கங்கள் 56. தனி இதழ் அணு • இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் கதை முதலியவைகளையும் கட்டுரைகளையும் மக்கட்குப் பயன்படுமாறு வெளியிட வேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியாகியது. பார்வைக்குக் கிடைத்த இதழில், சர்வதேச சங்கம், மதுவிலக்கு, சங்க நூல்களும் கம்பரும், புதிய அரசியல் அமைப்பு, உலக விநோதம், தாலியின் தத்துவம் முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (௩௭0)

## 245. தமிழ் மலர் - 1936

பார்வைக்குக் கிடைத்தவை : இதழ் மாலை 1. மலர், 1, 2, 3, 4, 5, 6.

ஆசிரியர்: மறைத்தலைவனார். வேதநாயகம் என்னும் இயற்பெயருடைய இவர் இரண்டொரு மலர் வெளியிட்டு நீங்கப் பின்னர் சி. சீநிவாசன் என்பவர் ஆசிரியரானார். 1936 ஆம் ஆண்டு இராசேசுவரி அச்சகத்தில் சண்முகம் பிள்ளை என்பவரால் அச்சடிக்கப்பட்ட இவ்விதழ் ஆறு திங்கள் நடந்து பிறகு மறைந்து போயது.

தமிழ் வளர்ச்சிக்கான கட்டுரைகளை வெளியிட்டுத் தமிழ்த்தொண்டு செய்ய வேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றிய இவ்விதழ் தக்க அடிப்படையைப் பெறுமையால் மறைந்தொழிந்தது. டிம்மி அளவுப் பக்கம் 32 கொண்ட இதற்கு ஆண்டுக் கட்டணம் ரூபா ஒன்றாக இருந்தது. சு. அ. இராமசாமிப் புலவர் சில திங்கள்கள் உதவியாசிரியராக அமர்ந்து இதழைச் சீரிய முறையில் ... ரர். (௩௭௧)

## 246. நவலட்சுமி - 1936

பார்வைக்குக் கிடைத்தது : ஆரம் 10. முத்து 2. விய ஆண்டு ஜூனித்திங்கள் (1946 ஜூலை).

ஆசிரியர் : பி. எம். ஆர். முத்துச்சாமி ரெட்டியார் ; கொழும்பு பேட்டை அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு : $21 \times 13\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தனியிதழ் விலை 12 சதம்.

இவ்விதழ் மக்களின் பொழுது போக்கு இதழாகத் தோன்றிக் கதை கட்டுரை முதலியவைகளை வெளிப்படுத்தியது. கிடைத்துள்ள இதழில் பல கட்டுரைகளும் கதைகளும் காணப்படுகின்றன. (௩எ௨)

## 247. மாதர் மறுமணம் - 1936

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 3. இதழ் 3. வெகுதானிய ஆண்டு ஐப்பசித்திங்கள்.

ஆசிரியர் : மு. மரகதவல்லி. காரைக்குடி குமரன் அச்சகத்தில் முருகப்பா அவர்களால் அச்சிடப்பட்டு வெளியாகியது.

டிம்மி அளவுப்பக்கம் 44. தனிப்பிரதி ஒன்றரையணு ஆண்டுக் கட்டணம் ரூபா ஒன்று.

இவ்விதழ் மாதர் மறுமணத்தை நாட்டில் பரப்பிக் கைம்பெண்களின் துன்பத்தைத் துடைக்கவேண்டும் என்பதையே முதன்மையான குறிக்கோளாகக்கொண்டு வெளியாகியது. மு. மரகதவல்லியம்மையாராகிய ஆசிரியர் சொ. முருகப்ப செட்டியாரைக் கைம்மையில் கலப்பு மணஞ் செய்துகொண்டவர். கைம்மை மணக்கட்டுரைகளையே மிகுதியாகக் கொண்டது இவ்விதழ். (௩எ௩)

## 248. ஸ்ரீராமாநுஜ சித்தாந்த வைஜயந்தீ – 1936

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 2. பகுதி 6. ஈசுவர ஆண்டு சித்திரைத்திங்கள் (1937 ஏப்ரல்).

ஆசிரியர்: வடகரை ராமாநுஜாச்சாரியார். ஆசிரியரால் சென்னை லிபர்ட்டி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 44. தனி இதழ் அணா மூன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றே முக்கால்.

இவ்விதழ் வைணவ சமயக்கோட் பாடுகளைப் பரப்புவதையே குறிக்கோளாகக் கொண்டு வெளியிடப்பட்டது. சித்திரை மாதத்தின் சிறப்பு, சீராரும் சித்திரையில் சித்திரை நாள், துன்பற்ற மதுரகவி முதலிய கட்டுரைகள் பார்வைக்குக் கிடைத்த இதழில் வெளியாகியுள்ளன.

(௩௭௪)

## 249. கிரகலட்சுமி - 1937

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 2. பிப்ரவரி 1937.

ஆசிரியர் : எஸ். கிருட்டிணன், பி. ஏ. ஆனர்ஸ். சென்னை எழும்பூரில் உள்ள லோத்ரா அச்சகத்தில் அச்சிட்டு டாக்டர் கே.என். கேசரி என்பவரால் வெளியிடப்பட்டது.

அளவு : $24 \times 18$ செ. மீ., பக்கங்கள் 80. தனி இதழ் அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் பெண்கள், கல்வி, அரசியல், மத பொருளாதார சமூக முன்னேற்றத்திற்காக எல்லாவழிகளிலும் சேவை செய்யத் தோன்றியது. உயர்ந்த தாளில் அச்சிடப்பட்டது. அழகான பல ஓவியங்களும் மூவர்ணப்படங்களும் இதில் வெளியாயின. மாதர்களுக்கென்றே தோன்றிய இவ்விதழ் எல்லோருடைய உள்ளத்தையுங் கவர்ந்து விளங்கியது.

(௩௭௫)

## 250. குடிநூல் - 1937

பார்வைக்குக் கிடைத்தது: கட்டு 2. சிட்டம் 2. (15-10-1938) தீபாவளிமலர்.

ஆசிரியர்: கோவை. அ. அய்யாமுத்து. எஸ். என். தங்கவேலுவால் சென்னை சண்டே டைம்ஸ் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

ராயல் அளவுப்பக்கம் 48. தனி இதழ் அணு 1. ஆண்டுக் கட்டணம் ரூபா ஒன்று.

தமிழ் நாட்டின் கதர் வளர்ச்சிக்காக இவ்விதழ் அகில பாரத சர்க்கா சங்கத்தின் ஆதரவில் நடைபெற்றது. கதர் வளர்ச்சி ஒன்றில் மட்டும் இவ்விதழ் கருத்தைச் செலுத்தாமல் நாட்டுமக்களுக்குப் பயன் தரும் பல செய்திகளையும் வெளியிட்டு நல்ல தொண்டு செய்தது. நாடு முழுவதும் கதர் பரவுதற்கு இவ்விதழ் செய்த தொண்டு போற்றுதற்குரியது. நூல் நூற்க வேண்டிய கட்டாயத்தையும் மக்களுக்கு வற்புறுத்திக் கூறியது. (௩௭௬)

## 251. சோதி - 1937

பார்வைக்குக் கிடைத்தது: சுடர் 1. கதிர் ஒன்று முதல் 12 வரை. 1937 ஆகஸ்ட் முதல் 1948 ஜூலைவரை.

ஆசிரியர்: வெ. சாமிநாதசர்மா. இரங்கூன் சோதி பப்ளிஷிங் கம்பெனி லிமிடெட்டால் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 24 × 18 செ.மீ., பக்கங்கள் 104. ஓராண்டுக் கையொப்பம் ரூபா நான்கு.

இவ்விதழைத் தொடங்கியபோது ஆசிரியர் தம் இதழின் கொள்கைகளைத் தலையங்கத்தில் விரிவாக எழுதியுள்ளார். அதனில் ஒரு பகுதியை அடியிற் காண்க: "பொதுவாக இலக்கியப் பூஞ்சோலையிலே யாகட்டும், தமிழன் தலை நிமிர்ந்து நடக்கவேண்டும்; அது மட்டும்

போதாது. பிறர்க்கு வழிகாட்டவும் வேண்டும். இதுவே நமது கலையாத கனவு; மாறாத இலட்சியம். சுருங்கக் கூறுமிடத்து, 'சோதி' இறந்தகாலத்தோடு நிகழ்காலத்தைப் பிணைக்குஞ் சங்கிலி. நிகழ்காலத்திலிருந்து வருங்காலத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும் ஏணி; உலக வீரர்களின் யுத்தமேடை; காவிய ரசிகர்களின் உத்தியான வனம்; நம்மை ஒப்பிட்டுக் காட்டும் தராசு; முன்னேற்ற வழிகளையெல்லாம் சுட்டிக்காட்டும் கலங்கரை விளக்கம்" என்று குறிப்பிட்டுள்ளார். (௩௭௭)

## 252. பாலர் பத்திரிகை - 1937

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 1. 1937. ஆக்டோபர்.

டி. இராமாநுசத்தால் சென்னை அண்ணா பிள்ளை தெரு வீ. சுந்தரம் ஐயருடைய கேசரி பிரிண்டிங் அச்சுக் கூடத்தல் அச்சிட்டுக் கோடம்பாக்கம் டெயிலர்ஸ் எஸ்டேட்டில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 18 × 12 செ.மீ., பக்கங்கள் 20. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

சிறுவர்களுக்குக் கதையைத் திங்கள் தோறும் வெளிப்படுத்த வேண்டுமென்பதே இவ்விதழின் நோக்கம். இதில் இரண்டொரு கதைகள் எல்லாப்பக்கங்களிலும் படங்களோடு வெளியாகியுள்ளன. (௩௭௮)

## 253. வகுள மாலை - 1937

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 1. தாது ஆண்டு தைத்திங்கள் (சனவரி 1937).

ஆசிரியர்: ஆர். கேசவ ஐயங்கார் எம். ஏ., பி. எல். வழக்கறிஞர். சென்னை திருவல்லிக்கேணி இலட்சுமிகாந்த அச்சகத்தில் ப. ரெ. திருமலை ஐயங்காரால் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு $21\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 16. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் அணு ஒன்று.

அந்நாளில் சென்னை திருவல்லிக்கேணியில் வைணவ அன்பர்கள் பலர் ஒன்று கூடித் "திருவல்லிக்கேணித் தமிழ்ச் சங்கம்" என்னும் பெயரோடு சங்கம் ஒன்றைத் தோற்றுவித்து நடத்தினர். அதன் ஆதரவில் திங்கள் இதழ் ஒன்று வெளிப்படுத்தவேண்டும் என்னும் முடிவுப்படி இவ்விதழ் வெளியிடப்பட்டது. இவ்விதழில் வைணவ சமயத் தொடர்பான கட்டுரைகள் பல வெளியாகியுள்ளன. (ஙஎக)

## 254. வசீகரன் - 1937

பார்வைக்குக் கிடைத்தஇதழ், மாலை 1. மலர் 6. 1937 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள்.

ஆசிரியர்: என். கிருட்டிண மூர்த்தி. இது சிதம்பரம் என்னும் திருத்தில்லையில் இருந்து வெளியாகியது.

டிம்மியளவுப் பக்கம் 32. தனி இதழ் அணு ஒன்று.

இவ்விதழை மக்கள் மனம் விரும்பி ஏற்றுப்படிக்க வேண்டும் என்னும் நோக்கத்துடன் வெளியிட்டார் ஆசிரியர். விகடக்கட்டுரைகள் கதைகள் முதலியன இதில் வெளிவந்தன. ஏறக்குறைய ஓராண்டு நடைபெற்றிருக்கலாம். (ஙஅ0)

## 255. காங்கிரஸ் பேரிகை - 1938

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. வெகுதானிய ஆண்டு ஆனித் திங்கள். 1938.

ஆசிரியர்: ஓ. வி. அளகேசன். நிர்வாக ஆசிரியர்கள்: சி. என். முத்துரங்க முதலியார், எம். பக்தவத்சலம், டாக்டர் பி. எஸ். சீநிவாசன், தி. மு. ஆறுமுகம் ஆகியோர். இது செங்கற்பட்டு மாவட்ட காங்கிரஸ் கமிட்டியின் ஆதரவில் சென்னை மாடல் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பட்டு ஆசிரியரால் மயிலாப்பூரில் இருந்து வெளியிடப் பட்டது.

அளவு : 24 x 18 செ.மீ., பக்கங்கள் 16. தனி இதழ் அணு ஒன்றரை. ஆண்டுக்கையொப்பம் ரூபாய் ஒன்று.

காங்கிரஸ் கொள்கையை நாடெங்கும் பரப்பித் தேச விடுதலைக்குப் பாடுபட வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டு இவ்விதழ் வெளியாகியது. காங்கிரசைப் பற்றிய செய்திகளே இதில் மிகுதியாக வெளியாயின. (ந-அக)

## 256. கிராமப் பஞ்சாயத்துப் பத்திரிகை - 1398

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் ஐந்து (1938 ஜூன்)

ஆசிரியர்கள்: ஆனரபிள். வி. இராமதாஸ் பந்துலு, டி. ஏ. இராமலிங்கஞ் செட்டியார், வி. விய்யன்ன. இவ்விதழ் சென்னை மாகாணப் பஞ்சாயத்துப் போர்டுகளின் யூனியனில் இருந்து வெளியாகியது. சென்னைத் திருவல்லிக்கேணியில் இருந்து வெளியிடப்பட்டது. சென்ட்ரல் கோவாபரேடிவ் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.

கிராமப் பஞ்சாயத்துக்கான செய்திகளையும், நிகழ்ச்சிகளையும் வெளியிடுதற்காகவே இவ்விதழ் தோன்றிப் பணி புரிந்தது. பஞ்சாயத்துக்களைப் பற்றிய செய்திகளெல்லாவற்றையும் மக்கட்குணர்த்தியது. (ந-அஉ)

## 257. சில்பஸ்ரீ - 1938

பார்வைக்குக் கிடைத்தது: இரண்டாவது வால்யூம் மார்கழிப் பகுதி பிரமாதி ஆண்டு (15-12-1939)

ஆசிரியர் : கா. வே. இராமச்சந்திரன்.

அளவு: 24 x 18 செ. மீ., பக்கங்கள் 80. தனி இதழ் அணு ஆறு.

இவ்விதழ், இலக்கியம், கீதம், நாட்டியம், சிற்பம், காவியம், ஓவியம் முதலிய பலகலைகளைப் பழைய நூல்களில் இருந்தும் சிலாசாசனங்களில் இருந்தும் எடுத்து விளக்கி

மக்களுக்குக் கூறுமாறு தோன்றியது. இதனில் வெளிவந்த படங்களும் கட்டுரைகளும் மக்களாற் பெரிதும் பாராட்டப் பெற்றன. நல்லதாளில் அழகான முறையில் வெளியிடப் பெற்ற இதழ்களில் இதுவும் ஒன்று. (நூஅந)

## 258. திருவிளக்கு - 1938

பார்வைக்குக் கிடைத்தது : ஒளி *1*. சுடர் *1*. வெகுதானிய ஆண்டு கார்த்திகைத்திங்கள் (*1938* டிசம்பர்)

ஆசிரியர் : கு. மு. இராசரத்தின முதலியார். சென்னை எஸ். எஸ். அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வேளாள சங்கத்தாரால் வெளியிடப்பட்டது.

அளவு: $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் *32*. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று. தனியிதழ் விலை அணா இரண்டு.

"தமிழ்மொழி, கலை, நாகரிகம், பண்பு முதலியவை களைச் சுவை நிரம்பிய கட்டுரைகளாலும், சிறுகதைகளாலும் துலங்கச் செய்வது, பழைய நூல்களை ஆராய்ச்சி செய்து பண்டைத் தமிழ்மக்களை முன்னேறும்படி செய்வது" முதலியன இதழின் நோக்கம் என்று ஆசிரியர் குறிப் பிட்டுள்ளார். பல அறிஞர்கள் வாழ்த்துக் கூறியுள்ளனர். நல்ல கட்டுரைகள் சில வெளியாகியுள்ளன. (நூஅச)

## 259. வைத்திய சந்திரிகா - 1938

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி *20*. பகுதி*11*. விளம்பியாண்டு ஐப்பசி, கார்த்திகைத்திங்கள் (*1958* நவம்பர்)

ஆசிரியர் : பாண்டித. மெ. சுந்தரராசாச்சார்யர். சீரங்கம் ஸ்ரீவிலாசம் அச்சகத்தில் அச்சிட்டு. எஸ். வி. இராதாகிருட்டிண சாத்திரியால் வெளியிடப்பட்டது.

அளவு : 29 × 14 செ. மீ., பக்கங்கள் 28. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஐந்து.

இவ்விதழ் தமிழ்நாடு ஆயுர்வேத மண்டலத்தில் இருந்து வெளியிடப்பட்டது. ஆயுர்வேதத்தை நாடெங்கும் பரப்ப வேண்டுமென்பதே இதனுடைய கொள்கை. பால சிகித்சா, வாசாபானகம், காயகல்பம், இரசாயன முறை முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகின. (ரு அரு)

## 260. கிராமதூதன் - 1939

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 4. இதழ் 4. சித்திரபானு ஆண்டு சித்திரைத்திங்கள் (1942 ஏப்ரல்)

கௌரவ ஆசிரியர் : சிவில்லிபுத்தூர் இரா. கு. நல்ல குற்றாலம் பிள்ளை. மதுரை எக்ஸெல்ஸியர் அச்சகத்தில் அச்சிட்டு இ. மா. கோபாலகிருட்டிணக் கோனால் வெளியிடப் பட்டது.

இராயல் அளவுப்பக்கம் 32. தனியிதழ் விலை அணா இரண்டு (காசு12). ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

சிற்றூரில் வாழும் மக்களுக்குப் பயன்படத்தக்க பயிர்த் தொழில், சிற்றூரைச் சீராக அமைத்துப் பாதுகாத்தல் ஆகிய துறைகளில் அறிவுரை கூறிச் சிற்றூர் மக்கட்குத் தொண்டுபுரிதலையே நோக்கமாகக் கொண்டு இவ்விதழ் வெளியாகியது. (ரு அசு)

## 261. சக்தி - 1939

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 18. இதழ் 2. விசய ஆண்டு கார்த்திகைத் திங்கள் (1953 டிசம்பர்)

ஆசிரியர்: வை. கோவிந்தன். ஆசிரியரால் சென்னை ஏஷியன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $27\frac{1}{2} \times 20\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் அணா நான்கு

சிறந்த பல கட்டுரைகளைத் திங்கள் தோறும் வெளியிட்டுத் தமிழ்த்தொண்டாற்ற வேண்டுமென்பதனையே நோக்கமாகக்கொண்டு தோன்றிய இவ்விதழில் உயர்ந்த கட்டுரைகளும் மொழி பெயர்ப்புக் கட்டுரைகளுமே மிகுதியாக வெளி வந்தன. சக்தி சக்திமிகுந்த இதழாக விருந்தும் நின்றுவிட்டது. (௩௭௭)

## 262. சங்கநாதம் – 1939

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 12. விக்கிரம ஆண்டு ஆனித்திங்கள் (1940 ஜூலை)

ஆசிரியர் : ரா. கிருட்டிணசாமி. சென்னை மலைச்சாலை தேவி அச்சகத்தில் எஸ். கிருட்டிணமூர்த்தி என்பவரால் அச்சிடப்பட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: $23\frac{1}{2} \times 18$ செ. மீ., பக்கங்கள் 64. தனி இதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் காங்கிரஸ் கொள்கையை மேற்கொண்டு நின்று நாட்டுக்குத் தொண்டு செய்ய வெளியாயிற்று. நாடு விடுதலை பெற்றுச் சுயாட்சியைப் பெறுவதற்குத் தன்னால் இயன்ற வரையில் தொண்டு புரிந்தது. இதில் பல சிறந்த கட்டுரைகள் வெளியாயின. தேசியத் தொண்டர்கட்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஊட்டியது. (௩௭௮)

## 263. ஜனசேவை - 1939

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 2. பிரமாதியாண்டு ஐப்பசித்திங்கள். (1939)

ஆசிரியர்: ஆர். கிருட்டிணமூர்த்தி, உதவி ஆசிரியர்: சி. வி. பத்மநாபன். சென்னைத் திருவல்லிக்கேணி சரஸ்வதி பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு : $24 \times 16$ செ. மீ., பக்கங்கள் 22. தனி இதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் மக்களுக்குத் தொண்டுபுரிய வேண்டுமென்பதையே தன்னுடைய நோக்கமாகக் கொண்டு தோன்றியது. இதழுக்குள்ள பெயருக்கேற்பக் கட்டுரைகளுங் காணப்பெறுகின்றன. கிராம முன்னேற்றம், காந்திஜீ காட்டும் வழி, ஞானக்களஞ்சியம் என்னுந் தலைப்புக்களோடு உள்ள கட்டுரைகள் உண்மையில் பயனளிக்கக்கூடியவை.

(௩-௮௬)

## 264. தமிழணங்கு - 1939

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 4. இதழ் 11. 1941 ஆம் ஆண்டு பிப்ரவரித்திங்களில் வெளியாகியது.

ஆசிரியர் : ஆ. மா. சிவஞானம். ஆசிரியரால் ஆம்பூர் தமிழணங்கு அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

அளவு: 22 × 14 செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றே கால். தனியிதழ் விலை அணா இரண்டு.

இவ்விதழ் தமிழ்மொழியின் வளர்ச்சியை நாடி வெளியிடப்பெற்றது. ஆசிரியர் தமிழறிஞரும் பாவாணரும் ஆவார். தமிழ்ப் புலவர்களின் வரலாறுகள், பொதுவான கட்டுரைகள், அறிந்து கொள்ள வேண்டிய சிறந்த செய்திகள் முதலியன இவ்விதழில் வெளியாயின. ஆசிரியர் பாவாணராதலின் ஒவ்வோர் இதழிலும் தமிழணங்கு வணக்கம் முதலிற்பாடி அதன் தொடர்பாகிய சில செய்யுட்களையும் தாமே இயற்றி வெளியிட்டுள்ளார். தமிழ்நாட்டுப் புலவர் பெருமக்களின் கட்டுரைகள் தமிழணங்கை அழகு செய்தன.

(௩-௯0)

## 265. குயில் - 1940

பார்வைக்குக் கிடைத்தது : குரல் 9. இசை 1. 1948 ஆம் ஆண்டு ஜூன் திங்களில் வெளி வந்தது.

ஆசிரியர் : கனக சுப்புரத்தினம் (பாரதிதாசன்). புதுவை பழநியம்மா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு : $21 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 48. தனி யிதழின் விலை அணா ஆறு.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் தம்முடைய பாடல் களையும் கதைகளையும் வெளிப்படுத்துதற்கு இவ்விதழைத் தொடங்கினர். கவிஞரின் நூல்கள் பல முதலில் இவ் விதழில் வெளிவந்தன. இவ்விதழின் போக்கு அழகாக அமைந்திருந்தமையின் பல இளைஞர்கள் தாமும் இவ் விதழைப் பார்த்துப் பாரதிதாசனின் போக்கைத் தழுவினர். (ந.சுக)

## 266. வித்தியா சமாசாரப் பத்திரிகை - 1940

பார்வைக்குக் கிடைத்தது : புதுத்தொகுதி 2. பகுதி 1. 1941 ஆம் ஆண்டு சனவரித்திங்கள்.

ஆசிரியரும் வெளியிடுபவரும் எல். மெக்டீ. ரொபிசன்.

இலங்கை கவர்ன்மெண்டு அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

ராயல் அளவுப்பக்கம் 26. தனியிதழ் 25 சதம்.

கல்வித்தொடர்பான செய்திகட்கு முதலிடங் கொடுத் தும் பிற செய்திகட்கு இரண்டாவதிடங் கொடுத்தும் மாணவர் முதலியோருக்கு அறிவு புகட்ட வேண்டு மென்பதே இவ்விதழின் நோக்கம். (ந.சுஉ)

## 267. ஸ்ரீரமணப் பிரகாசம் - 1940

பார்வைக்குக்கிடைத்தது: மலர் 1. இதழ் 1. 1940 ஜூன்.

ஆசிரியர்கள்: கே.பி. பாலசிங்கம். எம் ஏ., பாண்டியன். தூத்துக்குடி நேஷனல் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டுப் புதுக்கோட்டையில் இருந்து வெளியிடப்பெற்றது.

அளவு: 18 × 12 செ. மீ., பக்கங்கள் 22. தனியிதழ் அணா ஒன்றரை.

இவ்விதழ் திருவருணையில் எழுந்தருளியிருந்த இரமண மகரிஷியின் அருளுரைகளை மக்களுக்கு எடுத்துக் கூறி மக்களை மெய்யறிவுப் பாதையில் செலுத்துவதற் காகத் தோன்றியது. (௩௬௩)

## 268. தமிழ் மருத்துவப் பொழில் - 1941

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 7. (ஆகஸ்டு 1941)

ஆசிரியர்: தமிழ்ப்பண்டிதரும் மருத்துவப்பண்டிதரு மான மாங்காடு வடிவேலு முதலியார். இது சென்னையில் அந்நாளிருந்த சித்தமாணவர் கழகத்தினின்றும் வெளி யாகியது. சென்னைக் கேசரி அச்சுக்கூடத்தில் அச்சிட்டு மருத்துவர் வி. என். சாமாராவ் என்பவரால் வெளியிடப் பட்டது.

அளவு: 21 × 14. செ.மீ., பக்கங்கள் 28. விலை விவரங் குறிக்கப் பெறவில்லை.

இவ்விதழ் தமிழ் மருத்துவத்தை நாட்டிலே பரப்பு வதற்குத் தோன்றியது, தாய்களையுங் குழந்தைகளையும் பேணுதல் முதலிய கட்டுரைகள் வெளி வந்ததோடு 'பொருட் பண்பு வெண்பா' என்னும் நூலுந் தொடர்ந்து வெளியாகியது. (௩௬௪)

## 269. தாய் நாடு – 1941

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 8. இதழ் 6. 1948 ஆம் ஆண்டு சூன் திங்கள்.

ஆசிரியர்: க. நாராயணன். ஆசிரியரால புதுக் கோட்டைக் கூட்டுறவுப்பதிப்பகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு: $2 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் விலை அணா நான்கு.

தமிழரசுக் கொள்கையைப் பரப்பும் இதழாக இது தோன்றியது. ஆயினும் கட்சிப் பூசல்களில் ஈடுபடாமல் தாய் நாட்டின் சிறப்புக்காக நன்முறையில் உழைத்தது. நல்ல கட்டுரைகள் கதைகள் முதலியன வெளியாயின.

(௩௨௫)

## 270. புலவர் உலகம் - 1941

பார்வைக்குக் கிடைத்தது: முதல் தொகுதி. இரண்டாவது புத்தகம் 1941.

ஆசிரியர்: செகவீரபாண்டியர். மதுரை சி. வரதராசுலு நாயுடு அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: $21 \times 14$ செ. மீ., பக்கங்கள் 40. தனி இதழ் அணா எட்டு. ஆண்டுக்கையொப்பம் ரூபா நான்கு.

ஆசிரியர் கம்பராமாயண ஆராய்ச்சி ஒன்றை விரிந்த முறையில் பல ஆண்டுகள் எழுதினர். அவ்வாராய்ச்சியுரையே திங்கள் தோறும் இதழ் வடிவாக வெளியாகியது.

(௩௨௬)

## 271. காமகோடி - 1942

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1 இதழ் 7. சித்திரபானு ஆண்டு ஐப்பசித் திங்கள் 19-10-1942.

ஆசிரியர்: எம். ஆர். சாம்பசிவஐயர் கும்பகோணம் ஜனார்த்தன பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $28 \times 18$ செ. மீ., பக்கங்கள் 6. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் தம் அன்பர்கட்காகக் காமகோடிபீட குரு சந்நிதியில் இருந்து வெளியாகுஞ் செய்திகளை இன்றி யமையாத சமயங்களில் அறிவிக்குந் திருப்பணியை மேற் கொண்டது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் செய்தி யொன்றுமில்லை. முகப்பில் விசயதசமி விசேட சஞ்சிகை என்று குறிக்கப்பட்டிருக்கிறது. (௩௬௭)

## 272. வசந்தம் - 1942

பார்வைக்குக் கிடைத்தது: மலர். 9. இதழ் 7. விகுருதியாண்டு ஐப்பசித் திங்கள் (அக்டோபர் 1950)

ஆசிரியர்: திருஞானசம்பந்தம். கோயமுத்தூர் புது மலர் அச்சகத்தில் அச்சிட்டுக் கே. பி. சுந்தரத்தால் வெளி யிடப்பட்டது.

இராயல் அளவுப் பக்கம் 80. தனியிதழ் அணு எட்டு. ஆண்டுக்கையொப்பம் ரூபா ஆறு.

கதைகட்டுரை முதலியவைகளைச் சிறந்தவைகளாக வெளியிட்டு மக்களுக்குக் களிப்புண்டாக்கவேண்டும் என்ப தையே நோக்கமாகக் கொண்டு இவ்விதழ் தோன்றியது. (௩௬௮)

## 273. ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா - 1942

பார்வைக்குக் கிடைத்தது: சம்புடம் 6. சஞ்சிகை 11 சர்வசித்து ஆண்டு கார்த்திகைத் திங்கள் (நவம்பர் 1947)

ஆசிரியர்: எஸ். வாசுதேவாச்சாரியார். காஞ்சீபுரம் சந்நிதித்தெருவில் உள்ள சுதர்சன அச்சகத்தில் அச்சிட்டுச் சென்னை தியாகராயநகரில் இருந்து வெளியிடப்பெற்றது.

அளவு: 25 x 16 செ. மீ., பக்கங்கள் 28. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இஃது அகோபில மடத்துப் பத்திரிகை. பெரும் பாலும் கட்டுரைகளில் வடமொழி மிகுந்து காணப் பெறு

கின்றது. பார்வைக்குக் கிடைத்த இதழில் சங்கல்ப சூரியோதயம், பஞ்ஜம சாதித்தத்துவம் ஸ்ரீ வேகாசேதுஸ் தோத்திரம் என்னும் கட்டுரைகள் காணப் பெறுகின்றன. (நடசுசு)

## 274. ஆயிர வைசியன் - 1943

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 5. இதழ் 1. 1947 ஆம் ஆண்டு சனவரித்திங்களில் வெளியான இதழ்.

ஆசிரியர் : தி. தி. சொக்கலிங்கம் மதிப்பாசிரியராக இதழை நடத்தியவர் பண்டித வித்துவான் மீ. பொன். இராமநாதன் செட்டியார். சென்னை நயினியப்ப நாய்க்கன் தெருவில் சக்தி அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப் பட்டது.

அளவு : 23 × 13 செ. மீ., பக்கங்கள் 32. தனியிதழ் அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

ஆயிரவைசிய சமூக முன்னேற்றத்திற்குப் பாடு படுதல் வேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றிய இவ்விதழ் அச் சமூகச் செய்திகளையும் பொதுக்கட்டுரை களையும், நகைச் சுவைக் கதைகளையுந் தாங்கி வெளியா கியது. சு. அ. இராமசாமிப் புலவர் முதலியோர் இவ்விதழிற் கதைகள் எழுதியுள்ளனர். (சு00)

## 275. தமிழ்க் கலை - 1943

பார்வைக்குக் கிடைத்தது: கலை 5. நூல் 6. 1-12-1947

ஆசிரியர் : அ. மு. பரமசிவானந்தம். சென்னை இராயபேட்டை சாது அச்சுக்கூடத்தில் அச்சிட்டு ஜி. இராமசாமி என்பவரால் வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 14 செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் விலை அணா நான்கு.

இவ்விதழ் தமிழ்க் கலையை நன்கு வளர்க்கவேண்டும் என்னும் நோக்கத்தோடு அறிஞர் பலருடைய அரிய கட்டுரைகளைத் தாங்கி வெளியாகியது. பெரும்பாலும் சிறந்த கட்டுரைகளே இதனில் வெளியாயின. ஐந்தாண்டு கட்கு மேலும் இது தமிழ்த் தொண்டு செய்திருக்கிறது. தன்பெயருக் கேற்ற முறையில் வெளியிடப்பட்ட இதழ் களில் இதுவும் ஒன்றாகும். (சOக)

## 276. தருமதீபிகை - 1943

பார்வைக்குக் கிடைத்தது : முதல் தொகுதி, ஐந் தாம் புத்தகம். *1943.*

ஆசிரியர் : செகவீர பாண்டியனார். மதுரை சி. வரத ராசுலு நாயுடு அச்சகத்தில் அச்சிட்டு மதுரையில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு : *21 × 14* செ. மீ., பக்கங்கள் *40.* தனியிதழ் அணா எட்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா நான்கு.

தருமதீபிகை என்பது ஓர் அறநூல். இதனையும் இதன் உரையையும் ஆசிரியர் திங்கள் தோறும் இதழ் இதழாக வெளியிட்டு வந்தார். ஆகவே இது இதழ் வடிவாக வெளிவந்த நூலாகும். (சOஉ)

## 277. வேங்கட கிருபா - 1943

பார்வைக்குக் கிடைத்தது : மலர் *1.* இதழ் *2* சித்திரபானு ஆண்டு வைகாசித் திங்கள் *(1943)*

ஆசிரியர்: எஸ். சந்தானகோபாலன். திருப்பாதிரிப் புலியூர் ஸ்ரீவாணி விலாசம் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு : *21 × 14* செ. மீ., பக்கங்கள் *24.* தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா *1—8—0.*

இவ்விதழில் வேங்கடேச விபவ அவதாரம், கிராம வாழ்க்கை, யூனியன் சர்க்கார் முதலிய கட்டுரைகள் வெளி

யாகியுள்ளன. கிராம வாழ்க்கையை முன்னேற்ற வேண்டும் என்னும் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு இவ் விதழ் தோன்றியது. (௪0௩)

## 278. அகஸ்தியன் - 1944

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 4. இதழ் 2. 1—4—1944.

ஆசிரியர்: ஜி. தட்சணாமூர்த்திப் பிள்ளை. உதவி ஆசிரியர் ஜி. கண்ணுச்சாமிப் பிள்ளை. ஜி. தட்சணாமூர்த்திப் பிள்ளையால் தஞ்சை மாவட்டம் திருத்தருப் பூண்டியில் விக்டோரியா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 28 × 22 செ. மீ., பக்கங்கள் 8. தனியிதழ் அணா ஒன்றரை. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.

இவ்விதழ் சித்த வைத்தியத்தை நாடெங்கணும் பரப்ப வேண்டுமென்பதையே தன்னுடைய முதன்மையான கொள்கையாகக் கொண்டு வெளியாகியது. சித்த மருத்துவக்கட்டுரைகளும் சித்த வைத்திய மாநாடு பற்றிய செய்திகளும் வெளியாயின. பார்வைக்குக் கிடைத்த இவ் விதழில் மணிமருத்துவம் முதலிய கட்டுரைகள் வெளியாகி யுள்ளன. (௪0௪)

## 279. கலைவாணி - 1944

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 3. இதழ் 1. விய ஆண்டு வைகாசித்திங்களில் (1—6—1946) வெளி வந்தது.

ஆசிரியர்: ப. நீலகண்டன், புதுக்கோட்டை கண்ண பிரான் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப் பட்டது.

அளவு: $21\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 28. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தனியிதழ் விலை அணா இரண்டு.

கட்டுரைகள் ,கதைகள் முதலியவைகளை வெளியிட்டு மக்களுக்குக் களிப்பூட்ட வேண்டும் என்பதையே நோக்க மாகக் கொண்டு ஆசிரியர் இவ்விதழைத் தொடங்கினார். நோக்கத்திற்கேற்பச் சில ஆண்டுகள் இவ்விதழ் வெளி யாகியது. (௨0௫)

## 280. பாப்பா - 1944

பார்வைக்குக் கிடைத்த இதழ் : மலர் 2. இதழ் 2. தாரண ஆண்டு மாசித்திங்கள் (1—3—1945).

ஆசிரியர்: டி. ஜே. அரங்கநாதன். வெளியிட்டவர் இராயவரம் இராமதியாகராசன். புதுக்கோட்டை நாட்டில் இராமச்சந்திரபுரத்தில் மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில் எஸ். என். மகாதேவ ஐயரால் அச்சிடப்பட்டது.

டிம்மி அளவுப்பக்கம் 40. தனி இதழ் நாலணா (25 காசு) ஆண்டுக் கட்டணம் மூன்று ரூபா.

இவ்விதழின் பெயரே தனது நோக்கத்தை வெளிப் படுத்தும். சிறுவர்கட்கேற்ற கதைகள் பாடல்கள் படங்கள் முதலியவைகளை வெளியிட்டுப் பெயருக் கேற்பத் தொண்டு செய்தது இவ்விதழ். ஆயினும் ஆதரவாளர் களைப் போதிய அளவு பெறாமையின் சில ஆண்டுகளில் மறைந்தது. (௨0௬)

## 281. பைந்தமிழ் – 1944

பார்வைக்குக் கிடைத்தது : பொழில் 1. மலர் 1. சுபானு ஆண்டு தைத்திங்கள். சனவரி, பிப்ரவரி 1944.

ஆசிரியர் : ஆ. முருகவேள். கே. ஆர். செல்வ விநாயகம் என்பவரால் திருநெல்வேலி டவுன் மீரானியா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ.மீ , பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டே கால். தனியிதழ் அணா மூன்று.

தமிழ் வளர்ச்சிக்குப் பணிபுரிவதற்கென்றே தோன்றிய இவ்விதழுக்குச் சோமசுந்திர பாரதியார், தேசிக விநாயகம் பிள்ளை, இலட்சுமிநரசிம்மையர் முதலியோர் வ ழ்த்துக் கூறி யுள்ளனர். ஆயினும் விரைவாகவே இதழ் மறைந்து விட்டது. அறுமுகத் துண்மை, பொய்த்தான்—மெய்த் தான் முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகி யுள்ளன. (சா0எ)

## 282. பாரி சாதம் - 1945

பார்வைக்கு 1946 ஆம் ஆண்டின் இதழ் ஒன்று கிடைத்தது.

அட்டைகள் போய்விட்டபடியால் ஆசிரியர் பெயர் முதலியவைகளை அறிய முடியவில்லை. சென்னை மலைச் சாலையில் இருந்து வெளியாகியது.

அளவு: 27 × 13 செ. மீ., பக்கம் 80. தனியிதழ் அணு எட்டு. ஆண்டுக் கட்டணம் ரூபா ஆறு.

இவ்விதழில் மௌனத் துன்பம், முள்வேலி, வழிப் போக்கன், அவள் பாக்கியம் முதலிய கதைகள் வெளியாகி யுள்ளன. சிறந்த கதைகளை வெளியிட்டுப் படிப்பவர்கட்கு மகிழ்ச்சியுண்டாக்குவதே இவ்விதழின் நோக்கமாக இருந் தது. (சா0அ)

## 283. வெண்ணிலா - 1945

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. இதழ் 5. 5—7—1945.

ஆசிரியர்: ப. சுந்தரவேலு. பாண்டிச்சேரி வெண் ணிலா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 21 × 13½ செ. மீ., பக்கங்கள் 46. ஆண்டுக் கையொப்பம் ரூபா 2—12—0 தனியிதழ் அணு நான்கு.

தமிழ் வளர்ச்சிக்கு நல்ல முறையில் தொண்டு செய்ய வேண்டுமென்பதை அடிப்படை நோக்கமாகக் கொண்டு

இவ்விதழ் தொடங்கப் பெற்றது. பாரதிதாசன், சுத்தானந்த பாரதியார், சோமசுந்தர பாரதியார் முதலியோர் இவ்விதழில் கட்டுரைகள் வரைந்தனர். நல்ல கட்டுரைகளும் கதைகளும் இவ்விதழில் வெளியாகியுள்ளன. (௨0௬)

## 284. கிராம சேவை - 1946

பார்வைக்குக் கிடைத்தது: ஏர் 2. சால் 5 சர்வசித்து ஆண்டு வைகாசித் திங்கள் (*1-6-1947*).

ஆசிரியர்: எம். கே. சுப்பிரமணியன். சென்னை சைதாப்பேட்டை ராசு அச்சுக்கூடத்தில் சே. ஆர். அரங்கராசுவினல் அச்சிடப்பட்டு மேற்கு மாம்பலத்தில் இருந்து ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: $24 \times 18$ செ. மீ., பக்கங்கள் *16*. தனி இதழ் அணு இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் கிராம மக்களுக்குத் தொண்டு புரிவதையே தன்னுடைய கொள்கையாகக் கொண்டு கிராம மக்களுக்குச் சிறந்த பணியாற்றியது. சுதந்திர வேட்கை, இதிலுஞ் சந்தேகமா? கிராமசமுதாயம் முதலிய சிறந்த கட்டுரைகள் பார்வைக்குக் கிடைத்த இதழில் வெளியாகியுள்ளன. (௪௧0)

## 285. அசோகா - 1947

பார்வைக்குக் கிடைத்தது: மாலை 2. மலர் *1*. சர்வதாரியாண்டு (*1948*) ஆவணித் திங்கள்.

ஆசிரியர்: வி. சுப்பிரமணியம் பி. ஏ. சென்னை ஆண்டர்சன் தெருவில் பாரதமாதா அச்சுக்கூடத்தில் வெளியிடப்பட்டது.

அளவு: $24 \times 16$ செ.மீ., பக்கங்கள். தனியிதழ் அணு எட்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறு.

இவ்விதழ் காங்கிரஸ் கொள்கையைத் தழுவி நாட்டு விடுதலைக்குப் பெரிதும் பாடுபட்டு உழைத்தது. சிறு

கதைகள், வரலாறுகள் முதலியனவும் வெளியாயின. பொ. திருகூடசுந்தரம் பிள்ளை. ஆக்கூர் அநந்தாச்சாரியார், எம். எஸ் சுப்பிரமணிய ஐயர் முதலியோர் இவ்விதழில் கட்டுரைகள் எழுதியுள்ளனர். இடையே பல சித்திரப் படங்களும் வெளியாகியுள்ளன. (சகக)

## 286. அருட் பெருஞ்சோதி - 1947

பார்வைக்குக் கிடைத்தது: சோதி *1*. சுடர் *4*. *1948* சனவரித் திங்கள்.

ஆசிரியர்: எம். இராசமாணிக்கம், சென்னை அம்மன் கோயில் தெருவில் உள்ள அருட்பெருஞ்சோதி அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப் பெற்றது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் *50*. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் திருவருட் பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகளாரின் கொள்கைகளை உலகிற்குணர்த்திச் சன்மார்க்கத் தொண்டு புரியத் தோன்றியது. இராமலிங்க அடிகளாரின் வரலாறு, வடலூரைப் பற்றிய செய்திகள், உயிர்களிடத்தில் அருள் காட்டவேண்டியதன் இன்றியமையாமை முதலிய பல அரிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. (சகஉ)

## 287. அழகு - 1947

பார்வைக்குக் கிடைத்தது: சிலம்பு *1*. பரல் *3*. *3-1-1947*.

ஆசிரியர்: பழநியப்பன். பதிப்பாசிரியர்: இராம. மீனாட்சி சுந்தரனார் எம். ஏ., சென்னை பாரதமாதா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $18 \times 12\frac{1}{2}$ செ. மீ., ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் தமிழரின் அழகுக் கலைகளை நாட்டிலே வளர்ப்பதற்காகத் தோன்றியது. இவ்விதழில் நக்கீரனார் நாட்டம், பிராமணர் தமிழரா?, எதிர்பாராத சந்திப்பு, கட்டளைத் தமிழ், குருடன் வாழ்வு முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (௪௧௫)

## 288. தமிழ்த் தென்றல் - 1947

பார்வைக்குக் கிடைத்தது: 1950 ஆம் ஆண்டின் ஆண்டு மலர்.

ஆசிரியர்: வே. வ. இராமசாமி. ஆசிரியரால் விருதுநகர் சச்சிதாநந்த அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $21 \times 13\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் 120. ஆண்டு மலரின் விலை ரூபா ஒன்றேகால்.

அறிஞர்களின் அரிய கட்டுரைகளை வெளியிட்டுத் தமிழ்த் தொண்டு செய்யத் தோன்றிய இவ்விதழ் பெயருக்கேற்ப நல்ல இனிய கட்டுரைகளை வெளியிட்டுத் தமிழ்த் தொண்டு செய்தது. பல அறிஞர்கள் தென்றலில் கட்டுரை வரைந்தனர். (௪௧௪)

## 289. தேச சேவை - 1947

பார்வைக்குக் கிடைத்தது: ஆண்டு 1. திங்கள். 1. சர்வசித்து ஆவணி (1949 ஆகஸ்ட்)

ஆசிரியர்: பிட்சுவாமிகள். கோயமுத்தூர் கம்மவார் அச்சுக் கூடத்தில் அச்சிட்டு என். இராசகோபால் என்பவரால் வெளியிடப்பட்டது.

அளவு: $26 \times 16$ செ.மீ., பக்கங்கள் 48. தனியிதழ் அணா ஆறு. ஆண்டுக் கையொப்பம் ரூபாய் நான்கு.

இதன் கொள்கையைப் பற்றி ஆசிரியர், "மக்கள் ஆரோக்கியமாக வாழ்வதற்கு வேண்டிய முயற்சி எடுப்பது"

தேசசேவையின் கடமையாகும். எக்காரியத்தையும் நன்றாக நடத்துவதற்குத் தூல சூட்சும உடல் நன்றாக இருக்க வேண்டும். பல மருத்துவ முறைகளையும் ஆராய்ச்சிசெய்த பின், இயற்கை மருத்துவமே நோய்வராமல் தடுக்கவும் வந்த நோயைத் தீர்க்கவும் மேலான சிறந்த முறையென்று முடிவு செய்து இயற்கை மருத்துவத்தையே ஆதரிப்போம்" என்று குறிப்பிட்டுள்ளார். இயற்கை மருத்துவக் கட்டுரைகளையே இது பெரும்பாலும் வெளியிட்டுவந்தது. (சகரு)

## 290. தொண்டன் - 1947

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 8. 1-8-1947.

ஆசிரியர்: கெ. ஆறுமுக நாவலர். நாகர்கோவில் எம். எஸ். எம். அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பெற்றது.

அளவு 21 × 14 செ. மீ., பக்கங்கள் 80. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறு. தனியிதழ்விலை அணா எட்டு.

இவ்விதழ் இந்துமத சீர்திருத்தஞ் செய்வதற்காகவே தோன்றியது. ஆசிரியர் தமது சொற்பொழிவினால் அரிய தொண்டு செய்வதோடு இவ்விதழ் மூலமாகவும் நல்ல தொண்டு செய்தார். பெரும்பாலும் சைவசமயத் தொடர்புள்ள கட்டுரைகளையே இவ்விதழ் வெளியிட்டு நல்ல தொண்டு செய்தது. (சகசு)

## 291. தோழன் - 1947

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. 15-7-47.

ஆசிரியர்: சனார்த்தனம் எம்.ஏ. சென்னை மெர்க்கன்டையில் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

டபுள் கிரௌன் அளவுப்பக்கம் 64. தனியிதழ் விலை அணா நான்கு. ஆண்டுக்கையொப்பம் ரூபா மூன்று.

"திராவிடம் பிரிட்டிஷ் சிங்கத்திடமிருந்து ஆகஸ்டு 15 இல் விடுதலைப் பெறப் போகிறது. ஆனால் வடநாட்டு வேங்கை பாயத் தயாராகி விட்டது. இந்த ஆபத்தான கட்டத்திலே 'தோழன்' தொடங்கினான். தனது பயணத்தைத் திராவிடநாடு வடநாட்டு வேங்கையிட மிருந்து விடுபடத் திராவிடக் கழகம் பாடுபடுகிறது. அந்தக் கழகக் கொள்கைகளை, நோக்கங்களை விளக்குவது 'தோழன்' முதற்கடமை" என்று ஆசிரியர் இவ்விதழில் எழுதியிருப்பதால் கொள்கை தெளிவாம். (சகஎ)

## 292. நிலவு - 1947

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 4. 1947 டிசம்பர்.

ஆசிரியர்: பு. கணேசன் பி. ஏ. சென்னை எஸ். ஆர். அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: $18 \times 18\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 32. தனியிதழ் அணா இரண்டு.

இவ்விதழ் புதுமுறை இதழ்களில் ஒன்றாக வெளி வந்துலவ வேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றியது. கருத்தழிந்து காய்வோர், கம்யூனிஸ்ட் கூறுகிறார் முதலிய சில கட்டுரைகள் வெளியாயின. (சகஅ)

## 293. பாசரசு - 1947

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 6, 7. அக்டோபர் 1947.

ஆசிரியர்கள்: எம். எஸ். பாசு, சரசுவதி பாசு. அரண்மனைக்காரன் தெருவில் உள்ள கமர்ஷியல் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியர்களால் வெளியிடப்பட்டது.

அளவு: $17 \times 12\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 48. தனி அணா 4.

இவ்விதழ் கதை கட்டுரைகள் முதலியவைகளை வெளி யிடுவதற்குத் தோன்றியது. யௌவனத்தின் சோலை, இருசொட்டுக் கண்ணீர், அவள்யார், கைவண்டிகள் முதலிய கதைகள் பார்வைக்குக் கிடைத்த இதழில் வெளியாகியுள்ளன. (சகக)

## 294. புதுமைப்பெண் - 1947

பார்வைக்குக் கிடைத்தது: மாலை 1. மலர் 3. சர்வ சித்து ஆண்டு மார்கழித் திங்கள் (1947 டிசம்பர்)

ஆசிரியை: குகப்பிரியை (சுவர்ணம்பாள்) தியாகராய நகர் கேசரி பிரிண்டிங் பிரசில் அச்சிட்டு ஆசிரியையால் வெளியிடப்பட்டது.

அளவு: $24 \times 17\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 64. தனி இதழ் அணா 8.

இவ்விதழ் பெண்களுக்காகத் தோன்றியது. பிள்ளை வளர்ப்பு, வாழ்க்கைமுறை, கதைகள் முதலியன இதில் வெளிவந்தன. தமிழ்நாட்டின் தலை சிறந்த இலக்கிய ஆசிரியைகளும் சிறந்த எழுத்தாளர்களும் இவ்விதழில் எழுதினர். (சஉ0)

## 295. பூந்தோட்டம் - 1947

பார்வைக்குக் கிடைத்தது: கொத்து 1. மலர் இரண்டு. 1947.

ஆசிரியர்: வை. திருநாவுக்கரசு. சேலம் அரிசிப் பாளையம் இலக்கிய அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பெற்றது.

அளவு: $81\frac{1}{2} \times 12\frac{1}{2}$ செ.மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் விலை அணா நான்கு

இவ்விதழ் திராவிட இயக்கத்தின் கொள்கைகளைப் பரப்பித் தொண்டு செய்யும் நோக்கத்தோடு தோன்றியது.

அரசியல், கலை, சமூகம் முதலான பல துறைகளைப் பற்றியும் கட்டுரைகள் வெளியானதோடு, கதை, கட்டுரை, கவிதை முதலியவைகளும் வெளியாயின. (சஉக)

## 296. பொன்னி - 1947

*பார்வைக்குக் கிடைத்தது: மலர் 8. இதழ் 8. (ஆகஸ்ட் 1. 1954)*

*ஆசிரியர்: அரு. பெரியண்ணன். ஆசிரியரால் சென்னையில் பவழக்காரத் தெருவில் பொன்னி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*அளவு: 21 × 14 செ. மீ., பக்கங்கள் 64. தனியிதழ் விலை அணா நான்கு.*

*இவ்விதழ் காலப்போக்கிற் கேற்ப மறுமலர்ச்சி எழுத்தாளர்களைக் கொண்டு சீரிய முறையில் கட்டுரைகள் கதைகள் முதலியவைகளை வெளிப்படுத்தி மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டுமென்னும் நோக்கத்தோடு தோன்றி எட்டாண்டுகளுக்குமேல் வெளியுலாவியது. பிறகு போதிய ஆதரவின்மையால் நின்றுவிட்டது. (சஉஉ)*

## 297. விருந்து - 1947

*பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 2. 1947 டிசம்பர்.*

*ஆசிரியர்: த. நா. குமாரசாமி பி. ஏ. சென்னைத் தங்கசாலைத் தெருவில் உள்ள டி. வி. சி. அச்சகத்தில் அச்சிட்டு மயிலாப்பூரில் இருந்து வெளியிடப்பெற்றது.*

*அளவு: 20 × 14 செ மீ., பக்கங்கள் 88. தனி இதழ் அணா எட்டு.*

*"புதியன கண்ட போழ்து விடுவரோ புதுமை பார்ப்பார்." புதிய பொருள்களைக் கண்டபோது அதனை நுகர்ந்து மகிழ்வர் புதுமையை விரும்புவோர் என்பது*

இதன் பொருள். இவ்விதழினும் விருந்து போன்ற புதுமை யான பொருள்களையே வெளியிடுதற்கு மிக முயன்றுள்ளார் ஆசிரியர். (சஉரு)

## 298. வேளாளன் - 1947

பார்வைக்குக் கிடைத்தது: ஏர் 1. சால் 9, 1-4-1948.

ஆசிரியர்: கு. சமத்துவம். ஆசிரியரால் பவானி ராமு அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு 17×12 செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் அணு நான்கு.

இவ் வெளியீடு வேளாள சமூகத்திற்குத் தொண்டு செய்வதற்காகத் தோன்றியது. ஆயினும் சமூகக் கட்டுரை கள் அல்லாமல் கதை முதலிய பிறவுங்கொண்டு வெளியாகி யுள்ளது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் வெளி நாட்டில் நம்மவர் உழவு, அரூர் மாநாடு முதலிய கட்டுரை கள் வெளியாகியுள்ளன. (சஉச)

## 299. கலாநிதி - 1947

பார்வைக்குக் கிடைத்தது: கலை 2. கதிர் 3. விரோதி யாண்டு சித்திரைத் திங்கள் (1-4-1949)

இதழாசிரியர் குழுவில் சு. நடேசப்பிள்ளை பி. ஏ. பி. எல், பண்டித. சி. கணபதிப் பிள்ளை, வே. நாகலிங்கம், வை. இராமசாமி சர்மா, தி. சதாசிவ ஐயர், அ. வி. மயில் வாகனன் ஆகியோர் காணப்பெறுகின்றனர். சுன்னகம் திருமகள் அச்சகத்தில் அச்சிட்டு அ. வி. மயில்வாகனத் தால் வெளியிடப்பட்டது. யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தில் இருந்து கலையாக்கங் கருதி வெளியாகியது.

அளவு 21×14 செ. மீ., பக்கங்கள் 64. தனியிதழ் 50 சதம். ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

கலையாக்கத்தையே முதன்மையான குறிக்கோளாகக் கொண்ட இவ்விதழில் அருந்தமிழ் அறிஞர்கள் பலர் செந்தமிழ்க் கட்டுரை வரைந்தார்கள். பழந்தமிழ் நூல்கள் ஆராய்ச்சிக் கட்டுரைகள் முதலியன இவ்விதழில் வெளியாகின. (சஉரு)

## 300. பரதன் - 1917

பார்வைக்குக் கிடைத்தது: நம்பர் 7. இலக்கம் 7. 1920 மார்ச்சு.

இவ்விதழ் கொழும்பில் இருந்து வெளியாகியது.

அளவு: $20\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 70. கையொப்பத் தொகை முதலியன தெரியவில்லை.

இவ்விதழ் பரதகுலத்தவருடைய கல்வி வளர்ச்சிக்காகவும் முன்னேற்றத்திற்காகவும் உழைக்கத் தோன்றியதாம் பார்வைக்குக் கிடைத்த இதழில் பரதகுலவீரன், வியாபாரக் கல்வி, ஒழுக்கமும் உயர்தரக் கல்வியும், பரத மகாசன சங்கக் கூட்டம் முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. ஆங்கிலக் கட்டுரைகளுஞ் சில காணப்பெறுகின்றன. (சஉசு)

## 301. வைதிக தர்மவர்த்தனீ – 1947

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 11. இதழ் 10. விளம்பி யாண்டு ஆடித்திங்கள் (1958).

ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ சோமதேவ சர்மா. சீர்காழி மீனாட்சி அச்சகத்தில் அச்சிடப்பட்டுச் சென்னை தம்புச் செட்டி தெருவில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: $18 \times 12$ செ. மீ., பக்கங்கள் 48. தனி இதழ் அணா ஆறு. ஆண்டுக் கையொப்பம் ரூ. 4.

இது வைதிகமார்க்கத்தை உலகில் வளர்க்கவேண்டும் என்னும் நோக்கத்தோடு வெளியிடப்பட்டது. வேத

பாஷ்யம், சங்கர உபதேசரத்தினம், பால பாரதம், மூகபஞ்சாசதி, பாதார விந்தசதகம் முதலிய பலபொருள்கள் இவ்விதழில் வெளியாயின. (சஉஎ)

## 302. அருட் ஜோதி - 1948

பார்வைக்குக் கிடைத்தது: ஜோதி 1. சுடர் 12. சன்மார்க்க ஆண்டு 82. திருவள்ளுவர் ஆண்டு 1980. (23-4-1949)

ஆசிரியர்: அ. கங்கணன ஜோதி சனமாரகக சஙகத்தினரால் மதுரை ராசன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 19 × 13½ செ. மீ., பக்கங்கள் 16. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தனியிதழ் விலை அணு இரண்டு.

திருவருட் பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகளாரின் கொள்கைகளை நாட்டிலே பரப்புவதற்கு அருட் பெருஞ்சோதி, அருட்பிரகாசம் முதலிய பல இதழ்கள் தோன்றின. அத்தகைய இதழ்களுள் இவ்வருட்சோதியும் ஒன்று. திருவருட் பிரகாச வள்ளலாரின் கொள்கைகளை நாட்டிலே பரப்புவதற்கு இவ்விதழுந்தன்னல் இயன்ற பணியைப் புரிந்தது. (சஉஅ)

## 303. இதபாஷிணி - 1948

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. பகுதி 4. சர்வசித்து ஆண்டு தைத் திங்கள் (1948 சனவரி)

ஆசிரியர்: ஆர். முத்துக் கிருட்டிண சாத்திரிகள். ஆசிரியரால் தஞ்சையில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 20 × 14 செ.மீ., பக்கங்கள் 36. தனியிதழ் அணு ஐந்து. ஆண்டுக்கையொப்பம் ரூபா மூன்று.

இதபாஷிணி என்றால் இனிமையாகப் பேசுகிறவன் என்பது பொருள். இவ்விதழ் தன்னுடைய பெயருக்

கேற்ப வடமொழிச் செய்திகளே மிகுதியாகக் கொண்டுள்ளது. வடமொழிப் பயிற்சியுங் கொடுக்கப் பட்டுள்ளது. (சஉக)

## 304. கர்நாடக சங்கீதம் – 1948

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 4. சர்வசித்து ஆண்டு ஐப்பசித் திங்கள் (1948)

ஆசிரியர்: கோவை எஸ். ஆர். குப்புச்சாமி, பி. ஏ. கோயமுத்தூர்க் கூட்டுறவுப் பதிப்பகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு 20 × 14. செ. மீ., பக்கங்கள் 54. தனி யிதழ் அணா எட்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறு.

இவ்விதழ் இசைத் தமிழை வளர்ப்பதற்காக வெளியிடப்பட்டது. இசை பயில்வோர்க்கு வேண்டிய பல வகையான செய்திகளும் இசைப்பயிற்சி முறைகளும் இவ்விதழில் வெளியாகியுள்ளன. இசைச் செய்திகளைத் தவிரப் பிற செய்திகள் இவ்விதழில் இடம் பெறவில்லை. (சஙo)

## 305. கலைக்களஞ்சியம் – 1948

பார்வைக்குக் கிடைத்தது: களஞ்சியம் 1. மணி 2. சர்வதாரியாண்டு மார்கழித் திங்கள் (1-1-1949)

ஆசிரியர்: ஆ. சண்முகவேலன். சென்னை அம்மன் கோயில் தெருவில் உள்ள அருட் பெருஞ்சோதி அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 44. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் மக்கட்குக் கலையறிவை நன்கு புகட்ட வேண்டுமென்னும் நோக்கத்தோடு தோன்றியது. அறிஞர்கள் சிலர் இவ்விதழில் கட்டுரை யெழுதினர். சிலகாலம் நடைபெற்ற பிறகு இதழ் நின்றுவிட்டது. (சஙக)

## 306. குங்குமம் - 1948

*பார்வைக்குக் கிடைத்தது: சிமிழ் 2. திலகம் 6. விரோதியாண்டு பங்குனித் திங்கள்.*

*ஆசிரியை: எஸ். விசாலாட்சி. சென்னை இராயப் பேட்டை இராமநாத் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியை யால் வெளியிடப்பட்டது.*

*அளவு: $20\frac{1}{2} \times 13$ செ. மீ., பக்கங்கள் 80. தனி இதழ் அணு எட்டு. ஆண்டுக்கையொப்பம் ரூபா ஆறு.*

*இவ்விதழ் சிறந்த கட்டுரைகளை வாசக நேயர்களுக்கு அளிக்கவேண்டும் என்பதைக் குறிக்கோளாகக் கொண்டு தோன்றியது. பார்வைக்குக் கிடைத்த இதழில் வாழ்க்கை நிழல், தீயுங் குளிர்ந்தது, இடிக்குத் தப்புவதெப்படி? நாடகக் கலை முதலிய பல சிறந்த கட்டுரைகள் வெளியாகி யுள்ளன.* (சரு௨)

## 307. டைலர் - 1948

*பார்வைக்குக் கிடைத்தது: இதழ் 4. ஜூலை. 1948.*

*ஆசிரியர்: என். இராமராவ். கும்பகோணம் காமாட்சி யம்மன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*டிம்மி அளவுப் பக்கம் 32. ஆண்டுக்கையொப்பம் ரூபா மூன்று.*

*டைலர் எனின் தையற்காரன் என்று பொருள். இவ்விதழ் தையற்காரர்களின் முன்னேற்றங் கருதியும் தையற்கலையைப் பழகுபவர்கட்கு உதவியாக இருக்குமாறும் வெளியிடப்பட்டது. பெரும்பாலுந் தையற் கலைத் தொடர்பான செய்திகளே வெளியாயின.* (சருரு)

## 308. தமிழர் நாடு - 1948

*பார்வைக்குக் கிடைத்தது: மலர் 2. இதழ் 8. விரோதியாண்டு பங்குனித்திங்கள் (14-3-1950)*

ஆசிரியர் : முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம். திருச்சி சிட்டி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

அளவு $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 48. தனியிதழ் விலை அணா நான்கு.

தமிழ் நாடு தமிழர்களுடையது. இந்நாட்டைப் பற்றி நின்ற வெள்ளையர்களை மிகு தொல்லைப்பட்டு நாட்டைவிட்டு விரட்டினோம். ஆயினும் என்? முதுகுவலி போய்த் திருகுவலிவந்த கதையாய் இப்பொழுது நாடு வட நாட்டாரின் பிடிக்குள் சிக்கித் தவிக்கிறது; இதனை மக்கட்குணர்த்தி விழிப்படையச் செய்யவேண்டும் என்னும் நோக்கத்துடன் ஆசிரியர் இவ்விதழைத் தொடங்கி நடத்தினர். இயன்ற அளவு முயன்று பணி புரிந்தார். (௨௩௪)

## 309. தமிழ்த்தொண்டன் - 1948

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. பகுதி 1. சர்வதாரி சித்திரை 1948 ஏப்ரல்.

ஆசிரியர் : அ. ச. ஞானசம்பந்தன் எம். ஏ. காஞ்சி புரம் எஸ். காளப்பன் அவர்களால் பெரிய காஞ்சீபுரம் முத்தமிழ் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $21 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 48. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் விலை அணா நான்கு.

தமிழ்க் கட்டுரைகள் பலவற்றை நன்முறையில் வெளியிட்டுத் தமிழ்மொழிக்குப் பணிபுரிதல் வேண்டும் என்னும் நோக்கத்தோடு இவ்விதழ் தொடங்கி நடத்தப்பட்டது. முதல் பகுதியில் சில நல்ல கட்டுரைகள் வெளிவந்தன. (௨௩௫)

## 310. தெய்வீக வாழ்க்கை - 1948

பார்வைக்குக் கிடைத்தது : சர்வசித்து ஆண்டு தைத்திங்கள் (1948 சனவரி)

ஆசிரியர் : எம். நாராயணு. டி. கே. சாமியால் ராசன் எலக்ட்ரிக் அச்சகத்தில் அச்சிடப்பட்டது. இ.ஜி.கிருட்டிண மூர்த்தி என்பவரால் வெளியிடப்பட்டது.

ராயல் அளவுப் பக்கம் 24. தனியிதழ் அணு நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழின் நோக்கம் மக்கட்கு மேலாய சிவ நெறியைப் போதித்துத் தெய்வத்தன்மை பொருந்திய வாழ்க்கையை மேற்கொள்ளச் செய்வதேயாம். அன்பு, சிவம், அருள் முதலிய உயரிய தெய்வநெறிக் கட்டுரைகள் பல இவ்விதழில் வெளியாயின. (சஙசு)

## 311. நூறுல் ஹக் - 1948

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 1. பகுதி 1. 1948 ஏப்ரல்.

ஆசிரியர் : ம. கா. மு. காதிறு முஹியியித்தீன் மரைக் காயர். ஆசிரியரால் மதுரை இந்தியன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

அளவு : $24\frac{1}{2} \times 18\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபா பத்து. தனியிதழ் ரூபா ஒன்று.

இவ்விதழ் முஸ்லீம் சமய வளர்ச்சிக்காக வெளியிடப் பட்டது. குர் ஆன், ஞானபோதக்கோவை, நித்திய வழி காட்டி, நபிநாயக மான்மியம், இஸ்லாம் நிற்கும் இடம், இஸ்லாத்தின் மூலமந்திரம் முதலிய பல கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. (சஙஎ)

## 312. புதுவாழ்வு - 1948

பார்வைக்குக் கிடைத்தது : மாலை 1. மலர் 8. திரு வள்ளுவர் ஆண்டு 1948 ஆவணி 1. (1948 ஆகஸ்ட்)

ஆசிரியர் : க. அன்பழகன், எம். ஏ. சென்னை சங்கு ராமசெட்டி தெருவில் ஓரியண்டல் பிரிண்டிங் அச்சகத்தில்

அச்சிட்டு ஆசிரியரால் புரசைவாக்கத்தில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு: 21 × 14 செ. மீ., பக்கங்கள் 46. தனியிதழ் அணா 4. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

திராவிடக் கழகப் பத்திரிகையாக வெளிவந்தது. இந்தி எதிர்ப்பில் தீவிரமாகப் பங்குகொண்டது. பல இந்தி எதிர்ப்புக் கட்டுரைகள் பார்வைக்குக் கிடைத்த இதழில் வெளியாகியுள்ளன. (சாந-அ)

## 313. ஜீவ்யப்ரதர்சிநீ - 1948

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 10. சர்வதாரியாண்டு மார்கழித் திங்களில் வெளியாகியது. (1-10-48)

ஆசிரியர்: இ. எஸ். சிவராம கிருஷ்ணன். ஈரோடு ஆநந்தா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $21 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறு. தனியிதழ் அணா எட்டு.

ஜீவ்யப்பிரதர்சிநி என்னுஞ் சொல்லுக்குப் பொருள் வாழ்க்கை வழி காட்டி என்பது இவ்விதழ் மக்கள் நடத்த வேண்டிய ஆன்மீக முறையைக் கட்டுரைகளால் வெளிப்படுத்தி அவர்களுக்கு நன்னிலையைக் காட்டத் தோன்றியது. பிரணவம் பரமா? பராரியா? ஆவிலோகத்து மேவிய மகனீயர்கள் முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. இவ்விதழின் கட்டுரைகள் பொதுவாக மக்களுக்கு விளங்குவது கடினம். (சாந-கூ)

## 314. உழவர் நாடு - 1949

பார்வைக்குக் கிடைத்தது: உழவு 1. விளைவு 5, 6. விரோதியாண்டு கார்த்திகைத் திங்கள் (1949)

ஆசிரியர்: என். எஸ். அழகர்சாமி. அருப்புக் கோட்டை சக்தி அச்சகத்தில் அச்சிடப்பட்டுக் கல்லூரணி

அஞ்சல் முத்துராமலிங்க புரத்தில் இருந்து வெளிவந்துலாவியது.

அளவு : $21 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 30. தனி இதழ் அணு இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இதழின் பெயரே இதழின் நோக்கத்தை நன்கு புலப் படுத்தும். பெரும்பாலும் இதனில் உழவுத் தொழிலுக்குத் தொடர்பான கட்டுரைகளே வெளியாகியுள்ளன. (சச0)

## 315. கலைமணி - 1949

பார்வைக்குக் கிடைத்தது : கலை 3. மணி 17. 1951 ஆகஸ்ட்.

ஆசிரியர் : அரு இராமநாதன். திருச்சிராப்பள்ளி ரெயின்பௌ பிரிண்டர்ஸ் அச்சகத்தில் அச்சிட்டு வெளி யிடப்பட்டது.

அளவு :$20 \times 13$ செ. மீ., பக்கங்கள் 80. தனி இதழ் அணு எட்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறு.

இவ்விதழ் சினிமாச் செய்திகளையும் இலக்கியக் கட்டுரை கதை முதலியவைகளையும் வெளியிடுவதற்காகத் தோன்றியது. பார்வைக்குக் கிடைத்த இதழில் தேவகி பட்விமர்சனம், ஸ்டுடியோச் செய்திகள், சந்திர வாழ்க்கை வர்ணனை, செத்தவரோடு பேசலாம் முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (சசக)

## 316. சாந்தி - 1949

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 2. 1949 நவம்பர்த் திங்கள்.

ஆசிரியர் : சாந்த ஸ்ரீ. சுப்பிரமணியசாமி. சென்னை பார்க்கர் அச்சகத்தில் அச்சிடப்பட்டு, பி. ஜி. நடராசன் என்பவரால் வெளியிடப்பட்டது.

அளவு : 24×$18\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 20. தனி இதழ் விலை அணு நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் மக்கள் மனத்தின் ஆசாபாசம் அஞ்ஞானம் முதலியவைகளை அகற்றி, நல்லறிவுச் சுடர் கொளுத்திச் சாந்தியை உண்டாக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றியது. ஆசிரியர் இதிற் சிறந்த கட்டுரைகள் பல வற்றை எழுதினார். (சசஉ)

## 317. சோதிடபோதினி - 1949

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 1. விரோதி யாண்டு ஆடித்திங்கள் (ஆகஸ்ட், 1949)

ஆசிரியர் : பி. சுப்பையாபிள்ளை. கோயமுத்தூர் பீளை மேடு இன்டஸ்ட்ரியல் இன்ஸ்டியூட் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 14 செ. மீ., பக்கங்கள் 24. தனி இதழ் அணு 4. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழின் கொள்கையைப் பற்றி ஆசிரியர், "சோதிட சாத்திரத்தை நன்கு கற்றுணர்ந்த பண்டிதர்கள் நிறைந்து விளங்கும் இக்காலத்தில் சோதிட சாத்திரத்தின் அருமைபெருமைகளை உலக மக்கள் அறிந்து தீமையில் இருந்து விலகி நன்னெறியில் ஈடுபட்டு நற்பயன் பெறச் செய்ய வேண்டுமென்ற எண்ணத்தினால் சோதிட போதினியை மாதப்பத்திரிகையாக வெளியிடத் தீர்மானித் தோம்" என்று குறிப்பிட்டுள்ளார். (சசங)

## 318. துவைத பிரபாவம் - 1949

பார்வைக்குக் கிடைத்தது : சுருள் 3. எண் 12. 1949 டிசம்பர்.

ஆசிரியர் : டி. வி. கிருட்டிணசாமி ராவ். திருச்சிராப் பள்ளி கல்யாணி அச்சகத்தில் அச்சிட்டுத் திருச்சியில் இருந்து வெளியிடப்பட்டது.

அளவு. 28 × 22 செ. மீ., பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இவ்விதழ் மாத்வ சமூகத்தாரின் இகபர சாதனங்களை வெளியிடத் தோன்றியது. பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் "மகாபாரத தாத்பரிய நிர்ணயம், மனுஷியனுக்கு ஏற்பட்ட ஆயுள்காலம், ஸ்ரீபுரந்தர உபநிடத், பகவத் கீதை, ஹரிகதாம்ருத ஸாரம்" முதலிய கட்டுரைகள் வெளியாகி யுள்ளன. (௨௨௪)

## 319. நாட்டியம் - 1949

பார்வைக்குக் கிடைத்தது: சதங்கை 1. மணி 7. ஜூலை 1949.

ஆசிரியர்: ரஞ்சன். சென்னை சங்குராம செட்டித் தெருவில் உள்ள இராசன் எலக்ட்ரிக் அச்சகத்தில் டி. கே. சாமியால் அச்சிடப்பட்டு ஆசிரியரால் வெளியிடப் பட்டது.

அளவு: 24 × 17 செ. மீ., பக்கங்கள் 32. தனியிதழ் அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் நாடகக் கலையை நாட்டில் வளர்ப்பதற் கெனத் தோன்றியது. கூத்துத் தொடர்புள்ள பல கட்டுரைகள் இதில் வெளியாயின. பார்வைக்குக் கிடைத்த இதழில் நந்திகேசவரரின் அபிநய தர்ப்பணமும் நாட்டிய வரலாறும் என்னும் நூல் வெளியாகியுள்ளது. (௨௨௫)

## 320. யோகாசன ஆலயவிசயம் - 1949

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 11. இதழ் 1. சர்வ தாரி யாண்டு மார்கழித் திங்கள் (1949)

கௌரவ ஆசிரியர்: பி. கே. வேணுகோபால். சென்னைச் சிந்தாத்திரிப் பேட்டை சாமி நாய்க்கன் தெரு வினக அச்ச கத்தில் அச்சிடப்பட்டு அவதானம் பாப்பையர் தெருவில் இருந்து வெளியாகியது.

அளவு: 21 × 13 செ. மீ., பக்கங்கள் 10. தனி இதழ் அணு இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூ 1-8-0.

இவ்விதழ் யோகாசனங்களின் உண்மை, பயன் முதலியவைகளை மக்களுக்கு விளக்கி மக்கள் அனைவரும் யோகாசனம் செய்து பயன்பெற வேண்டியதன் இன்றியமையாமையை மக்களுக்கு உணர்த்துதற்கு வெளியிடப் பட்டது. (சசசு)

## 321. வாடாமலர் - 1949

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 3. 1949 டிசம்பர்.

ஆசிரியர்: எம். எஸ். விசுவநாதன் (சாவி). அரண்மனைக்காரன் தெருவில் உள்ள கமர்ஷியல் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 20 × 13½ செ. மீ., பக்கங்கள் 88. தனியிதழ் அணு 6.

இவ்விதழ் வாசகர்கட்கு உயரிய கட்டுரைகளையுங் கதைகளையும் வழங்கி அவர்களை மகிழ்விக்கத் தோன்றியது. பொதுவாக நல்ல கட்டுரைகள் வெளியானதோடு சிறு சிறு விகடத்துணுக்குப் படங்களும் பல வெளியாயின. இது தன் பெயருக்கேற்ப என்றும் வாடாமலராக இருக்கவில்லை. விரைவில் வாடிப்போய்விட்டது. (சசஎ)

## 322. ஜோதிநிதி - 1949

பார்வைக்குக் கிடைத்தது: கலை 1. விகலை 1. விரோதியாண்டு ஆனித்திங்கள் (15-6-1949)

ஆசிரியர்: டி. எஸ். வி. சர்மா. ஈரோடு சண்முகா அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: 20 × 7½ செ. மீ., பக்கங்கள் 64. தனி இதழ் அணுப் பத்து. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஏழரை.

இவ்விதழாசிரியராகிய சர்மா மருத்துவத்திலும் காலக் கணிதத்திலும் வல்லவர். இவைகளை உலகத்திற் பரப்பவேண்டுமென்னும் கருத்துடன்தான் இவ்விதழைத் தொடங்கினர். பார்வைக்குக் கிடைத்துள்ள இதழின் பக்கங்கள் யாவற்றிலும் காலக் கணிதச் செய்திகளே நிறைந்துள்ளன. (சசஅ)

## 323. அருள் - 1950

பார்வைக்குக் கிடைத்தது: சோதி 1. சுடர் 1. விக்ருதி யாண்டு ஆடித்திங்கள்.

ஆசிரியர்: மததாசன். தஞ்சை இராசேசுவரி அச்சகத்தில் அச்சிட்டு சி. எஸ். கிருட்டிணன் பி. எஸ். சி. என்பவரால் வெளியிடப்பட்டது.

அளவு: 21 × 14 செ.மீ., பக்கங்கள் 20. தனி இதழ் அணா மூன்று. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

உலகில் உள்ள மக்கள் கடவுள் அருளையும் கடவுள் அருள்பெற்ற பெரியார்களின் அருளையும் பெற்றுச் சிறப்புடன் வாழ வேண்டுமென்று மக்கட்கு வலியுறுத்துதற்காகத் தோன்றியது இவ்விதழாகும். பார்வைக்குக் கிடைத்துள்ள இதழில் திருவருணையில் வாழ்ந்திருந்த இரமணமகரிஷிகளின் பெருமை முதலிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன. (சசகூ)

## 324. தமிழோசை - 1950

பார்வைக்குக் கிடைத்தது: ஓசை 1. அலை 1. (5-11-50)

ஆசிரியர்: கு. சமத்துவம். ஆசிரியரால் பவானி ராமு அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 18 × 12 செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் விலை அணா நான்கு.

இவ்விதழாசிரியர் தமிழ்த்தொண்டு செய்யவேண்டும் என்னும் நோக்கத்துடன் இவ்விதழைத் தொடங்கினார்.

"தாய்மொழிப் பற்றுச் சிறிதுமின்றி உறங்கிக் கிடக்கும் தமிழ் மக்களைத் தட்டியெழுப்பித் தமிழுணர்ச்சி யூட்டவே தமிழோசை வெளிவருகின்றது. தமிழ்நாட்டிற் பிறந்து, தமிழ்நாட்டில் வாழும் ஒரு தமிழ் மகன், தன் தாய் மொழியைக் கல்லாதும், தன்னைத் தமிழனென்று சொல்லாதும் தமிழுக்குப் புறம்பான ஓர் அயல் மொழியைக் கற்றும் தன்னை அயலான் என்று எண்ணியும் வாழும் இரங்கத்தக்க நிலையைப் போக்கவே தமிழோசை தோன்றியுள்ளது" என்பன போன்ற பல முடிவுகளை இதழின் தோற்றத்திற்கும் நோக்கத்திற்கும் காரணமாகக் கூறியுள்ளார். (சஙுo)

## 325. பார்வதி - 1950

பார்வைக்குக் கிடைத்தது: கலை 1. சித்திரம் 2. விரோதியாண்டு மாசித்திங்கள் (பிப்ரவரி 1950)

ஆசிரியர்: வே நமசிவாயம். சென்னை மலைச்சாலை இராயல் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளிப்படுத்தப்பட்டது. பார்வதி பாரத் ஸ்டுடியோவின் வெளியீடு.

அளவு: 24 × 18 செ.மீ., பக்கங்கள் 80. தனி இதழ் அணா எட்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா 6.

தாங்கள் தயாரிக்கும் படங்கட்கு விளம்பரத்தை இவ்விதழில் வெளியிட்டுப் படத்தை எல்லோரும் பார்ப்பதற்கு நன்கு விளம்பரஞ் செய்யலாம் என்னும் எண்ணங் கொண்டே இவ்விதழ் வெளியிடப்பட்டது. இதில் சினிமாப் படங்கள் மிகுதியாக வெளியாகின. கட்டுரைகள் கதைகள் முதலியனவும் பதிப்பிக்கப்பட்டன. இதழ்கள் அழகாக வெளிவந்தன. (சஙுக)

## 326. வள்ளுவர் - 1950

பார்வைக்குக் கிடைத்தது; மலர் 2. இதழ் 1. கர ஆண்டு ஆவணித் திங்கள், செப்டம்பர் 1951.

ஆசிரியர் : க. விசுவலிங்க நாயனார். சென்னை மாகாண வள்ளுவர் மகாசன சங்கத்தின் திங்கள் வெளியீடு. சென்னைத் திருவொற்றியூர்ப் பெருஞ்சாலையில சித்ரா பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டு கே. ஆனந்தன் என்பவரால் வெளியிடப்பட்டது.

அளவு : 27 × 21 செ. மீ., பக்கங்கள் 8. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை.

இவ்விதழ் வள்ளுவ குலத்தினரின் முன்னேற்றங் கருதி வெளியிடப்பட்டது. திருக்குறளியற்றிய திருவள்ளுவர் பெயரைத் தாங்கி நிற்பதைப்போல் வெளித் தோற்றத்திற்குக் காணப்பட்டாலும் ஒரு திருக்குறளைக் கூட எடுத்துப் பயன் படுத்தவில்லை. (சஙஉ)

## 327. பகுத்தறிவு - 1951

பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 3. விக்ருதியாண்டு பங்குனித் திங்கள் (14-3-1951)

ஆசிரியர் : ப. கண்ணன். சலகண்ட புரம் செந்தமிழ் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : $21 \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்றரை. தனியிதழ் அணு இரண்டு.

மக்கள் பகுத்தறிவு இல்லாமல் பழைய மூடத்தனமான பழக்க வழக்கங்களைப் பின்பற்றி நடக்கும் ஆடுகளாக இருக்கிறார்கள். அவர்கட்கு நாம் பகுத்தறிவையுண்டாக்கிச் சிறப்புடன் வாழுமாறு செய்தல் வேண்டும் என்னும் நோக்கத்தைக் கொண்டு இவ்விதழ் தோன்றியது. (சஙங)

## 328. முதியோர் கல்வி - 1951

பார்வைக்குக் கிடைத்தது; மலர் 1. இதழ் 1. 1951 ஜூலை.

ஆசிரியர்: டீ. ஜே. ஆர். கோபால். சென்னை மலைச் சாலைக் கூட்டுறவுப் பதிப்பகத்தில் அச்சிட்டு ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு: 24 × 18 செ. மீ., பக்கங்கள் 28. தனியிதழ் அணு இரண்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டு.

இது தென்னிந்திய முதியோர் கல்விச் சங்கத்தின் வெளியீடு. முதியோர் கல்வி இயக்கத் தொண்டர்களுக்கு நம் நாட்டிலும் மற்ற நாடுகளிலும் நடைபெறும் முதியோர் கல்வி இயக்க முறைகள், திட்டங்கள் மற்றும் இந்த இயக்கம் பற்றிய கருத்துக்கள் தொண்டர்களின் கட்டுரை கள் முதலியன இவ்விதழில் வெளியிடப்பெற்றன. (சடுச)

## 329. தேசத்தொண்டன் - 1952

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 6. 1953 ஆம் ஆண்டு தைத்திங்கள்.

ஆசிரியர்: யாழ்ப்பாணத்துக் கட்டைவேலியூர் பண்டிதர் ஜே. எஸ். ஆழ்வாப் பிள்ளை. கொழும்பு ராபர்ட் அச்சகத்தில் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது.

அளவு: $24\frac{1}{2} \times 19$ செ. மீ., பக்கங்கள் 30. ஆண்டுக் கையொப்பம் ரூபா பத்து.

இவ்விதழ் தமிழ்த் தொண்டையே தேசத்தொண்டா கக்கொண்டு உழைக்கத் தோன்றியது. இதழின் முகப்பில், "சிறந்த தொண்டாம் தேசத்தொண்டினை மறந்தும் புரிதல் மக்கள் கடனே, அண்டருங் களிக்கும் அமிழ்தினைப் பழிக்கும் வண்டமிழ் ஒகாழிக்கும் மாதப் பிரசுரம்" என்னுஞ் செய்யுளைப் பொறித்துள்ளது. வெளியாகியுள்ள கட்டுரை கள் சிறந்தவைகளாகவே விளங்குகின்றன. (சடு...

## 330. கிருஷிகன் - 1953

பார்வைக்குக் கிடைத்தது : பயிர் 1. கதிர் 1. நந்தன ஆண்டு தைத்திங்கள் (1953 சனவரி)

ஆசிரியர் : ஏ. எஸ். வேங்கடராவ். விழுப்புரம் அனுமான் அச்சுக் கூடத்தில் அச்சிட்டு அன்னியூர் அஞ்சல் நிலையத்தைச் சேர்ந்த அனுமந்தபுரத்தில் இருந்து ஆசிரியரால் வெளியிடப்பட்டது.

அளவு : $21 \times 14$ செ. மீ., பக்கங்கள் 16. தனியிதழ் அணா நான்கு. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் விவசாயம் கைத்தொழில், கால்நடை, கூட்டுறவு, சுகாதாரம், கல்வி முதலிய கிராம முன்னேற்றத் தொடர்பான கட்டுரைகள், கதைகள், கவிதைகள், நாடகங்கள் முதலிய பலவற்றை வெளியிட்டு வந்தது. (சடுசு)

## 331. நாவரசு - 1953

பார்வைக்குக் கிடைத்தது : அரசு 1. மொழி 3. நந்தன மாசி (1953)

ஆசிரியர் : திருத் தேவர் பழநியப்பகவுண்டர். கௌரவத் துணையாசிரியர் : வித்துவான் தி. சேஷாத்திரி எம். ஏ., மதுரை. மதுரை பொன்மணி அச்சகத்தில் சிவஞண்டித் தேவரால் பதிப்பிக்கப்பட்டு ஆசிரியரால் வெளியிடப்பெற்றது.

டிம்மியளவுப் பக்கம் 44. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஐந்து.

ஆசிரியர் சென்னை திருவொற்றியூரான் வடமொழிக் கல்லூரியில் வடமொழி கற்றுத் தேர்ந்தவர். தமிழ்மொழியிலும் புலமையுடையவர். வேதாந்தக் கொள்கையைச் சைவ சமயத் தொடர்போடு ஒன்று படுத்தி மக்களுக்குப் போதித்து மக்களைச் சிவபக்தியுடையவர்களாகவும் அதே போக்கில் வேதாந்திகளாகவுஞ் செய்யவேண்டும் என்பதை

நோக்கமாகக்கொண்டு இவ்விதழைத் தொடங்கினார். இரண்டோராண்டுகள் நடந்து இதழ் மறைந்தது. ஆசிரியரும் மறைந்தார். (சருள)

## 332, விஞ்ஞானி - 1953

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 5. (1954 மார்ச்)

ஆசிரியர்: வி. சுப்பிரமணியம். ஆசிரியரால் யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணை சண்முகநாத அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $24\frac{1}{2} \times 18$ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறு. தனியிதழ் அணா எட்டு.

இவ்விதழ் விஞ்ஞானச் செய்திகளை வெளியிடுதற்காகத் தொடங்கப் பெற்றது. சிறந்த அறிஞர்கள் பலர் கட்டுரை யெழுதி இதழின் நோக்கத்தை நிறைவேற்றினார்கள். (சருஅ)

## 333. விந்தியா - 1953

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 2. இதழ் 8. 1954 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள்.

ஆசிரியர்: கே. எஸ். எஸ். இராகவன். கூட்டாசிரியர் ஆர். முருகையன். பம்பாய் விந்தியா அச்சகத்தில் அச்சிடப் பெற்றுப் பம்பாயில் இருந்து வெளியிடப்பெற்றது.

அளவு: $22\frac{1}{2} \times 16$ செ. மீ., பக்கங்கள் 128. தனியிதழ் விலை அணா எட்டு.

இவ்விதழ் தமிழ் வழங்காத இடத்தில் வதியும் தமிழர்கள் தங்களுடைய தமிழ் வேட்கையைப் போக்கிக் கொள்ளுதற்கு வெளிப்படுத்தியது. டாக்டர். மு. வ., அ. கி. பரந்தாமனார், அ. ச. ஞானசம்பந்தன், செகசிற்பியன், தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், கு. இராசவேலு, சோம. லெ. முதலானவர்கள் இவ்விதழிற் கட்டுரை யெழுதியுள்ளார்கள். (சருகூ)

## 334. கலைமன்றம் - 1954

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 4. இதழ் 2. 1957 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள்.

ஆசிரியர்: சங்கு கணேசன். சென்னை ஸ்ரீமகள் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 142. தனியிதழ் விலை அணா எட்டு.

தமிழிலேயுள்ள பல வகையான கலைகளையும் உலகிற்கு அளிக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு இக்கலை மன்றம் தோன்றியது. தேன்கூடு, கவிதையரங்கம், பொன்மொழிப் பொங்கல் முதலிய பல நல்ல கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. சிறந்த முறையில் இவ்விதழ் நடைபெற்றதாயினும் நீடித்து நிற்கவில்லை. (சகo)

## 335. தமிழன் குரல் - 1954

பார்வைக்குக் கிடைத்தது: குரல் 1. ஒலி 3. சய ஆண்டு புரட்டாசித் திங்கள் (1954 அக்டோபர்)

ஆசிரியர்: ம. பொ. சிவஞானம். ஆசிரியரால் சென்னை திருவல்லிக்கேணியில் உள்ள கண்ணகி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப் பெற்றது.

அளவு: $20\frac{1}{2} \times 13$ செ. மீ., பக்கங்கள் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் அணா நான்கு.

இவ்விதழ் தமிழரசுக் கழகக் கொள்கைகளை நாட்டிலே பரப்புவதற்குத் தோன்றியது. தமிழன்பர்கட்குப் பயன் படக்கூடிய பல கட்டுரைகள் இதில் வெளியாயின. தமிழன் குரல் என்னும் பெயருக்கேற்பத் தமிழ்மக்களின் எண்ணத்தையும் வெளிப்படுத்துவதாய் விளங்கியது. (சகக)

## 336. தமிழ் மன்னன் - 1954

பார்வைக்குக் கிடைத்தது: பவனி 1. காட்சி 1. சய ஆண்டு ஐப்பசித் திங்கள் (1954)

ஆசிரியர்: ராசரிஷி அர்த்தநாரீச சர்மா. ஆசிரியரால் தர்மபுரி இராமா பிரிண்டிங் அச்சுக்கூடத்தில் அச்சிடப் பட்டுத் தர்மபுரியில் வெளியிடப்பட்டது.

அளவு: 24 × 10 செ. மீ., பக்கங்கள் 40. தனியிதழ் அணா ஆறு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஐந்து.

ஆசிரியர் இவ்விதழின் கொள்கையை, "மொத்தமாய்ச் சொல்லுமிடத்துக் காங்கிரஸ் கட்சியை ஆதரித்தும் கள்ளை விடுத்துக் கதரையுடுக்கச் சொல்லியும், தமிழ்மக்கள் இறைவன் பற்றையும் மதப் பற்றையும் மறவாதிருக்கத் தூண்டியும், அரசியலாரின் ஐந்தாண்டுத் திட்டங்களைப் போற்றியும், ஆட்சிக்கெதிரிடையாய் நிற்கும் உட்பகைஞர்களாகிய கம்யூனிஸ்டுகளையும் கழகப் போக்குகளையும் கண்டித்துத் தமிழ்மன்னன் தொண்டாற்றிக் கோலோச்சுவான்" என்று குறிப்பிட்டுள்ளார். எவ்வளவு காலம் மன்னன் தொண்டாற்றினன் என்பது விளங்கவில்லை. (சசுஉ)

## 337. ஆசிரியன் - 1955

பார்வைக்குக் கிடைத்தது: புதுக்குரல் 3. 1955 ஆம் ஆண்டு ஆனித் திங்கள் 30 ஆம் நாள்.

ஆசிரியர்: பண்டிதர் க. யோ. பெ. சூசைநாதன். யாழ்ப்பாணம் பெரியதெரு புனிதபிலோன்ஞ அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $21\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 32. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று.

இவ்விதழ் இலங்கைத் தமிழாசிரியர் சங்கத்திலிருந்து வெளியாகியது. ஆசிரியர்களின் கடமைகளைக் காட்டுவதற்கும், உரிமைகளை உணர்த்துவதற்கும், பண்புகளைப்

பரப்புவதற்கும், தாய்மொழியைக் காப்பதற்கும், கலாசாரத்தை வளர்ப்பதற்கும், அல்லல்களை எதிர்ப்பதற்கும், பயிற்றும் முறையைப் போதிப்பதற்கும், நேர்மையை நிலைநிறுத்துவதற்கும், செய்திகளைத் தெரிவிப்பதற்குந் தோன்றிப் பணிபுரிந்தது. (சகூரு)

## 338. கலாவல்லி - 1955

பார்வைக்குக் கிடைத்தது: மாலை *1*. மலர் *1*. *1955* ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் வெளிவந்தது.

ஆசிரியர்: பி. எம். கண்ணன். சென்னை நேஷனல் ஆர்ட் அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பட்டது.

அளவு. $20\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் *64*. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று. தனியிதழ் விலை அணு நான்கு.

"நாடும் மக்களும் வளர, வாழ, நல்ல கதைகள் வேண்டும். கதைகள் மூலமாகவே சிறந்த கருத்துக்களைச் செப்பனிட்டுத்தரலாம், வாழ்வை வளம்படுத்தலாம், பண்பாட்டைப் பசுமையாக்கலாம். இந்த நற்கருத்தைத் தாங்கி இன்று கலாவல்லி பணியாற்ற முன்வருகிருள். மக்கள் பணிக்காக, மக்கள் மகிழ்ச்சிக்காக, மக்கள் வாழ்வுக்காகக் 'கலாவல்லியை' இம் மாநிலத்தாயின் திருவடிகளில் சமர்ப்பிக்கின்றோம்" என்று ஆசிரியர் தம்முடைய நோக்கத்தைக் கூறியுள்ளார். ஆயினும் இதழ் விரைவிலேயே தளர்ச்சியடைந்து போயிற்று. (சகூச)

## 339. கல்விக்கதிர் - 1955

பார்வைக்குக் கிடைத்தது: கதிர் *1*. இதழ் *9*. *1-11-1955*.

ஆசிரியர்: ஆர். பி. கந்தசாமி. ஆசிரியரால் தென்னுறுகாடு மாவட்டத்தில் உள்ள ரிஷிவந்தியம் தங்கம் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 20 × 13½ செ. மீ., பக்கங்கள் 64. ஆண்டுக் கையொப்பம் ரூபா 1-10-0.

இவ்விதழின் நோக்கம் கல்விக்காக உழைக்க வேண்டு மென்பது. இந்தி, இங்கிலீஷ் முதலிய பிறமொழிகட்கும் சிறிது நாள் உழைத்து மறைந்து போயது. (சகூ)

## 340. திராவிடன் குரல் - 1955

பார்வைக்குக் கிடைத்தது : எழுச்சி 1. குரல் 3. 1955 மார்ச்.

ஆசிரியர் : எம். எஸ். மணி. எஸ். எஸ். தேவனூல் மயிலாப்பூர் காமன்வெல்த் அச்சகத்தில் அச்சிட்டு வெளி யிடப்பட்டது.

அளவு : 23 × 19 செ. மீ., பக்கங்கள். தனியிதழ் விலை அணா நான்கு.

இவ்விதழ் ஈ. வெ. ரா. பெரியாரின் அடிச்சுவட்டிற் சென்று திராவிடக் கழகக் கொள்கையை நாடெங்கும் பரப்புவதற்குத் தோன்றியது. எழுத்துச் சீர்திருத்தத் திலும் முன்னணியாகி லை எழுத்துப் போன்றவைகளை (லை) ஆக்கிவிட்டது. (சகூ)

## 341. மர்மக்கதை - 1955

பார்வைக்குக் கிடைத்தது : இதழ் 15. 1955 நவம்பர்

ஆசிரியர் : சிரஞ்சீவி. அதிபர், அரு. இராமநாதன். உதவி ஆசிரியை சுகுமாரி. சென்னை கோடம்பாக்கம் ஆர்க்காடு ரோடில் உள்ள பிரேமா ஆர்ட் பிரிண்டர்ஸில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 20 × 13 செ. மீ., பக்கங்கள் 80. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறு. தனியிதழ் அணா எட்டு.

இவ்விதழ் திடுக்கிடக் கூடிய நிகழ்ச்சிகள் நிறைந்த கதைகளையும், எதிர்பாராத நிகழ்ச்சிகள் அமைந்த கதைகளையும் வெளியிட்டுப் படிப்பவர்களைத் திகைக்கச் செய்ய வேண்டுமென்னும் நோக்கத்தோடு தோன்றி புத்தகைய கதைகளை வெளியிட்டுச் சில ஆண்டுகள் உலாவியது.

(௩௪௱)

## 342. திங்கள் - 1956

பார்வைக்குக் கிடைத்தது: ஆண்டு 1. மாதம் 5. துன்முகியாண்டு வைகாசித் திங்கள் (1956 மே).

ஆசிரியர்: டி. வி. இராமநாத். ஆசிரியரால் சென்னை ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு இராமநாத் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: $18 \times 12\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 120. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறு. தனியிதழ் அணா எட்டு.

இவ்விதழ் உயரிய கதைகளையும் கட்டுரைகளையும் மக்கட்கு வழங்கவேண்டும் என்னும் நோக்கத்தோடு தோன்றியது. நோக்கத்திற்கு இணங்கப் பல சிறந்த கட்டுரைகள் இதழை அழகு செய்தன. தி. சு. அவிநாசி லிங்கம், இராஜாஜி, டாக்டர் எஸ். இராதாகிருட்டிணன் முதலிய பலர் இவ்விதழில் கட்டுரைகள் எழுதினார்கள்.

(௩௪அ)

## 343. நல்வாழ்வு – 1956

பாாவைகருக கிடைதததது: மலா 1. இதழ 4. (ஆகஸ்ட் 1956)

ஆசிரியர்: சீதாலட்சுமி குமாரசாமி. ஆசிரியரால் தண்டையார் பேட்டை சான்ஸிராணி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

ராயல் அளவுப் பக்கம் 60. தனியிதழ் அணா எட்டு. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஆறேமுக்கால்.

யோகாசன முறைகளின் மூலமே நோய்களை யெல்லாம் போக்கி மக்களுக்கு நன்மை புரிய வேண்டுமென்னுங் கொள்கையோடு தளராதுழைத்த குமாரசாமி அவர்களின் வாழ்க்கைத் துணைவியாரை ஆசிரியராகக் கொண்ட இவ்விதழ் மேலும் அத் துறையிலேயே அழுத்தமாகப் பணிபுரியத் தொடங்கியது. மக்கள் இவ்விதழின் பெருமையை நன்குணர்ந்து போற்றுமையால் விரைவாகவே மறைந்து விட்டது. (சகசக)

## 344. துறவி - 1956

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 12. மன்மத ஆண்டு மார்கழித் திங்கள்.

ஆசிரியரும் வெளியிட்டவரும் சுவாமி சொரூபானந்தா, கீழ்ப்பாலூர். திருவண்ணுமலை ஜயலட்சுமி அச்சகத்தில் ந. வேணுகோபாலனுல் பதிப்பிக்கப்பட்டது.

டிம்மியளவுப் பக்கம் 16. தனியிதழ் அணு 3. ஆண்டுக் கட்டணம் ரூபா இரண்டு.

தமிழ்நாட்டு வேதாந்த மடங்களில் உள்ள துறவிகளின் முன்னேற்றத்தை நாடி இவ்விதழ் தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கத்தில் இருந்து வெளியாகியது. நூற்பொருள் பலவற்றை விளக்கிய இவ்விதழ் பிறகு போதிய முயற்சி யின்மையாலும் ஒற்றுமைக் குறைவாலும் நின்று போயது. (சஎ0)

## 345. ஐக்கியபோதினி - 1957

பார்வைக்குக் கிடைத்தது: சிலம்பு 1. பரல் 5. பிரபவ ஆண்டு ஐப்பசித் திங்கள் கசஉ (1-11-1957)

ஆசிரியர்: சி. கந்தசாமி குப்தா. திருநெல்வேலி சந்திப்பு கணேசன் பிரிண்டிங் அச்சகத்தில் அச்சிட்டுத் திசையன்விளை ஐக்கிய நாணய யூனியனில் இருந்து வெளியிடப்பட்டது.

*அளவு: 22 × 14 செ. மீ., பக்கங்கள் 10. தனியிதழ் அணு ஒன்றரை. ஆண்டுக் கையொப்பம் ரூபா ஒன்று.*

*இவ்விதழ் தொழிலாளர்களின் ஒற்றுமையைக் கருதி வெளியிடப்பட்டது. தொழிற்சங்கங்களின் கூட்டம் செயல் முறை முதலிய பல செய்திகள் இதில் வெளிவந்தன.*

*(சஎக)*

## 346. தீனுல் இஸ்லாம் – 1957

*பார்வைக்குக் கிடைத்தது: மறை 1. பாடம் 7. முஹர்ரம் 1377.*

*ஆசிரியர்: மௌல்வி கதீப் எம். கே. எம். மன்சூர் நூரி. கொழும்பு ஆதஞ அச்சகத்தில் அச்சிட்டு வெளிப் படுத்தப்பட்டது.*

*அளவு: $21\frac{1}{2} \times 14$ செ. மீ., பக்கங்கள் 40. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்றரை. தனியிதழ் முப்பது சதம்.*

*இவ்விதழ் முஸ்லீம் மக்களின் சிறந்த திங்களிதழாக வெளிவந்துலாவியது. ஈழத்திலே இஸ்லாம், வழிகாட்டும் வள்ளல் நபி, இஸ்லாம் வளர்த்த பண்பாடு முதலிய சமயக் கட்டுரைகள் இவ்விதழில் வெளிவந்தன.* *(சஎஉ)*

பகுதி அ

## மூன்று திங்களுக்கு ஒருமுறை
(1897—1945)

### 1. ஆரிய தூதன் - 1897

*பார்வைக்குக் கிடைத்தது : மலர் 1. இதழ் 1. ஏவிளம்பி ஆண்டு வைகாசித் திங்கள் (1897 மே)*

*ஆசிரியர் : பெயர் தெரியவில்லை. காஞ்சிபுரம் எஸ். கே. பி அச்சகத்தில் எம். இராமச்சந்திரம் என்பவரால் அச்சிட்டு வெளியிடப்பட்டது.*

*இதழின் முகப்பில் மாதிரி இதழ் என்று போடப் பட்டுள்ளது. தனியிதழ் விலையோ ஆண்டுக் கையொப்பத் தொகையோ தெரியவில்லை.*

*அளவு : 43 × 28 செ. மீ., பக்கம் 4.*

*ஆரிய சமுதாயத்தின் சிறப்பை வெளியுலகிற்குப் புலப்படுத்துவதற்காகவே இவ்விதழ் தோன்றுகிறது என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். ஆரிய மதத்தின் மேன்மை, ஆரிய நித்யாசாரம், மதுவிலக்கு முதலிய கட்டுரைகள் இவ்விதழில் வெளியாகியுள்ளன. இவ்விதழ் அச்சிடப்பெற்று வெளிவந்து அறுபத்து மூன்று ஆண்டுகளாகின்றன.* (சஎ௩)

### 2. திராவிட கோகிலம் - 1899

*பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 1. சங்கியை 9. சார்வரி ஆண்டு வைகாசித் திங்கள் (1900 ஜுன்)*

*ஆசிரியர் : பெயர் தெரியவில்லை. யாழ்ப்பாணம் விவேகாநந்தா' அச்சகத்தில் அச்சிட்டு எம். சதாசிவம் பிள்ளையால் வெளியிடப்பெற்றது.*

அளவு : 43 × 28 செ. மீ., பக்கங்கள் 4. ஆண்டுக் கையொப்பம் ரூபா இரண்டரை.

திராவிட கோகிலம் என்றால் தமிழ்க் குயில் என்று பொருள். யாழ்ப்பாணத்தில் அக்காலத்தில் வெளியான இதழ்களெல்லாம் பாதித் தமிழும் பாதி ஆங்கிலமுமாக வெளியாயின. இவ்விதழும் அவ்வாறே வெளியாகியது. பல வகையான செய்திகளையுங் கொண்டது. (சஎச)

## 3. சந்து வர்த்தமானசாரம் - 1901

பார்வைக்குக் கிடைத்தது : இதழ் சம்புடம் 1. இலக்கம் 3. 1901 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள்.

ஆசிரியர் : திவான் பகதூர் டி. வி. கிருட்டிணமாச்சாரியார். சென்னை சீவ இம்சை நிவாரண சங்கத்தாரால் வேப்பேரி எஸ். பி. சி. கே. அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

ராயல் அளவுப் பக்கம் எட்டு. கையொப்ப விவரங் குறிக்கப்படவில்லை.

இவ்விதழின் நோக்கம் வாயில்லா உயிர்களான ஆடு மாடு குதிரை கழுதை முதலியவைகளிடத்தில் அன்போடு நடந்து கொள்ளவேண்டுமென்று மக்கட்கு அறிவுறுத்துவதாகும். உயிர்களிடத்தில் இரக்கங் கொள்ளத்தக்க கட்டுரைகள் பல இதிற் காணப்படுகின்றன. நாயின் நன்றியைப் பற்றிய கட்டுரைகளும் உள்ளன. ஆங்கிலத்திலுஞ் சில கட்டுரைகள் வெளியாயின. ஏறக்குறையப் பத்தாண்டு கட்குமேல் இவ்விதழ் நடைபெற்றதாகத் தெரிகிறது. (சஎரு)

## 4. இந்து மதாபிமானி - 1910

பார்வைக்குக் கிடைத்தது : புத்தகம் 2. இலக்கம் 14.

ஆசிரியர் : பெயர் தெரிவில்லை. ஏ. வி. தியாகராச தீட்சிதரால் சென்னைத் தங்கசாலைத் தெருவில் ஸ்டார் ஆப் இந்தியா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு: 43 × 32 செ. மீ., பக்கங்கள் 4. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்றரை.

இவ்விதழ் இந்து சமயத்தினர்க்கு வேண்டிய செய்திகளை வெளியிடற்குத் தோன்றியது. (சஎகூ)

## 5. தமிழ்க் கழகப் பத்திரிகை - 1919

பார்வைக்குக் கிடைத்தது: முதல் இதழ். காளயுக்தி ஆண்டு (1919).

இது பல பேர்களை ஆசிரியர்களாகவும் பதிப்பாளர்களாகவுங் கொண்டு சென்னைத் தமிழ்க் கழகத்தினின்றும் வெளியாகியது. காக்ஸ்டன் அச்சகத்தில் பதிப்பிக்கப் பட்டது.

அளவு. 21 × 14 செ. மீ., பக்கங்கள் 48. விலை குறிக்கப்படவில்லை.

தமிழ்க் கழகத்தின் வரலாறு திருவள்ளுவர் வரலாறு முதலிய கட்டுரைகள் இவ்விதழிற் காணப்பெறுகின்றன. (சஎஎ)

## 6. சித்திரம் - 1925

பார்வைக்குக் கிடைத்தது: தொகுதி 1. இதழ் 4. (1925 நவம்பர்த் திங்கள்)

ஆசிரியர்: பெயர் தெரியவில்லை. கொழும்பில் இருந்து வெளிவந்தது.

அளவு: $21\frac{1}{2} \times 13\frac{1}{2}$ செ. மீ., பக்கங்கள் 32.

கொழும்புச் சைவர்களின் நிலை, சிவகாருண்யம், பத்தினிப் பெண்டிர், பஞ்சபோத கணிதம், ஆன்ம போதம் முதலிய பல கட்டுரைகள் இதழில் வெளியாகியுள்ளன. (சஎஅ)

## 7. கிராமபோதினி – 1928

பார்வைக்குக் கிடைத்தது: மலர் 1. இதழ் 3, 4. விபவ ஆண்டு. (மே 1929)

ஆசிரியர் : டாக்டர் சு. கி. இராமலிங்கம் பிள்ளை. தென்காசி மீனாட்சி அச்சக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அளவு : 21 × 14 செ. மீ., பக்கங்கள் 32. தனியிதழ் அணா இரண்டு. ஆண்டுக் கையொப்பம் அணா எட்டு.

இவ்விதழின் நோக்கத்தைப்பற்றி ஆசிரியர், "கோழை படாத மொழிச் செல்வத்தை விருத்திசெய்ய வேண்டுமென்று தோன்றியது" எனக் கூறியுள்ளார். (௬௯)

## 8. தமிழ்த்தாய் - 1935

பார்வைக்குக் கிடைத்தது : மாலை 2. மலர் 1. கொல்லம் ௧௧௧௧ ஆம் ஆண்டு ஆவணித் திங்கள்.

ஆசிரியர் : இ. மு. சுப்பிரமணிய பிள்ளை. சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தாரால் திருநெல்வேலி மீரானியா அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

டிம்மியளவுப் பக்கம் 32 தனிப்படி கால் ரூபா. ஆண்டுக் கட்டணம் உறுப்பினருக்கும் மாணவருக்கும் ரூபா அரை. அயல் நாட்டு உறுப்பினருக்கும் பிறருக்கும் ரூபா ஒன்று. தமிழ்வளர்ச்சியை முதன்மையான நோக்கமாகக் கொண்டது. (௭௰)

## 9. தமிழ் விளக்கு - 1945

பார்வைக்குக் கிடைத்தது : தொகுதி 2. பகுதி 1. விய ஆண்டு ஆனித் திங்கள்.

ஆசிரியர் : இராம. சுப்பிரமணிய நாவலர். தக்கலை பதுமநாபபுரம் வி. எம். அச்சகத்தில் செந்தமிழ் நிலையத்தாரால் அச்சியற்றி வெளியிடப்பட்டது.

அளவு : $17\frac{1}{2} \times 12$ செ. மீ., பக்கங்கள் 98. ஆண்டுக் கையொப்பம் ரூபா மூன்று தனியிதழ் விலை ரூபா ஒன்று.

இது தமிழ்வளர்ச்சியை நாட்டில் மிகுவிப்பதற்காகத் தோன்றிய இதழ். (௭௧)

# இதழ்களின் பெயர் அகரவரிசை

[எண் : பக்க எண்]